உ

# விவாஹ வாழ்த்து

உபநயன விவாஹாதி மந்த்ரார்த்தம்

## (நாற்பது ஸம்ஸ்காரங்கள்)



வைதிக தர்மவர்த்தினீ ப்ரசுரம்

விலை ரூ. 3.

॥ ஸ்ரீ: ॥

# நாற்பது ஸம்ஸ்காரங்கள்

[ கர்ப்பாதானம் முதலான ஸம்ஸ்காரங்களின் உட்கருத்தும், மந்த்ரார்த்தங்களும், தெளிவாக ப்ரயோகத்துடன் விளக்கப்பட்டு, புண்யாஹவாசனம், முகாந்தம், ஜயாதி ஹோமம், நாந்தீ ச்ராத்தம் வைதிக பரிபாஷை விளக்கம் ஆகியவைகள் அடங்கிய அனுபந்தத்துடன் கூடியது.]

ஆசிரியர் : ஸ்ரீவத்ஸ வே. ஸோமதேவ சர்மா

ப்ரசுரம் :

கீலக ஸு ஆனி மீ

"வைதிக தர்ம வர்த்தினீ"

2, ஸ்டேஷன் ரோட், சென்னை-33.

விலை ரூ. 3-00

2-வது பதிப்பு— ஜூலை 1968

## ப்ரசுரகர்த்தரின் ப்ரார்த்தனை

கோடிக்கணக்கான ஆஸ்திக கன, தனவான்கள் இருக்கும் இப்பாரத பூமியில், ப்ராம்மண ஸமூஹத்திற்கு இன்றியமையாத "நாற்பது ஸம்ஸ்காரங்கள்" என்ற இப்புத்தகத்தை ப்ரசுரித்து, ஸ்ரீ பரமாசார்யாளின் அனுக்ரஹ ரூபமான ஸ்ரீ முகமும் பெற்றது எங்கள் பெரும் பாக்யமே.

எங்கள் சிற்றறிவிற்கு எட்டிய வரையில், பற்பல அபூர்வ விஷயங்களைச் சேகரித்து, குறைந்த விலையில், 170 பக்கங்கள் ப்ரசுரம் செய்திருக்கிறோம். ஒவ்வொருவரும் இதை வாங்கிப் படித்து அனுஷ்டித்து அதனால் இஹ, பர ச்ரேயஸ்ஸை அடைய வேண்டும் என்பதே எங்களுடைய அந்தரங்க அபிப்பிராயம். இதில் ஏதாவது பிழைகளோ, இன்னும் சேர்க்கவேண்டிய விஷயங்களோ இருந்தால், அதை அன்புடன் அறிவித்தால், அடுத்த ப்ரசுரத்தில் நன்றியுடன் பயன்படுத்திக் கொள்ளுகிறோம்.

காரியதர்சி

வைதிக தர்ம வர்த்தினீ.

லக்ஷ்மி விஜயம் பிரஸ், 2, பைகிராப்ட்ஸ் ரோடு, சென்னை-5.

॥ श्रीः ॥

श्रीमत्परमहंस परिव्राजकाचार्यवर्य
श्रीमच्छंकर भगवत्पाद प्रतिष्ठित
श्रीकाञ्ची कामकोटि पीठाधिप जगद्गुरु
श्रीमच्चन्द्रशेखरेन्द्र सरस्वती श्रीपादैः

श्रीवत्स सोमदेवशर्मणे क्रियते नारायण स्मृतिः ॥

தங்களால் கவனத்துடன் தொகுக்கப்பட்டுள்ள "நாற்பது ஸம்ஸ்காரங்கள்" என்கிற புத்தகம் நம் பார்வைக்கு வைக்கப்பட்டுள்ளது. இப் புத்தகத்தில் மனிதர்களின் ச்ரேயஸ்ஸுக்கு அஸ்திவாரமாக அமைந்துள்ள ஸம்ஸ்காரங்கள் நன்கு விளக்கிக் காட்டப்பட்டுள்ளன. ஆஸ்திகர்களில் அனேகர் "முக்யமாய் அனுஷ்டிக்க வேண்டிய ஸம்ஸ்காரங்கள் என்ன என்பது நன்கு தெரியவில்லை. அவைகளை விளக்கிக் காட்டும் நூலும் அகப்படவில்லை. அத்தகைய புத்தகம் கிடைத்தால் நல்லது" என்று நினைத்துக்கொண்டிருக்கிறார்கள். அப்பேர்பட்ட ஆஸ்திக ஜனங்களுக்கு இப்புத்தகம் மிகவும் ப்ரயோஜனப்படும். அவர்கள் இப்புத்தகத்தை நன்கு படித்து, அந்தந்த ஸம்ஸ்காரங்களை அந்தந்தகாலங்களில் அனுஷ்டித்து தூய மனத்தினராகி, ஸகல ச்ரேயஸ்களையும் அடைய வேண்டுமென்று ஆசீர்வதிக்கிறோம்.

| | |
|---|---|
| விஜய யாத்ரா ஸ்தானம்<br>ஸ்ரீகாஞ்சீ க்ஷேத்ரம்<br>விஜய பால்குன பகுள த்விதீயை | நாராயண ஸ்ம்ருதி: |

## இரண்டாம் பதிப்பின் முகவுரை

"அவன் அதிருஷ்டமது, நமக்கு அதிருஷ்டமில்லை" என சொல்லக் கேட்கிறோம்.

திருஷ்டம், அதிருஷ்டம், திருஷ்டா திருஷ்டம் என கர்மா மூவகைப்படும். ஸ்நாநத்தால் உடல் சுத்தமாகி வியர்வை நாற்றமின்றி இருப்பதால் ஸ்நாநம் திருஷ்ட பலன். தாநம் ஹோமம் முதலியன மறு உலகிலும், மறு பிறவியிலுமேயே பலனைத் தருவதால் ஸ்நாந ஹோமாதிகள் அதிருஷ்ட பலன். கண் முன்னேயும் மறுலோக மறு பிறப்பிலும் பலனைத் தருவது விவாஹம் போன்ற கர்மா. அது வாழ்க்கை இன்பம்; கர்மாவைச் செய்வதால் உண்டாகும் மறுபிறவி, மறு உலக இன்பம் தருவதால் அது திருஷ்டா திருஷ்ட பலன்.

ஒரு கர்மாவை நன்கு அர்த்தம் உணர்ந்து செய்தால், அது சிறந்த பலனைத்தரும். பொருளறியாமல் செய்தாலும் பலனுண்டு. விளக்கெண்ணை என அறியாமல் சாப்பிட்டாலும் பேதியாகும். இது பேதியாவதற்காக உட்கொள்கிறோம் என்றறிந்து சாப்பிட்டால் பின்னும் பல முறை பேதியாகும்.

வாத்யார் சொன்னபடி தர்ப்பயாமி என்றிராமல், "இது எதற்காக யாரை உத்தேசித்து ஹோமம், அதனால் வரும் பயன் யாது?" என நன்குணர்த்து செய்தால் அதிக சிறந்த பலனைப் பெறலாம் என்பதைக் கருதி விவாஹாதி மந்திரங்களைப் பொருளுடன் விளக்குவதுடன் தற்காலத்திற்கேற்றபடி சில உதாஹரணங்களையும் காட்டுகிறோம்.

கர்ப்பர்தாநம் என்ற கர்மாவை விதிப்படி அனுஷ்டிக்காததால் கூன், குருடு செவிடு நொண்டி பெற்றோருக்கடங்காத - அவரிடம் பாசமில்லாத குழந்தைகள் பிறக்கின்றன என்பதை லோக உதாஹரணம், வேத மந்திரார்த்தங்களைக் கொண்டு விளக்கப்படுவதைக் காண்க.

"என் அங்கத்திலிருந்து உன் அங்கம், என் மநதிலிருந்து உன் மநம் உண்டாகிறது. ஆதலால் புத்ரன் நமது ஆத்மாவே" இது மந்திரார்த்தம். படம் எடுத்துக் கொள்ளும் போது அதிக வெளிச்சம் கூடாது, இருட்டும் கூடாது. படமெடுத்துக் கொள்வோர் அசையாமல் படம் பிடிப்பவர் கூறும் நியமப்படி நடக்க வேண்டும். அப்படி இருந்தால்தான் படம் நன்கு அமையும்.

ஜீவனில்லாததும் ஸ்வல்ப காலமிருக்கக் கூடியதுமான போடோவிற்கு நியமங்களை கைக்கொள்ள வேண்டும் எனில் ஜீவனுள்ளதும் பலகாலம் வாழ்வதும், பெற்றோரை இம்மையிலும், மறுமையிலும் காப்பதற்கேற்றதுமான புத்ரனுண்டாக நியமங்களை கவனிக்கவேண்டாமா? இப்போது சிலர் எதற்காக இது? பொருளென்ன? என்று வினவும் போது சில உபாத்யாயர் பதில் கூற முடியாதிருக்கும் துன்பத்தை நீக்க மிகச் சிறு நூல்.

தம்பதிகளுக்கும் என்ன செய்கிறோமென அறிவை ஊட்டி இஹ பர பலனைத் தருமிது; அன்றியும் புது தம்பதிகளுக்கு வாழ்த்துக் கூறி, பெயரையும் சிறிது மாற்றி இருக்கிறோம்.

விவாஹ காலத்திலிதை வாங்கி தம்பதிகளுக்கு ஆசீர்வாதம் செய்யுங்கள். ராதா ருக்மிணீ ஸமேதரான பகவான் அருள் சுறக்கும். நம் ஸமூஹ நன்மைக்காகவே அறை நூற்றுண்டுகளாகத் தொண்டு புரியும்

தொண்டன்,

ஸ்ரீவத்ஸ வே. ஸோமதேவ சர்மா.

# பொருளடக்கம்

ஸ்ரீ காஞ்சீ காமகோடி பீடாதிபதி ஜகத்குரு
ஸ்ரீ சங்கர பகவத்பாதாளின் ஸ்ரீமுகம்

அநுபந்தம்



[இவைகளின் விளக்கம்]

# அவதாரிகை

உலகில் இறைவன் விசித்ரமான பல ஸ்ருஷ்டிகளைச் செய்கிறார். இயற்கையாக சில அம்சங்களை அளித்து, செயற்கையால் சிலவைகளைக் கொண்டு நன்மைபெறுங்கள் என, அதற்கேற்ற பொருள்களையும் தந்தருளுகிறார். நமது உடல் வளர்ச்சிக்கு எண்ணெய், உப்பு, சர்க்கரை முதலிய வஸ்துக்கள் மிகமிக முக்கியமானவை. பிறந்த உடல் வளர்ந்து, வாழ, செயற்கையான எண்ணெய் தேய்த்துக் கொள்ளல், மதுரமான ஆஹாரம், உப்பு முதலிய அறுசுவை கலந்த உணவு அருந்தல் முதலியவைகளால் இயற்கையை வ்ருத்தி செய்கிறோம்.

தாய் வயிற்றிலிருந்து பிறந்தபடியே இருக்க இயற்கையே இடம் தருவதில்லை. செயற்கையால் சில மாறுதல்களுடன் சேர்ந்தால்தான் இயற்கையும் பரிமளிக்கிறது. இது சேதன வஸ்துக்களில் மாத்ரமல்ல. அசேதனமான ஜடவஸ்துவிலும் இதைக் காணலாம். சுரங்கத்திலிருந்து எடுத்த தங்கமோ, வைரமோ, கடலிலிருந்து எடுத்த முத்தோ பவழமோ அப்படியே பயன் படுவதில்லை. அதன்மீதுள்ள அழுக்குகளை அகற்றி, கடசல் பிடித்து, மெருகு கொடுத்தால்தான் அது பளபளவென்று ப்ரகாசிக்கின்றது. அழகைத் தருகின்றது நமக்கும்.

அங்ஙனமே, மனிதன் பிறக்கும்பொழுது தனக்குக் காரணமாயிருந்த பீஜ தோஷம், தான் தங்கியிருந்த கர்ப்ப தோஷம் முதலியவைகளுடன் பிறக்கிறான். தோஷங்களை அகற்றும் உபாயம் பல வகை. சிலதை ஜலத்தினால் போக்கலாம். சிலவற்றை மண்ணினால் நீக்கலாம். இப்படி பலவகையான ஶுத்தி ஸாதனங்கள் இருக்கின்றன. முன் சொன்ன பீஜ கர்ப்ப தோஷங்களை நீக்க வேதம் கூறிய கர்மாக்களால்தான் முடியும், மற்றவை எதுவும் பயன்படா.

உடலில் உள்ள அழுக்கை ஜலத்தினால் அகற்று கிறோம். உடலுக்குள்ளே மனதில் தங்கி இருக்கும் மலத்தையும் ஜீவனிடம் உள்ள அவித்யா மலத்தையும் எப்படிப் போக்குவது? காமம், க்ரோதம், லோபம், மோஹம், மதம், மாத்ஸர்யம் இவைகளே மனதிலுள்ள மலம். அடிக்கடி உடல் எடுத்து மரிக்கக் காரணமான கர்மவாஸனையே ஜீவனின் மலம். இந்த மலங்களோ, இவைகளுக்கு இருப்பிடமான மனமோ, ஜீவனோ, நமது கண்களுக்குப் புலப்படுவதில்லை. ஆனால், அவைகளின் தூண்டுதலால் நடக்கும் கார்யங்களைக் கொண்டே அவை களை அறிய வேண்டியிருக்கிறது. நன்கும் அவைகளை அறிறோம்.

கண்ணுக்குத் தெரியாத விஷயங்களை நமக்கு எடுத் துக் காட்டுகிறது வேதம். அதன் கருத்தை விளக்கிக் காட்ட மஹரிஷிகள் ஸூத்ரம் எழுதினார்கள். அந்த ஸூத்ரத்தில் மநோ மலம் ஜீவ மலம் அகல நாற்பது ஸம்ஸ்காரங்களையும் எட்டு ஆத்ம குணங்களையும் மஹரி ஷிகள் கூறுகிறார்கள். மலத்தை அகற்றுவது மாத்ரமல்ல. இவை ப்ரும்மலோகத்தையும் தருகின்றன; மூன்றாவது லோகமான ஸ்வர்க்கத்திலேயே துன்பம் கிடையாது. ஒரே இன்ப மயம். ஏழாவதான ப்ரும்ம லோகத்தில் ஒரே ஆனந்தம்தான். துக்க லேசம் கிடையாது. அந்த ப்ரும்மலோகம் சென்றவர் வேதாந்த க்ஞானமும் பெற்றி ருந்தால் பூமியில் வந்து மறுபடி ஜன்மம் எடுக்கவேண் டாம். அந்த கல்பத்தில் உள்ள ப்ரும்மாவின் உத்யோகம் முடிந்து அவர் பரப்ரும்மத்துடன் இரண்டற ஒன்றாகக் கலக்கும் வரை அவருடன் கூட இருந்து ப்ரும்ம விசாரம் செய்து அவருடன் கூடவே க்ரமமுக்தி அடைவர். அது தான் ப்ரும்மானந்தம் என்பது. அதை அடைவதே நம் நோக்கமாகும்.

இந்த ப்ரும்மலோகம் செல்ல நாற்பது ஸம்ஸ்காரங் கள் ஏணிபோல் இருக்கின்றன. இதைக் கௌதமர் தமது ஸூத்ரத்தினால் விளக்கிக் காட்டுகிறார் :—

**यस्यैते चत्वारिंशत् संस्काराः न च अष्टावात्म गुणाः ।**
**न सः ब्रह्मणः सायुज्य गच्छति ॥**

யாருக்கு இந்த நாற்பது ஸம்ஸ்காரங்கள் இருக்கின்றனவோ, ஆத்ம குணங்கள் எட்டு இல்லையோ, அவர் ப்ருஹ்மாவின் ஸாயுஜ்யத்தை அடைய மாட்டார். ஸம்ஸ்காரமும், குணமும் உள்ளவர் ப்ரும்ம ஸாயுஜ்யம் அடைவர் என்பது திண்ணம்.

ஜீவன் இருக்குமிடத்தை " இதோ " என்று தொட்டுக் காட்டுகிறது வேதம்.

**पद्मकोश प्रतीकाश ँ हृदयंचाप्यधो मुखं ।**
**तस्याः शिखाया मध्ये परमात्मा व्यवस्थितः ॥**

"கழுத்திற்குக் கீழே பன்னிரண்டு அங்குலத்தில், நாபிக்கு மேலே, ஹ்ருதயம் தாமரை மொக்குபோல் இருக்கிறது, அங்கே நீவார நெல்லின் வால்போல் மெல்லியதும், பீத வர்ணத்துடனும், அணுபோல் மிக ப்ரகாசிக்கின்றது. ஜ்வாலை சூழ்ந்து, ஸமஸ்த வஸ்துக்களுக்கும் இருப்பிடமானது அது. அதன் அக்ரத்தில் பரமாத்மா இருக்கின்றார். அவரது நிழலே ஜீவனாக இருந்து இன்ப துன்பங்களை அநுபவிக்கின்றது" என்று பரமாத்மாவையும், ஜீவனையும் விளக்கி, அதை இந்தக் கண்ணால் காண முடியாது என்றும் ஶ்ருதி வர்ணிக்கிறது.

அந்த ஜீவன் கர்ம வசத்தால் உடல் எடுக்கத் தாயின் வயிற்றிலுள்ள கர்ப்பப் பையை அடைகிறது. அதுதான் கர்ப்பாதானம் என்று பெயர். இதுவே நாற்பது ஸம்ஸ்காரங்களில் முதலாவதாம். இது பிறக்கப் போகும் ஜீவனுக்குக்காகத் தந்தை செய்யும் கார்யமாகும். ஒளபாஸன அக்னி ஸாக்ஷியாகவே மந்த்ரங்களைக் கூறி ஹோமம் செய்து, கர்ப்பாதானத்தைச் செய்கிறோம். இந்த நாற்பது ஸம்ஸ்காரங்களைச் செய்த பிறகு இவ்வுடலைத் தீயிலிடுகிறோம். ஆரம்பத்திலும் முடிவிலும் அக்னியே நமக்கு ஸாதனமானது. அந்த அக்னியை இடையிலும், அதாவது ஜீவித்திருக்கும் வரை, நித்யம் ஆராதிக்க வேண்டும். அக்னி இல்லாத ஸம்ஸ்காரமே இல்லை.

இப்படி, ஜீவன் இருப்பிடத்தைக் காண்பித்து, துன்பத்தை அகற்றி, இன்பத்தைப் பெற ஸம்ஸ்காரம் எனும் ஸாதனத்தைக் காட்டிய பின்பும் நாம் துன்பம் அடைகிறோம். துன்பத்தை வெறுக்கிறோம். இன்பத்தை விரும்புகிறோம். ஆனால், அதற்கேற்ற வழியில் மாத்ரம் செல்வதில்லை. நமக்கு உண்டாகும் துன்பத்திற்கு, துன்பத்தை உண்டுபண்ணும் வேறொரு மனிதனோ, நோயோ, ஈச்வரனோ காரணமில்லை. நாம்தான் காரணம். நமது கர்மா தான் முதற் காரணம்.

இந்த நாற்பது ஸம்ஸ்காரங்களே பகவானை ஆராதிக்கும் பூஜையாம். ஸ்வர்க்கமோ, வைகுண்டமோ, கைலாஸமோ, ப்ரும்ம லோகமோ, முடிவில் முக்தியோ பெற இவைகளே சிறந்த ஸாதனங்களாகும்.

**स्वकर्मणा तमभ्यर्च्य सिद्धिं विन्दति मानवः ।**

தன் கர்மாவினால் பகவானை அர்ச்சிக்கும் மனிதன் ஸித்தி அடைகிறான் என்று கீதையில் பகவான் கூறுகிறார். இவைகளில் கல்யாணம், நிஷேகம் முதலியவைகளை ஸகல மதத்தினரும் செய்து கொள்கிறார்கள். ஆனால், அதில் தர்மத்தைப் புகவிட்ட பெருமை நமது ஸனாதன தர்மத்திற்கே தனிச் சிறப்பானது.

**अप्यर्थं कामौ तस्यास्तां धर्म एव मनीषिणः ।**

"அர்த்தமும் காமமும் கூட தர்மமாகவே இருந்தது அறிவுள்ள அரசனுக்கு" என்று கவிகுல திலகமான காளிதாஸன் ரகுவம்சத்தில் கூறுகிறார். கேவல பாஷையை வளர்க்க எழுதிய காவ்யத்தில் கூட தர்மத்தை ஆங்காங்கு வெளியிடுவது நம் தேச கவிகளுக்கும் விசேஷமாக கவிச்சக்ரவர்த்தி காளிதாஸனுக்கும் இயற்கையான குணமாகும் என்பது கவனிக்கத்தக்கது. இத்தகைய உத்தம தேசத்தில், மதத்தில் பிறந்து, உத்தமமான ஸம்ஸ்காரம் என்ற ஸாதனங்களைப் பெற்றதற்கு நாம் பெருமை அடையவேண்டும். அப்படி உணர்ந்து அனுஷ்

டித்த நமது முன்னோர் நித்ய ஆனந்தம் நிறைந்தவர் களாகவும், நோயற்ற உடல் பெற்றவர்களாகவும் வாழ்ந் தனர் என்பது ப்ரஸித்தம்.

தற்சமயம் பெயரளவுக்கு நாம் அந்த ஸம்ஸ்காரங் களைச் செய்கிறோம். அதிலும் பூர்ண ஶ்ரத்தையுடன் இந்தக் கர்மாவை எப்பொழுது செய்யவேண்டும்? இதில் யார் யாரைப் பூஜிக்கின்றோம்? மந்த்ரத்தினால் என்ன கோருகிறோம்? என்பவைகளை உணராமல் செய்கிறோம். ஸந்த்யா காலத்தில் செய்ய வேண்டியது என்பதைக் காட்டவே, கர்மாவிற்கே "ஸந்த்யா வந்தனம்" என்று பெயர் வைத்தது போல், குழந்தை பிறந்தவுடனே (அல்லது புண்யாஹ வாசனத்தன்றுவது) செய்ய வேண்டிய கர்மா என்று காட்டவே "ஜாதகர்மா" என்று அதற்குப் பெயரிட்டார்கள். அந்த ஜாத கர்மாவை நாம் எப்பொழுது செய்கிறோம்? என்று கூட தெரியாத வர் நம்மிடையே இருக்கின்றனர். பெயர் வைப்பது, விதிப்படி ஆஹாரம் அளிப்பது, குடுமி வைப்பது முதலிய எல்லாவற்றையும் உபநயனத்தோடு சேர்த்துச் செய் வதும், சிலர் உபநயனமும் விவாஹத்திற்கு முதல் நாளே நடத்துவதுமே ப்ராம்மண ஸமூகத்திற்கு இழிவைத் தருகின்றன.

ஸமூஹமும், தனிப்பட்டவரும் முன்னேற வேண்டு மானால், காலத்தில் அந்தந்த கர்மாக்களைச் செய்ய வேண்டும். அவைகளை ஶ்ரத்தையுடனும், மந்த்ர அர்த்தங்களை உணர்ந்தும் அனுஷ்டிக்க வேண்டும்.

**यदेव विद्यया करोति श्रद्धया उपनिषदा**
**तदेव वीर्यवत्तरं भवति ॥**

எதை நன்கு அர்த்தம் அறிந்து அனுஷ்டிக்கிறோமோ அதே அதிக வீர்யமுள்ளதாகிறது என்று சாந்தோக்ய உபநிஷத் வர்ணிக்கிறது. அர்த்தம் தெரிந்து ஶ்ரத்தை யுடன் செய்தால் அதிக பலன் என்பதால், அர்த்தம் தெரியாமல் செய்வதற்கும் பலன் உண்டு என்றே ஏற்படு

கிறது. கர்மாக்களைச் செய்யும்பொழுது, வேறிடத்தில் கவனத்தைச் செலுத்தாமலும். வேறு பேச்சு பேசாமலும் செய்தால்தான் அந்தந்த தேவதைகளின் ப்ரஸாதத்தைப் பெறலாம். என்ன செய்கிறோம் என்று தெரியாமலும், ஶ்ரத்தை இல்லாமலும் செய்யும் கர்மாவின் பலனை நாம் அடைவதில்லை. ப்ரும்ம ரக்ஷஸ்கள் கொண்டு போகின்றன. ஆதலால் ஒவ்வொரு கர்மாவையும், அதில் விநியோகமாகும் மந்த்ரங்களின் பொருளையும் உணர்ந்து வேறு கவனமும் பேச்சும் இல்லாமல் செய்தால், கர்மாவின் பூர்ண பலனை அதிகமாக அடைவோம். இதை தெரிவிப்பதற்காகவே, "வைதிக தர்ம வர்த்தனீ" எனும் பத்ரிகையில் "கர்ப்பாதானம்" முதல் ஸம்ஸ்காரங்களை ப்ரசுரித்து வந்தோம். அவைகளைத் திரட்டி, அங்கு காணப்படாத அதிக சில விஷயங்களையும் சேர்த்து ஒரு புஸ்தகமாக வெளியிடுகிறோம். ஸந்த்யா வந்தனத்தைப்போல் இந்த நூலும் ஒவ்வொரு ப்ராம்மணர் வீட்டிலும் இருக்கவேண்டிய சிறந்த பொக்கிஷம். பெண் மக்கள் இதிலுள்ள விஷயங்களை நன்கு தெரிந்து கொண்டால், அவர்கள் ஸந்ததியும் அறிவுள்ளதாகவும், ஶ்ரத்தையும் நீண்ட ஆயுள் உள்ளதாகவும் இருக்கும். ஆதலால், பெண் மக்களும் படிக்கும்படி மிக எளிய நடையில் மந்த்ரார்த்தங்களையும் மற்றதையும் வெளியிடுகிறோம்.

"வைதிக தர்ம வர்த்தனீ" மூலமாக நாம் செய்து வரும் ஸமூஹத்தொண்டை ஒரு சில ஆஸ்திகர்களே அறிந்து ஆமோதிக்கிறார்கள். நமது ஸந்த்யா வந்தன நூலை இரண்டரை ரூபாய்க்குக் கொடுப்பதைக் கண்டு ஆச்சர்யமடைந்த ஒரு பெரிய ஆஸ்திக கனவான், "இது வ்யாபாரிகளால் ப்ரசுரம் செய்யப்பட்டிருந்தால், ஐந்து ரூபாய் விலை வைப்பர். இதிலுள்ள அபூர்வ விஷயத்தைக் கவனித்தால், ப்ரதி ஒன்றுக்கு ஐம்பது ரூபாய் கொடுக்கலாம்" என்றார்.

நம் நோக்கத்தை உணர்ந்து, இந்த நூலை ஒவ்வொருவரும் படித்துப் பயன் பெற்று, பலரையும் படிக்கும்படி

செய்தால், மற்றும் பல இத்தகைய நூல்களை வெளியிடலாம். குழந்தைகளுக்கு உபநயனம், விவாஹம், ஸீமந்தம் முதலிய சுப முஹூர்த்தங்கள் நடப்பதற்கு முன் இந்த நூலை படிக்கும்படி செய்வது பெற்றோர் கடமையாகும். மற்றோரும் இதை வாங்கி, சுப காலங்களில் ஓதியிட்டு, பரிசாக அளித்தால், ஒழிந்தபொழுது இதை அவர்கள் படிக்கக்கூடும். எங்கள் முயற்சி ஸபல மாகும்படி செய்ய நம் அன்பர்கள் முன்வந்து, கர்மாக்களைப் பொருள் அறிந்து செய்து, பிறரையும் அங்ஙனம் செய்வித்து, அரோக த்ருட காத்ரர்களாக வாழ்வார்களாக.

இத்தகைய நூல் இதுவரை எங்கும் வெளிவரவில்லை என்பது மிகையாகாது. நீங்கள் இதைப் படித்தால் மட்டும் போதாது. உங்கள் நண்பர்களையும் படிக்கும்படி செய்ய வேண்டும். ஆஸ்திக ஶ்ரத்தையுள்ள தனிகர் நூற்றுக்கணக்கான ப்ரதிகளை வாங்கி ஏழைகளுக்கு இலவசமாகத் தரவேண்டும்! சுப காலங்களில் இதைப் பரிசாக வழங்க வேண்டும்.

40 ஸம்ஸ்காரங்களும் நமது மலமெனும் இருளை நீக்கி, அப்பப்போது ஒரு ப்ரகாசத்தைத் தருகின்றன. ஒவ்வொரு ஸம்ஸ்காரமும் ஒரு தீப ஜ்யோதிஸ் போலிருக்கிறது. மஹாஜ்யோதி ஸ்வரூபியான அகண்ட ஸச்சிதானந்த பரப்ரும்மத்தில் நம்மை ஐக்கியப்படுத்தும் இவை ஒவ்வொன்றையும் ஒரு சிறிய தீபமாகவும், அகண்ட ஆத்ம ஜ்யோதிஸ்ஸை ஒரு பெரிய தீபமாகவும் சித்தரிப்பது மிகப் பொருத்தமானதல்லவா? 40 ஸம்ஸ்காரங்களையும் அர்த்தம் அறிந்து ஶ்ரத்தையுடன் அனுஷ்டித்தால் ஆத்மானந்த ஜ்யோதிஸ்ஸைப் பெறுவது திண்ணம்.

" தர்மோ ரக்ஷதி ரக்ஷித: "

இங்ஙனம்

**ஆஸ்திகர் அடி பணியும்**

**ஆசிரியர்**

# நாற்பது ஸம்ஸ்காரங்கள்

முதலில் த்விஜன்மாவை ரக்ஷிப்போம்!

**जन्मना ब्राह्मणो ज्ञेयः संस्कारैः द्विज उच्यते।**
**विप्रत्वं विद्यया चापि त्रिभिः श्रोत्रिय उच्यते॥**

பிறப்பினுல் ப்ராம்மணன், ஸம்ஸ்காரங்களால் த்விஜன் எனப்படுகிருன். விப்ர என்பது வித்யையால் உண்டாகிறது. இம்மூன்றும் சேர்ந்தால் ஶ்ரோத்ரியன் எனப்படுகிருன். ப்ராம்மண, க்ஷத்ரிய, வைஶ்ய என்பவர் 'த்விஜர்' எனப்படுவர். இருமுறை பிறப்பவர் என்பது அதன் பொருள். இரு முறை பிறப்பவை பக்ஷியும் பல்லுமாம். இவைகளுக்கும் 'த்விஜ' என்ற பெயருண்டு. பக்ஷி தாய் வயிற்றிலிருந்து முதலில் முட்டையாகப் பிறக்கிறது. பின்னர் குஞ்சாகிறது. பற்களும் ஒருமுறை முளைத்து விழுந்து, இரண்டாம் முறை பிறக்கின்றன. அப்படியே மூன்று வர்ணத்தாரும் தாய் தந்தையிடம் உண்டாகும்போது ஒரு பிறப்பையும், கர்ப்பாதானம், முதலிய 40 ஸம்ஸ்காரங்களால் மற்ருேர் பிறவியையும் பெறுகின்றனர். ஆதலால் 'த்விஜர்' எனப்படுகின்றனர். வேத ஶாஸ்த்ர அப்யாஸத்தால் 'விப்ரன்' ஆகின்ருன். இம்மூன்றும் ஒன்று சேர்ந்தால் 'ஶ்ரோத்ரியன்'. இந்த ஶ்ரோத்ரியனே உயர்ந்தவன், அவன் ஆசையற்றவனுல் மிகமிகச் சிறந்தவன், தைத்திரீய உபநிஷத் கூறும் ஆனந்த ஸோபனத்தில் இவனே முதற்படி. வைஶ்வ தேவத்தில் "அகாமோபஹதாய ஶ்ரோத்ரியாய ஸ்வாஹா" என அவனுக்கு ஒரு ஹோமம் செய்யப்படுகிறது. 40 ஸம்ஸ்காரங்களும் க்ரமமாக செய்யப்படின் ப்ரும்மலோகம் கிட்டும். இவைகள் உடல் மூலமாக உள்ளக் கமலத்திலுள்ள ஜீவனை அடைகின்றன. அந்த ஜீவனே, பரமாத்மாவினிடமிருந்து மாயையால் பிரிக்கப்பட்டவன். அவித்யையால், ஜனன மரணம், ஜரை, சோகமோஹம், பிணி பசி என்பன அவனுக்கு உண்டா

கின்றன. அவித்யை என்ற மலம் அகன்ருல் ஞானம் உண்டாகும். ஞானத்தால் பேரின்பம் பெறலாம். நீண்ட நாளாக களிம்பு நிறைந்த ஒரு பாத்ரத்தைப் பல நாள் சுத்தம் செய்ய வேண்டும். அப்பொழுதுதான் களிம்பு அகன்று ஸ்வபாவ நிறம் உண்டாகும். குடிக்கவும், மற்ற கார்யங்களுக்கும் அப்பொழுதுதான் பயன்படும். உள்ள தோஷத்தை அகற்றுவதே 'ஸம்ஸ்காரம்' எனப்படுகிறது.

அவையாவன: கர்ப்பாதானம், பும்ஸவனம், ஸீமந்தம், ஜாதகர்ம, நாமகரணம், அன்னப்ராஶனம், சௌளம், உபநயனம், நான்கு வேத வ்ரதங்கள், ஸமாவர்த்தனம், கல்யாணம், பஞ்சமஹா யக்ஞம், ஏழு பாக யக்ஞங்கள், ஏழு ஹவிர்யக்ஞங்கள், ஏழு ஸோம ஸம்ஸ்தை என்பன. ப்ராஜாபத்ய, ஸௌம்ய, ஆக்னேய, வைஶ்வதேவ என்பன நான்கு வ்ரதங்கள். பஞ்ச மஹாயக்ஞ மாவது: தேவ யக்ஞம், பித்ரு யக்ஞம், மனுஷ்ய யக்ஞம், பூத யக்ஞம், ப்ரும்ம யக்ஞம் எனப்படும். அஷ்டகா-அன்வஷ்டகா, பார்வணம், ஸ்தாலீபாகம், ஆக்ரஹாயணீ, ஶ்ராவணீ, சைத்ரீ, ஆஶ்வயுஜீ என்பவை ஏழு பாக யக்ஞங்கள். அக்னி ஆதானம், அக்னிஹோத்ரம், தர்ஶபூர்ணமாஸம், ஆக்ரயணம், சாதுர்மாஸ்யம், நிரூட பசுபந்தம், ஸௌத்ராமணி என்ற ஏழும் ஹவிர் யக்ஞங்கள். அக்னிஷ்டோமம், அத்யக்னிஷ்டோமம், உக்த்யம், ஷோடஶீ, வாஜபேயம், அதிராத்ரம், அப்தோர்யாமம் என்ற ஏழும் ஸோம ஸம்ஸ்தை எனப்படும்.

மேற்கூறியவைகளில் கர்ப்பாதானம், பும்ஸவனம், ஸீமந்தம், ஜாதகர்ம, நாம கரணம், அன்ன ப்ராஶனம், சௌளம், உபநயனம், வ்ரதம், ஸமாவர்த்தனம், விவாஹம் இவைகள் பெயரளவில்தான் நடக்கின்றன. அவச்யம் ப்ரதிதினம் செய்யவேண்டிய ஔபாஸனம், வைஶ்வ தேவம் முதலியவைகளையே பலர் செய்வதில்லை. ஸர்ப்ப பலி, சைத்ரீ, ஆக்ரயணீ முதலிய ப்ரதி வருஷமும் செய்யத் தக்கவைகளைச் செய்பவர் அரிது. அக்னி ஆதானம் முதலிய ஶ்ரௌத கர்மா எனப்படும் மூன்று அக்னிகளில் செய்யத்தக்க மற்ற ஸம்ஸ்காரங்களைச்

செய்பவர் கோடியில் ஒருவர். இந்த ஸம்ஸ்காரங்களை அலக்ஷ்யம் செய்ததால் ஆத்ம சக்தியை இழந்தோம். பலவகை துன்பத்தையும் பெறுகிறோம். இவைகளின் பெருமையையும் அவஶ்யத்தையும் முறையே கூறுவோம். அன்பர்கள் படிப்பதோடு மட்டும் நிற்காமல், காலத்தில் அந்தந்த ஸம்ஸ்காரங்களைச் செய்ய வேண்டும். பொருள் உணர்ந்து செய்ய வேண்டும். ஶ்ரத்தையுடன் செய்ய வேண்டும். மந்த்ர, தந்த்ர லோபமின்றி செய்யவேண்டும் இக் கர்மாக்களை வேதம் விதித்தது. தர்ம நூல் விளக்கிற்று. கல்ப ஸூத்ரங்கள் விவரித்தன.

### முதல் ஸம்ஸ்காரம் கர்ப்பாதானம்

ஒரு மரம் நல்ல பழம் அளிக்கவேண்டுமானால், நல்ல விதையை நல்ல நிலத்தில் நல்ல காலத்தில் விதைக்க வேண்டும். 'பருவத்தே பயிர் செய்' என்பர். ஸாதாரண செடி கொடிகளுக்கே இந்த நியமம் வேண்டுமானால், ஆறறிவு படைத்த மனிதனைப் பிறப்பிக்க எவ்வளவு நியமம் வேண்டும்? நற்புத்ரன் உண்டாகி, அவனும் அவன் பெற்றோரும் நன்மை பெற சில விதிகளைக் கூறுகிறது சாஸ்த்ரம். முதல் ஸம்ஸ்காரம் ஒழுங்காக இருந்தால் தான் மற்றவை நன்கு நடைபெறும். 'கர்ப்பாதானம்' எனும் கர்மாவின் பொருளை அடுத்தபடி கூறுவோம். தர்மநூல் கூறுவதுபோல் நடக்கவும் அதன் பெருமையை அறியவும் தர்ம விதியை முதன் முதலில் கவனிப்போம்.

ஸ்த்ரீகள் ருதுவான தினம் முதல் 16 நாட்களுக்குள் தான் கர்ப்பம் தரிப்பார்கள். 2, 4, 6, போன்ற இரட்டைப் பட்ட தினங்களானால் ஆண் ஶிஶுவும், 1, 3, 5 போன்ற ஒற்றைப் பட்ட நாட்களானால் பெண்குழந்தையும் உண்டாகும். இந்த 16 நாட்களிலும், முதல் 4 தினங்களிலும், அமாவாஸ்யை, பௌர்ணமி, அஷ்டமி, சதுர்தஶி, ஏகாதசி, த்வாதசி, ஸங்க்ரமணம், ஜன்ம நக்ஷத்ரம் ஆகிய நாட்களிலும் ஸ்த்ரீ புருஷ ஸங்கமம் கூடாது. ரஜஸ்வலையான முதல் நாள் சண்டாளி. இரண்டாம் நாள் ப்ரும்மஹத்தி செய்தவள். மூன்றும் நாள் வண்

ஞுத்தி எனப்படுவார்கள். நான்காவது நாள் ரஜஸ் ஸம் பந்தம் இருக்கு மாதலின், ஸத் புத்ரனை விரும்புவோர் இந்த 4 தினங்களையும் விலக்கவேண்டும். 4-வது தினத் தில் உண்டாகும் ஶிஶு அல்பாயுஸ் ஆகும். 5-ல் புத்ரீ, 6-ல் மத்யமமான புத்ரன். 7-ல் புத்ரனில்லாப் பெண். 8-ல் அடக்கி ஆளும் புத்ரன். 9-ல் நல்ல புத்ரீ. 10-ல் நற்புத்ரன். 11-ல் அதர்மம் செய்யும் பெண். 12-ல் சிறந்த புத்ரன். 13-ல் வ்யபிசாரியான பெண். 14-ல் தர்மக்ஞு னும் ஆத்மக்ஞானியுமான புத்ரன். 15-ல் நல்ல இடத் தில் வாழ்க்கைப்படும் பெண். 16-ல் ஸகல நற்குணங் களு முள்ள புத்ரன். இப்படி முறையே ஜனிப்பார்கள். புருஷனின் வீர்யம் அதிகமானல் ஆணும், ஸ்த்ரீயின் சக்தி அதிகமானல் பெண்ணும், இரண்டும் ஸமமாயின் நபும்ஸகமும் பிறக்கும். ஆதலின் "உண்டி சுருங்குவது பெண்டிற் கழகு" என்பர்

ருது காலத்தில் ஒரு முறை அவஶ்யம் கர்ப்பாதா னம் செய்ய வேண்டும். இல்லையேல் ஶிஶுவைக் கொன்ற பாபம் உண்டாகும். பித்ருக்களின் கடனை நீக்குவதற்கு ஒரு புதல்வன் அவஶ்யம் வேண்டும். அது வரை ருது ஸங்கமம் அவஶ்யம். புத்ரன் ஜனித்த பின் நிர்ப்பந்தமில்லை. பூர்ண கர்ப்பிணி, இஷ்டமில்லாதவள், ரோக முள்ளவள், விரிந்த கேஶமுள்ளவள், பசியுள்ள வள், அதிகமாக புஜித்தவள் ஆகிய ஸ்த்ரீகளிடம் கர்ப்பா தானம் செய்யலாகாது. ஶுத்தனய், கந்த புஷ்பங் களால் தன்னையும் மனைவியையும் அலங்கரித்து, தீபத்தை அருகில் வைத்துக்கொண்டு, முதல் ஸங்கமமானல் பூணூல் யக்ஞோபவீதமாகவே தரித்து, நல்ல சிந்தை யுடன் ஸங்கமம் செய்யவேண்டும். ஒரே ஸமயத்தில் இருவரும் வஸ்த்ரமில்லாதிருந்தால் தோஷமுண்டாகும். முதல் முறை தவிர மற்ற காலத்தில் பூணூலைப் பின்புரம் மாலை போல் தொங்க விடவேண்டும். முதல் ஸங்கமத் தில் அவஶ்யம் உடனே ஸ்னனம் செய்யவேண்டும். மற்றவைகளில் நன்கு ஶுத்தம் செய்துகொண்டு, ஆச மனம் செய்து விட்டுத் தனிப் படுக்கையில் படுக்க வேண்டும்.

ஸ்த்ரீகள், ப்ரஸவம்வரை புருஷ ஸங்கமம் வேண்டு மென இந்த்ரனிடம் வரம் கேட்டிருப்பதால். அவர்கள் கோரினுல். ருது காலமில்லாதபோதும், அதாவது 16 நாட்கள் சென்ற பின்பும் ஸங்கமம் செய்வது பாபமல்ல. பகலும் இரு ஸந்த்யா காலங்களும் போகார்ஹமல்ல. அச்சமயம் கர்ப்பமுண்டாளுல் முறையே அல்பாயுஸ்ஸாக வும், அஸுர குணமுள்ளதாகவும் ஶிஶு தோன்றும். போக காலத்தில் இருவரும் கண்களை மூடலாகாது. கோபம் துக்கம் முதலியவைகளைவிட்டு, ஸந்தோஷத் துடன் இருக்கவேண்டும். இந்த விதிகளை அனுஸரித்தவர் க்ருஹஸ்தராயினும் ப்ரும்மசர்யத்தைக் கைக்கொண்ட வராவர். அமாவாஸ்யை, பௌர்ணமிகளில் ஸ்த்ரீ ஸங்க மம் செய்தோர் இந்த்ரியத்தை இழப்பர் என வேதம் கூறுகிறது. சாஸ்த்ர விதியை மீறி அதி ஸங்கமம் செய் வோரின் தாது குறையும். ரோக முண்டாகும். செல்வ மழியும். ஸத் கர்மாவும் கெடும்.

இது ஒரு ரஹஸ்ய விஷயம். இதற்குக்கூட சாஸ்த் ரம் கூறுவது அழகோ? என நினைப்பர் சிலர். முக்யமாக கவனிக்கவேணடிய விஷயம் இதுதான். இதில் தவறு செய்தால், அது நமக்கும், பிறக்கப்போகும் ஶிஶுவிற் கும் தீமை செய்ததாகும். ஈ. எரும்பு முதல் ப்ரும்மா வரை அனைவருக்கும் போக இச்சை இயற்கை. இதில் சாஸ்த்ரம் புகுந்து, போகத்திறகும் குறைவின்றி. அதைக் கட்டுப்படுத்தி முடிவில் மோக்ஷத்திற்கும் வழி காட்டு கிறது. சாஸ்த்ரம் இதைக் கேவல போகமாகக் கருத வில்லை. "மாதா பூர்வ ரூபம், பிதா உத்தரரூபம், ப்ரஜை ஸந்திঃ, ப்ரஜனனம் ஸந்தானம்" என்றும், "அரணியைக் கடைந்து அக்னி எடுப்பது போலாம் இது" என்றும் வேதம் கூறுகிறது. பேரின்பத்திற்குச் சிற்றின்பம் வழி காட்டியாம். ஶ்ருங்காரம் கூருத கவியில்லை. புராண மில்லை. வாத்ஸ்யாயனர் தனியே ஒரு நூல் எழுதினுர். கோபிகைகள் கண்ணனிடம் காட்டியது ப்ரேம பக்தி. குறித்த நல்ல நாளில் ருது கமனம் செய்தால், அங்கபங்கமின்றி, நல்லறிவு, நற்செயல், நல்லெண்ண

முள்ள குழந்தை பிறக்கும். த்ருதராஷ்ட்ரனின் தாய், ஸங்கமகாலத்தில் கண்களை மூடிக்கொண்டிருந்ததால் அவன் குருடனாகப் பிறந்தான். திதி என்பவள் ஸந்த்யா கால ஸங்கமத்தால் அஸுரரைப் பெற்றாள்.

ஒரு அரசனுக்குக் கர்ப்பாதானம் செய்ய நாள் இது ஸரியல்ல, அது ஸரியல்ல என்றார் புரோஹிதர். ஆனால் அவரோ அந்த விதியை மீறி ஸங்கம் செய்தார். அவரை அழைத்து அரசன், "எனக்கு மாத்ரம் நல்ல நாள் கிடைக்கவில்லையோ" என்றான். புரோஹிதர், கூன். குருடு, செவிடு, ஒற்றைக்கண், திக்குவாய், குருபீ முதலிய தனது புத்ரர்களை அழைத்து அரசன் அருகே நிறுத்தி, "வேந்தே, விதியைத் தழுவாததின் பயன் இவை. இத்தகைய புத்ரர் வேண்டின் நாள் பார்க்க வேண்டாம்" என்றார். அசேதனமான படம் பிடிக்க எவ்வளவு நியமம்? நடுப்பகலோ, நடுநிசியோ, அதிக வெளிச்சமோ இருட்டோ கூடாது! அசைந்தாலோ படம் கெட்டுவிடும்! சிரித்த முகத்துடன் இருக்கவேண்டும். "தானே புத்ரனாக மனைவியிடம் பிறக்கிறான். தந்தையின் ஒவ்வொரு அவயவமும் புத்ரன் அவயவமாகிறது" என வேதம் கூறுகிறது.

ஆதலின் சாஸ்த்ர விதியைப் பூர்ணமாகக் கவனித்து நற் புத்ரனைப் பெறவேண்டும். கர்ப்ப வ்ருத்தியைப்பற்றி கர்ப்ப உபனிஷத் முதலியன மிக ரஸமாக விளக்குகின்றன.

### கர்ப்பாதான மந்த்ர அர்த்தம்

கர்த்தா ப்ராதஸ்னானம் செய்து, ஸந்த்யா ஜபம் ஆனபின் ஔபாஸனம் செய்ய வேண்டும். அதன் பிறகு பவித்ர மணிந்து, ப்ராம்மணர்களை வணங்கி, தக்ஷிணையும் தாம்பூலமும் கரத்திலேந்தி, 'அசேஷே' என்ற மந்த்ரம் கூறவேண்டும். வேதியருக்கு யத்கிஞ்சித் தக்ஷிணை அளித்து, ஆரம்பிக்கும் கர்மாவைச் செய்ய நமக்கு யோக்யதை உண்டாகும்படி அருள்புரிய அவர்களை வேண்டு

கிறோம். அவர்கள் 'ததாஸ்து' அப்படியே யோக்யதை உண்டாகட்டும் என அனுக்ஞை தருவர். இதற்கு 'அனுக்ஞை' எனப்பெயர். எந்தக் கர்மாவை ஆரம்பித் தாலும் இதை முதலில் செய்ய வேண்டும். வேதமறிந்த ப்ராம்மணர்களிடம் ஸர்வ தேவதைகளும் வஸிப்பதால், அவர்களுக்குத் தக்ஷிணை கொடுத்து அவர்கள் மூலம் அனுக்ஞை பெறவேண்டும், எல்லோரும் ஸமம் என்ற தப்பான கொள்கை கொண்டு, வேதமே அறியாதவருக் கும், வேதியருக்கும் காலணா, அரை அணா தக்ஷிணை அளிப்பது தவறு. வேதியருக்கு 4 அணாவுக்குக் குறை யாமல் அளிக்கவேண்டும். அனுக்ஞை பெறுவதற்காக அளிக்கும் தக்ஷிணைக்கே 'அனுக்ஞை' எனப் பெயரிட்டு, 'எனக்கு அனுக்ஞை தரவில்லை' என்று கூறுவதும் தவறு. கர்த்தா அனுக்ஞை பெறுகிறானே தவிர, தருகிறானில்லை.

'ஶுக்லாம்பரதரம்' குட்டிக்கொண்டு. ப்ராணாயா மம் செய்து ஸங்கல்பம் செய்கிறோம். ஆரம்பிக்கும் கர்மா விக்னமின்றி நடப்பதற்காக முதலில், (மஞ்சளால் செய்த) விநாயகரைப் பூஜிக்கிறோம்.. த்யானம் முதலிய 16 உபசாரங்களைச் சுருக்கமாகச் செய்து, அவர் முன்னி லையில் கர்ம ஸங்கல்பம் செய்து, விக்னேஶ்வரரை அனுப்பி விட்டு அந்த ப்ரஸாதத்தை தம்பதிகள் தரிப்பர். தேஶ காலங்களைக் கூறி, நக்ஷத்ரத்தில்-ராசியில் பிறந்த இன்ன பெயருள்ள என் மனைவிக்கு ருதுகாலத்தில் உண் டான தோஷம் அகல, போதாயனர் சொற்படி ருது சாந்தி ஜப கர்மா செய்கிறேன் என்பது ஸங்கல்பத்தின் பொருள். தான்யம், அரிசி, எள்ளு இவைகளில் ஒன் றைப் பூமியில் பரப்பி, அதன்மீது தர்ப்பத்தால் தாம ரைப்பூ போல் எழுதி, அதன்மேல் கலஶத்தை வைக்க வேண்டும். கலஶத்தில் நூல் சுற்றி, உள்ளே வாஸனை தூபம் ஏற்றி, தர்ப்பத்தாலாகிய கூர்ச்சத்தை வைத்து வ்யாஹ்ருதியைச் சொல்லி ஜலத்தை விடவேண்டும். அதன்மீது மாவிலை, தேங்காய், வருண ப்ரதிமை, கூர்ச் சம் இவைகளை வைக்க வேண்டும். கூர்ச்சம் கர்மாவைக் கெடுக்கும் ராக்ஷஸர்களை அழிக்கும். மாவிலை முதலிய

ஸதுளிர்கள் ர்வ தோஷங்களேயும் அகற்றும். சிவனிட மிருந்து உண்டான முக்கண் உள்ள தேங்காய் பாபத்தை யும் பீடையையும் அகற்றும். இப்பொருள் கொண்ட மந்த்ரங்களேக் கூறி அவைகளே வைக்கவேண்டும். இது வரை கூறப்பட்டவை உதகஶாந்தி, ஷஷ்டி பூர்த்தி, ஶாந்தி முதலிய கலஶ முள்ள ஸகல கர்மாக்களுக்கும் பொதுவாம்.

கலஶத்தில் வருணனே ஆவாஹனம் செய்து அதன் மீது விஷ்ணுப்ரதிமையை வைத்து, அதில் அவரை ஆவா ஹனம் செய்யவேண்டும். '' ருது ஶாந்தி ஜப கர்மாவில் தங்களே ரித்விக்காக (எனக்காக வேலே செய்பவராக) வரிக் கிறேன் '' என ப்ராம்மணர்களே வரிக்கவேண்டும். அவர் கள் கலஶத்தின் அருகில் அமர்ந்து 108 முறை விஷ்ணு காயத்ரீ, வேதாதி, ஆபோ, ஹிரண்ய, பவமான, வருண, விஷ்ணு, ருத்ர, ப்ரும்ம. துர்க்கா, ஸ்ரீ, புருஷ முதலிய ஸூக்தங்களேயும், பஞ்சஶாந்தி, ரிசாம் ப்ராசீ என்ற மஹாமந்த்ரங்களேயும் ஜபிப்பார்கள். சுருக்கமாக இவைகளின் பொருள் :— அந்தந்த தேவதைகளும் பாபத்தை அகற்றி, சுத்தமாக்கி, ஸகல பீடைகளேயும் நீக்கி, இன்பம் அளிக்கட்டும் என்பதாம். ' நமோ ப்ரும் மணே' என்பதை மூன்று முறை ஜபித்து நிவேதனம் செய்யவேண்டும். வருணனேயும் விஷ்ணுவையும் உத்வா ஸனம் செய்து (அனுப்பிவிட்டு) மந்த்ர தீர்த்தத்தினுல் தம்பதிகளே ப்ரோக்ஷிக்க வேண்டும். பத்னிக்கு இந்த கலஶ தீர்த்தத்தினுல் அபிஷேகம் செய்தபின் சுத்த அக் னியில் ஹோமம் செய்யவேண்டும்.

அன்னத்தைப் பலாச இலேயில் வைத்து காயத்ரியைக் கூறி ஹோமம் செய்யவேண்டும் ''ஸவித்ரே இதம் ந மம'' ஸூர்யனுக்கே இது, என்னுடையதல்ல. இதை உத்தேஶ த்யாகம் என்பர். இங்ஙனம் ஹோமங்கள் ஆனபின் அந் தந்த தேவதையைக் குறித்து ''இதம் ந மம'' என்று கூற வேண்டும். விஷ்ணு ஸூக்தத்தினுல் ஸமித்து, ப்ரும்ம ஸூக்தத்தினுல் அன்னம், ருத்ர ஸூக்தத்தினுல் ஆஜ்ய

ஹோமம் செய்து, ருதுவான நக்ஷத்ர வாக்யங்களால் ஸமித்து, அன்னம் ஆஜ்யம் இவைகளை 108 முறை ஹோமம் செய்யவேண்டும், "ஸ்விஷ்டக்ருத்" ஆன பின், உத்தர அங்கமாக ஜயாதி ஹோமம் செய்து உபஸ் தானம் செய்யவேண்டும். ஹோம ஆரம்பத்திற்கு முன் கர்மாக்களைக் கவனிக்க ப்ரும்மாவாக ஒருவரை வரித்து, உபஸ்தானத்திற்கு முன் ப்ரும்ம தக்ஷிணை அளித்து, ஜப ஹோமம் செய்தவர்களுக்கும் தக்ஷிணை தரவேண்டும். பின்னர் ஆஶீர்வாதம். இதுவரை காலை வேலை.

மாலை ஔபாஸநமானபின் இரவில் தம்பதிகள் க்ஷீரான்னம் (பால் சாதம்) உண்டு, பலதானம் செய்து குறித்த லக்னத்தில் முதலில் விக்னேஶ பூஜை செய்து. கர்ப்பாதான மந்த்ர ஜபம் செய்யவேண்டும். ருது ஸமா வேஶன மந்த்ரத்தைச் சிலர் விவாஹத்திலும் கூறுவ தால், ருதுவானபின்தான் விவாஹம் நடந்தது எனச் சிலர் கூறுவர். அதற்குக் காரணம் மந்த்ர அர்த்தம் ஸ்த்ரீ புருஷ ஸங்கம் பற்றி கூறுவதேயாம், அது தவறு. ப்ரும்மசாரி ஸமிதாதான மந்த்ரத்தில் 'நல்ல குழந்தை பிறக்கவேண்டும்' என மந்த்ரம் கூறுகிறான். அந்த மந்த்ரார்த்தத்தைக் கொண்டு ஶாந்தி முஹூர்த்தம் ஆனபின் உபநயனம் எனக் கூறுவது போலாமது.

கர்ப்பாதான ஸமாவேஶந மந்த்ர அர்த்தம் — 'நாம் பலசாலிகளாயிருந்து வெகுகாலம் நீடித்திருக்கும் ரேதஸ் உள்ளவர்களான ப்ரஜைகளை உண்டு பண்ணு வோம். அரணியிலிருந்து கடைந்த அக்னியைப் போல் ஸத்புத்ரன் உண்டாகட்டும். பரமாத்மாவின் அம்சமான நான் பித்ருக்களின் நன்மையை நாடி ஸத்புத்ரனை உண்டுபண்ணுகிறேன். நல்ல வர்ணமும், செல்வமும் உள்ள ஆண், பெண்களைப் படைப்போம். நாம் யாசகர் களுக்கு தனமளித்து மோக்ஷத்தைப் பெறுவோம். நம் உருவம் புத்ரர் பிறப்பதற்கேற்ற சக்தி உள்ளதாக இருக் கட்டும். விஷ்ணு உன்னைக் கர்ப்பாதானத்திற் கேற்ற வளாகச் செய்யட்டும். ப்ரும்மா என் மூலமாக ரேதஸ்

ஸை விடட்டும், 'தாதா' அதை கருவாக்கட்டும். 'த்வஷ்டா' அவயவங்களைச் செய்யட்டும். ஸினீவாலியும் ஸரஸ்வதியும் வஸிக்கும் உன்னிடம் அஶ்வினீ தேவர்கள் கருவை உண்டு பண்ணட்டும். அவர்களைப்போல் அழகாக குழந்தை உண்டாகட்டும். பூமி மழையால் பயிர்களை உண்டுபண்ணுவது போல் நீ நற்குழந்தையைப் பெறு, பூமி அக்னியையும் த்யுலோகம் இந்த்ரனையும், கருவில் வைத்திருப்பது போல் நீ கருவைத்தரி. ஹே, விஷ்ணோ! இவளிடம் 10-வது மாதத்தில் குழந்தையை உண்டு பண்ணு. 'நேஜமேஷ' எனும் ஹே க்ரஹமே! நீ இவளை விட்டு விலகு. இங்கு நீ வர விரும்பினால் புருஷக் குழந்தையுடன் வா. ஹே, மனைவியே, நீ எனது சக்தியை ஏற்று 10 மாதம் கர்ப்பந் தரித்து நற்குழந்தையைப்பெறு, க்ஞாதிகளுக்குள் உத்தமியாக இரு. ஶரமானது பாணப் பெட்டியில் புகுவதுபோல் ஶிஶு உன் கருவில் நுழையட்டும். ஶிஶு, நொண்டி, செவிடு, பிசாச பீடை முதலிய தோஷமின்றி, பூர்ணமாகிப் பிறக்கட்டும். அடுத்து பல புத்ரர்களே பிறக்கட்டும். நீ தேனு போல் இரு. ஹே, வாயே இந்த கர்மாவை ஸித்தி உள்ளதாகச் செய்".

இப்படிப்பட்ட பொருள் கொண்ட மந்த்ரங்களைக் கூறி, விதிப்படி நிஷேகம் நடத்தவேண்டும். மறுநாள் காலையில் நித்யகர்மாக்கள் ஆனபின் நாந்தீ ஶ்ராத்தம் செய்து கார்ப்பாதானம் என்னும் ஸம்ஸ்காரத்தை முடிக்க வேண்டும்.

## பும்ஸவனம்

கர்ப்பம் நன்ருகத் தெரிந்தபின், அது அசைய ஆரப்பிப்பதற்குமுன், 2, 3 அல்லது 4-வது மாஸத்தில் 'பும்ஸவனம்' என்ற ஸம்ஸ்காரம் செய்ய வேண்டும். புருஷக் குழந்தையாகவே பிறக்கவேண்டும் என்பது அதன் பொருள். முன் கர்மாவிற் கேற்றபடி ஆணோ பெண்ணோ பிறக்கும். நமது ப்ரார்த்தனை புருஷ ப்ரஜை வேண்டும் என்பதே. 6 அல்லது 8-வது மாஸத்தில்

செய்யவேண்டியது 'ஸீமந்தோன்நயனம்' எனும் கர்மா. இவ்விரண்டையும் சேர்த்தும் செய்யலாம் என விதி கூறி னதால், தற்சமயம் இரண்டும் சேர்த்தே செய்யப்பட்டு வருகிறது. 'வளைகாப்பு' அல்லது 'பூச்சூட்டல்' என்பது ஶிஷ்டாசார வகையில் வந்து பெண்மக்கள் சேர்ந்து செய்யும் லௌகிக கர்மா. பும்ஸவனம், ஸீமந்தம் இரண் டும் பிறக்கும் குழந்தைக்காகவே என்று சிலர், தாயாருக் காகவே என்று சிலர், இருவருக்கும் சேர்ந்தே என்பது சில ரிஷிகளுடைய மதம். ஒவ்வொரு கர்ப்பத்திற்கும் இவைகளைச் செய்யவேண்டும் என சிலர் மதம்.

உதக ஶாந்தி, ப்ரதிஸரபந்தம் இவைகளை முதலில் செய்யவேண்டும். ருது ஶாந்தியில் கூறியதுபோல் கலஶத்தில் வருணனை ஆவாஹனம் செய்து உதக ஶாந்தி மந்த்ரத்தை ஜபிக்கும்படி ப்ராம்மணர்களை வரிக்கவேண்டும். ருது ஶாந்தி, உதகஶாந்தி, ஷஷ்டி பூர்த்தி ஶாந்தி, (அபிஶ்ரவணம்) ஆகிய இவைகளில் கூறப்படும் மந்த்ரங்கள் தனியாக ஓரிடத்தில் ஒரு ப்ரஶ் னமாக அமைந்தவை அல்ல. ஆங்காங்கு அமைந்துள்ள, பாபத்தை அகற்றி நன்மையைத் தருவதான மந்த்ரங் களைக் கல்ப ஸூத்ரம் சேர்த்துக் கூறுகிறது. அந்த மந்த் ரங்கள் அனைத்தும், நம்மை பீடிக்கும் ராக்ஷஸர் முதலிய வைகளை அகற்றி, நம்மைப் பாவனமாக்கி, இன்பத்தை அளிக்கும்படி கோரும் பொருள் உள்ளவை. புருஷர் களுக்கு அன்ன ப்ராஶனம், சௌளம், உபநயனம், வ்ரதம், ஸ்நானம், விவாஹம், புனர் விவாஹம் முதலியவைகளில் ப்ரதிஸரம், என்ற கங்கணம் கட்டுதல் செய்ய வேண்டும். பும்ஸவனம் ஸீமந்தோன்நயனம், அன்ன ப்ராஶனம் சௌளம், விவாஹம் முதலியவைகளில் பெண்களுக்கு ப்ரதிஸரபந்தம் செய்ய வேண்டும். நமக்கு ரக்ஷையான இதை நாம் கர்மா பூர்த்தியானவுடன் அவிழ்ப்பதில்லை. ஶைஶயர் முதலிய சிலர் விவாஹ காலத்தில் அதைக் கட்டி, விவாஹமானவுடன் அவிழ்த்து விடுகின்றனர். ஸாம வேதிகள் ஶ்ராவணத்தில் ப்ரதிஸர பந்தம் செய்து கொள்வது ப்ரஸித்தம். இந்த ப்ரதிஸர பந்த கர்மாவில் ஜபம் செய்ய ப்ராம்மணர்களை வரிக்கவேண்டும். இதில்

காயத்ரீ, வேதாதி, க்ருணுஷ்வ, அக்னே யஶஸ்வின் (இதில் 4 மந்த்ரம்), ததிக்ரா, ஆபோ, ஹிரண்ய, பவமான, வருண ஸூக்தம், ருத்ர ஸூக்தம், ப்ரும்ம ஸூக்தம், விஷ்ணு ஸூக்தம், துர்கா ஸூக்தம், ஸ்ரீஸூக்தம், இவைகளுடன் நமோ ப்ரும்மணே என்பதை மாத்ரம் மும்முறை ஜபிப்பார்கள். இந்த மந்த்ரங்களும் நமது துன்பத்தை அகற்றி இன்பத்தை ஊட்ட, அந்தந்த தேவதைகளை வேண்டும் பொருளுள்ளவைகளாம்.

வருணனைப் புன : பூஜை செய்து கலஶத்திலிருந்து அனுப்பிட்டு, ஸுரபிமதி, அப்லிங்க மந்த்ரமிவைகளால் ப்ரதிஸரம் எனும் கயிற்றை ப்ரோக்ஷித்து, தேவஸ்யத்வா' என்ற மந்த்ரத்தினுல் கர்த்தாவையும் ப்ரோக்ஷித்து. அக்கயிற்றைக் கையில் எடுத்து, இடதுகை கட்டவிரலாலும் மோதிர விரலாலும் அடியில் பிடித்துக்கொண்டு, வாஸுகியை த்யானம் செய்து வலது கை கட்டவிரல், மோதிர விரல் இவைகளால் 'த்ரியம்பகம்' என்ற மந்த்ரத்தினுல் ஒரு முறையும், மந்த்ரமில்லாமல் இரு முறையும் விபூதியுடன் மேல் முகமாகத் தடவவேண்டும். கர்த்தாவின் இரு கரதலங்களிலும் நிறைய அரிசியை வைத்து அதன் மீது பழத்தையும், அதன் மேல் அந்த ஸூத்ரத்தையும் வைத்து 'அக்னிராயுஷ்மான்' என்ற மந்த்ரம் கூறி அஞ்ஜலியை மந்த்ரித்து, புருஷனுனுல் வலது கையிலும், ஸ்த்ரீயாஞல் இடது கையிலும் கட்ட வேண்டும். பும்ஸவன ஸீமந்த கர்மாவில் ஸ்த்ரீயின் இடது கரத்தில் கட்டவேண்டும். இதைக் கட்டுவதற்கு முன் நவக்ரஹங்களினுல் உண்டாகும் தோஷம் அகலவும் அவர்களின் அருளைப் பெறவும், 'நவக்ரஹப்ரீதி" எனக் கொஞ்சம் தக்ஷிணை அளிப்பது முக்யம். ப்ரதிஸரம் கட்ட 'ப்ருஹத்ஸாம' என்ற மந்த்ரம் கூறவேண்டும். இதன் பொருள் : ' இந்த ஸூத்ர பந்தம் இதைத் தரிப்பவருக்கு ஒரு ரக்ஷையாக இருக்கட்டும்'' என்பதாம். (கற்பூர ஹாரதி ஆனவுடன் புஷ்பத்தினுல் கற்பூர ஜ்வாலையை ப்ரதக்ஷிணமாகச் சுற்றி, ஸ்வாமியின் மீது அந்த புஷ்பம் ஸமர்ப்பிக்கப்படுகிறது இந்த மந்த்ரத்தால்தான்.)

இங்ஙனம், முதல் நாள் அல்லது அன்று காலையில் உதகசாந்தியும் ப்ரதிஸரபந்தமும் ஆனபின், நித்ய கர்மாவை முடித்துக்கொண்டு, தம்பதிகள் ஸ்நானம் செய்து மடி வஸ்த்ரமணிந்து, கால் அலம்பி ஆசமனம் செய்து, பும்ஸவன கர்மாவை ஆரம்பிக்கவேண்டும். காலையில் ஸ்நானம் செய்து ஆசாரத்துடன் இருந்தால் போதும் என இந்தக் கர்மாவிற்காகத் தனியாக ஒரு முறை ஸ்நானம் செய்வதில்லை. கர்மா ஆரம்பத்திலும், புதிய அல்லது மடி வஸ்த்ரம் அணிந்த பின்பும் அவச்யம் கால் அலம்பி ஆசமனம் செய்யவேண்டும். முன் கூறியபடி தம்பதிகள் தக்ஷிணை, தாம்பூலங்களைத் தட்டுடன் எடுத்துக்கொண்டு அசேஷே ஹேபரிஷத்' எனக்கூறி, அவர்களிடம் தக்ஷிணையை அளித்து 'இக்கர்மாவைச் செய்ய எனக்கு யோக்யதை உண்டாகும்படி அனுக்ஞை தாருங்கள்' என வேண்டிக் கொள்ள வேண்டும். 'ததாஸ்து' என அவர்கள் அனுக்ஞை அளிப்பர்.

பிறகு ஸங்கல்பம். பும்ஸவன கர்மாவினால்(பத்னிக்கு) ஸம்ஸ்காரம் செய்கிறேன் என்பது ஸங்கல்பார்த்தம். இந்தக் கர்மாவை ஔபாஸன அக்னியில் செய்யவேண்டும். பும்ஸவன ஸீமந்தோன்நயனம், ச்ராத்தம் முதலியவைகளை ஔபாஸனாக்னியில் செய்யவேண்டும் என விதி. அக்னியில் ஹோமம் செய்யவேண்டிய கர்மாக்களில் எல்லாம் 'முகாந்தம் ' என சுருக்கமாக ப்ரயோகத்தில் கூறப்படும். இதையும் ஜயாதி ஹோமத்தையும் பற்றி பின்னர் கூறுவோம்.

பாத்ர ஸாதனம் செய்யும்போது, இதில் 6 பாத்ரங்களுடன் இரு காய்களுள்ள ஆலங்கொழுந்தையும், அமிக்குழவி, புது வஸ்த்ரம் இவைகளையும் ஸாதனம் செய்ய வேண்டும். 'முகாந்தம்' ஆனபின் धाता (தாதா) என 4 மந்த்ரம் यस्त्वा (யஸ்த்வா) என 4 மந்த்ரமும் கூறி ஹோமம் செய்யவேண்டும். இச்சமயம் பத்னீ கணவனை தார்ப்பையினால் தொட்டுக் கொண்டிருக்கவேண்டும். விதி கூறியவிடம் தவிர மற்றஸமயங்களில் ஒருவரையொருவர் தொடக்கூடாது. (1) ஜகத்பதியான ஈசானன் எங்களுக்

குச் செல்வத்தைத் தரட்டும். அவர் எங்கள் இஷ்டத்தைப் பூர்த்தி செய்யட்டும் धात्रे इदं न मम (2) ப்ரஜையையும் செல்வத்தையும் அளிக்கும் தாதாவே இவ்வுலகைப் படைத்தார். அவரே யஜமானனுக்குப் புத்ரனை அளிப்பவர். அத்தகைய அவருக்கு நெய்யுடன் ஹவிஸ்ஸைத் தருகிறேன். தாத்ரே இதம் ந மம. (3) தாதா எங்கள் முன்னோருக்குத் தந்ததுபோல் எங்களுக்கும் செல்வத்தை ஜீவனத்திற்குப் போதிய அளவு தரட்டும். ஸத்ய தனரான அவரது பக்தாநுக்ரஹ புத்தியை த்யானம் செய்கிறோம். தாத்ரே இதம் ந மம. (4) ப்ரஜையை விரும்பி மனைவியினிடம் கர்ப்பாதானம் செய்த எனக்கு தாதா ஸந்ததியை அளிக்கட்டும். மரணமில்லாத மற்ற தேவர்களும் நம் வீட்டை அண்டி இருக்கட்டும். தாத்ரே இதம் ந மம. இந்த 4 மந்த்ரங்களும் மூன்றும் காண்டம் 3-ம் ப்ரஶ்னம் 11-வது அனுவாகத்தில் தாத்ரு ஹோமத்திற்கு யாஜ்யா புரோனுவாக்யை களாகக் கூறப்பட்டவைகளாகும்.

(1) ஹே அக்னியே! மர்த்யனான நான் மரணமில்லாத உம்மை, ஸ்துதியிலீடுபட்ட மனதோடு அழைக்கிறேன். குழந்தைகளுடன் யான் மரணமில்லாமல் உண்ணும்படி அன்னத்தை அளியும். அக்னயே புத்ரவதே இதம் ந மம (2) ஹே அக்னியே, நற்கர்மாவைச் செய்பவருக்கு ஸுகத்தை அளிக்கின்றீர். அவர் புத்ர பௌத்ரருடன் செல்வத்தையும் அடைகிறார். அக்னயே புத்ரவதே இதம் ந மம. (3) ஹே பலவானான இந்த்ரனே, உம்மிடம் எல்லோரும் விரும்பத்தக்க வஸ்துக்கள் இருக்கின்றன. ஆதலால் உம்மைவிட உயர்ந்தவர் யாருமில்லை. இந்த்ராய புத்ரிணே இதம் ந மம. (4) ஒவ்வொரு ஶஸ்த்ரத்திலும் யஜமானனால் பிழிந்து அளிக்கப்பட்ட ஸோமரஸமானது இந்த்ரனை ஸந்தோஷப்படுத்தட்டும். அவருக்கு ஸமமானவர் கூட தங்களுக்குக் கஷ்டம் வரும்போது இவரையே தந்தையைப்போல் அழைக்கின்றனர். இந்த்ராய புத்ரிணே இதம் ந மம. இந்த 8 ஹோம மந்த்ரங்களிலும் 'ஹவிஸ்ஸை அளிக்கிறேன்' என்பதற்கு அறிகுறியாக ஸ்வாஹா எனக் கூறவேண்டும். 'அவருக்கே இந்த பொருள்

அளிக்கப் பட்டது. என்னுடையதல்ல' என பின்னர் உத்தேசயத்யாகம் கூறுகிறோம். இந்த 4 மந்த்ரங்களும் முதல் காண்டம் 4-ம் ப்ரச்னம் 47-வது அனுவாகத்தில் அக்னிக்கு ஹவிஸ்ஸைத் தரும் யாஜ்யா-புரோனுவாக்யா மந்த்ரங்களாம்.

இக்கர்ம ஸம்ருத்திக்காக ஜயாதி ஹோமம் செய்ய வேண்டும் ப்ருஹ்மாவுக்குத் தக்ஷிணை அளித்து கன்ய கையைக்கொண்டு. ஆலங்கொழுந்தை அறைத்துப் புது வஸ்த்ரத்தில் வைத்து. க்ரஹப்ரீதி செய்தபின் 'பும்ஸுவனமஸி' என்ற மந்த்ரத்தைக் கூறி. கட்டை விரலால் மனைவியின் வலது நாஸிகையில் பிழிய வேண்டும். மனைவியை மேற்கு முகமாக உட்காரவைத்து புருஷன் கிழக்கு முகமாயிருந்து பிழியவேண்டும். 'புத்ரனுக்காக (மூக்கில்) பிழியப்பட்டாய்' என்று மந்த்ரத்தின் பொருள். இதன் பின் புருஷன் ஸங்கல்பம் செய்து, நாந்தீ ச்ராத் தத்தை ஹிரண்ய ரூபமாகச்செய்து புண்யாஹ வாசனம் செய்யவேண்டும். பின்னர், அக்னி உபஸ்தானம் செய்து பும்ஸவன கர்மாவைப் பூர்த்தி செய்கிறோம். பும்ஸவனத் துடன் ஸீமந்தம் சேர்த்தே செய்யப்படுகிறது.

### ஸீமந்தம் அல்லது ஸீமந்தோன்நயநம்

'ஸீமந்தம்' எனும் கர்மாவைச் செய்து கொள்ளும் கர்ப்பிணியின் தலைமயிரை, பன்னிமுள், தர்ப்பை, பேத்திக் கொத்து ஆகியவைகளால் வகுடாகப் பிரிப்ப தால் 'ஸீமந்தோன்நயநம்' என இதற்குப் பெயர் உண்டா னது. இதற்கு உதகசாந்தி, ப்ரதிஸரபந்தம், அப்யுதயம் எனும் நாந்தி இவை பூர்வாங்கமாகும். ஸீமந்தத்திற் காகக் குறித்த நாளில், நித்ய கர்மாவை முடித்துக் கொண்டு, 'அசேஷே ஹே பரிஷத்' என்று இந்த கர்மாவைச் செய்ய நமக்கு யோக்யதை உண்டாக வேண் டும் என அனுக்ஞை பெற்று, விக்னேச்வர பூஜைசெய்து 'ஸீமந்தோன்னயந கர்மாவினால், தர்ம பத்னியை ஸம்ஸ்காரம் உள்ளவளாகச் செய்கிறேன்' என ஸங்கல் பம். (பெண்களுக்கே இந்த ஸம்ஸ்காரமானதால், 'என்

பிள்ளைக்கு ஸீமந்தம்' என தவறுதலாகக் கூறுவதை நேயர் திருத்தவேண்டும்). ஔபாஸன அக்னியை எதிரில் ப்ரதிஷ்டை செய்து 'முகாந்தம்' செய்ய வேண்டும். பாத்ர ஸாதனத்துடன் வகுடு பிரிக்க தர்ப்ப ஸ்தம்பம், பன்னிமுள், பேத்திக்கொத்து, முளையுடன் கூடிய நெல் பயிர் இவைகளையும் ஸாதனம் செய்யவேண்டும். ஆஜ்ய பாகம் ஆனபின், பும்ஸவனத்தில் கூறப்பட்ட 'தாதா' முதல் 'உக்த உக்தே' என்றவரை உள்ள 8 மந்த்ரங்களா லும் ஹோமம் செய்ய வேண்டும். (இவை முன் கூறப் பட்டன.) பிறகு உத்தராங்கமான ஜயாதி ஹோமம், அனுக்ஞாதம் முதலான ப்ராயச்சித்த ஹோமங்கள் ஆன பின், ப்ரும்மாவுக்கு தக்ஷிணை அளித்து அனுப்பிவிட்டு, 'க்ருஹப்ரீதி' செய்து, அக்னிக்குப் பின் புறத்தில் கிழக்கு முகமாக மனைவியை உட்காரவைத்துப் புருஷன் பன்னிமுள் முதலியவைகளைக் கொண்டு கீழ்வரும் அர்த்தமுள்ள இரு மந்த்ரங்களால் வகுட்டைப் பிரித்து, பன்னிமுள் முதலியவைகளைப் பின்னால் எறிந்து விட வேண்டும்.

மந்த்ர அர்த்தம்: முதலில் மூன்று வ்யாஹ்ருதி. பின்னர், 'ராகா' எனும் பூர்ணிமையின் அதிஷ்டான தேவதையை நல்ல ஸ்துதியால் அழைக்கிறேன். ஸௌபாக்யத்தோடு கூடிய அந்த தேவதை என் ஸ்துதியைக் கேட்டு மனதில் நன்கு சிந்திக்கட்டும். இந்த கர்மாவைக் குற்றமற்றதாகச் செய்யட்டும். ஊசி நுனி போல் கூர்மையாய், எங்கும் தடைபடாத புத்தியுள்ள புத்ரனைத் தரட்டும். அப் புத்ரன் பலவகை தானம் செய்பவனாக இருக்கட்டும். ஸுரூபம் வாய்ந்த எந்த ஸுமதியால் யாகம் செய்பவருக்குப் பொருளைத் தருவாயோ அந்த ஸுமதியுடன் எங்களிடம் பலவகை யான புஷ்டியை அளி. (தைத்திரீய ஸம்ஹிதை 3-3-11). பிறகு வீணாகானம் செய்வதாக இரு மந்த்ரங்கள். அவை களின் பொருள்:— ஹே யமுனையே, உனது தீர்த்தத்தில் வஸிக்கும் ஸால்வ தேசத்தினர், பலவகையான ராஜ்ய கார்யத்தைச் செய்துகொண்டு வரும் யௌகந்தரியே எங்கள் அரசன் எனப் பாடுகின்றார்கள். (இதில்

'யமுனேயே' என்பதற்கு பதில் நாம் எந்த நதி தீரத்தில் வஸிக்கின்றேமோ அந்த நதியின் பெயரைக் கூறவேண்டும்). முற்கூறிய கானம் யமுனே நதி தீரத்திலுள்ளவர் பாடுவது எல்லா ப்ராஹ்மண ஸ்திரீகளும் பாடும் பாட்டு இது. அதன் பொருள்:— ப்ராஹ்மண ஸ்த்ரீகள் எல்லோருக்கும் ஸோமனே ராஜா. முனேயுடன் கூடிய நெற்பயிரை ஸூத்ரத்தில் கட்டி, அதைக் கர்ப்பிணியின் ஶிரஸில் கட்டி, நக்ஷத்ரம் உதயமாகும் வரை மௌனமாக இருக்கும்படி செய்ய வேண்டும். நக்ஷத்ர உதயமானபின் கன்றுக்குட்டியைப் பின் தொடர்ந்து, வ்யாஹ்ருதிகளே ஜபித்து கிழக்காவது வடக்காவது சென்று மௌனத்தை விடவேண்டும். பிறகு ஸத்புத்ரன் ஜனிக்கவேண்டும் என உமாமஹேஶ்வரராக, லக்ஷ்மீ நாராயணராக எண்ணி ப்ராம்மணர்களுக்கு 'பலதானம்' செய்து, அக்னி உபஸ்தானம், அக்ஷதை ஆஶீர்வாதத்துடன் ஸீமந்தோன்னயநம் பூர்ணமாகிறது.

### ஜாதகர்ம விவரம்

கர்ப்பாதானம், பும்ஸவனம், ஸீமந்தோன்னயநம் என்பன கூறப்பட்டன. பின்னர், குழந்தை பிறந்தவுடன் செய்யவேண்டியது 'ஜாதகர்மா' என்ற ஸம்ஸ்காரம். ஜாத ...பிறந்தவுடன், கர்மா...செய்யவேண்டிய ஸம்ஸ்காரம் என்று இதன் பொருள். பித்ரு கடன் ஸத்புத்ரன் ஜனித்தவுடன் அகலுகிறது. ஆதலால், அன்றைய தினம் நம் பித்ருக்கள் நமது வீட்டை நாடி வருகின்றனர். தந்தை உடனே ஸ்னனம் செய்து தொப்புள்கொடி அறுப்பதற்குள் நாந்தி ஶ்ராார்த்தம், தானம் முதலியவைகளேச் செய்ய வேண்டும். இரவில் ஸ்னனம், தானம் ஶ்ராத்தம் செய்யக் கூடாதென்பது பொதுவான விதி. இதற்கு மாருக சில ஸமயங்களில் ராத்ரியில் ஸ்னனம், தானம், ஶ்ராத்தம் செய்யவேண்டும் என விஶேஷ விதி கூறுகிறது. புத்ர ஜனனம், யாகத்தில் அவப்ருதம், க்ரஹணம், ஸங்க்ரமணம் ஆகிய இச் சமயங்களில் இரவில் ஸ்னன தானதிகளேச் செய்ய வேண்டும். புத்ர ஜனனமும், யாத்திரையும் இரவில் நேர்ந்தால்

உடனே தானம் செய்ய வேண்டும். அது அழிவில்லாத பயனைத்தரும். இரவில் வீட்டில் ஸ்னானம் செய்ய நேரிட்டால், பகலில் எடுத்துவைத்த ஜலத்தில் ஸ்வர்ணத்தை—தங்க மோதிரத்தை—போட்டு, அக்னி எதிரில் ஸ்நாநம் செய்யவேண்டும். குளிர்ந்த ஜலத்தில் தான் செய்யவேண்டும். பகலானால், குளம் முதலிய தீர்த்தங்களில் கட்டிய வஸ்திரத்துடன் குதிக்க வேண்டும். அப்பொழுது மேலே எழும்பும் தீர்த்தத்தினால் பித்ருக்கள் பேரின்பம் அடைகின்றனர் என்பர்.

தொப்புள்கொடி அறுக்கும்வரை தீட்டு இல்லாத தால் தானம் செய்வதும், தானம் வாங்குவதும் பாப மல்ல. அச்சமயம் ஸ்வர்ணம், பூமி, பசு, தான்யம் முதலி யவைகளைத் தானம் செய்யவேண்டும். ஆசௌசம் அல்லது ஸூதகம் உள்ளவர்களுக்கு க்ரஹண காலத்தில் தீட்டில்லை. பஹிஷ்டா ஸ்த்ரீகள் கூட அப்பொழுது ஸ்னா னம் செய்யவேண்டும். தர்ப்பணமும் தானமும் செய்ய வேண்டும். அதுபோல், நாபிக்கொடி அறுக்கும்வரை தீட்டில்லை. ஏதேனும் அச்சமயம் அசௌகர்யம் இருந் தால் தீட்டுப்போன பிறகு 10 நாள் கழித்து உடனே இந்த ஜாதகர்மாவைச் செய்யவேண்டும். புஜித்தவுடன் ஸ்னானம் செய்யக்கூடாது என்றாலும், புத்ரன் பிறந்த விஷயம் கேட்டவுடன், புஜித்திருந்தாலும் ஸ்னானம் செய்யவேண்டும். அக்னி ஹோத்ரம் செய்பவராயின் ஓர் இஷ்டி செய்யவேண்டும். ஒவ்வொரு வருஷத்திலும் நாம் பிறந்த தினத்தில் பலருக்கு அன்னதானம் செய்ய வேண்டும். அந்தந்த கர்மாவுக்கு ஏற்பட்ட காலத்தில் அது அதைச் செய்தால்தான் பூர்ண பயனுண்டாகும். இந்த கர்மா ஜீவனுக்கு பரலோக ஸாதனம் மாத்திர மல்ல, குழந்தைக்கு ஏற்படக்கூடிய ஸகல அரிஷ்டங்களை யும் அகற்றுகிறது. பாலாரிஷ்டம் வராமல் காப்பாற்று கின்றது. துஷ்ட க்ரஹங்களை அக் குழந்தையின் அருகே வராதபடி அகற்றுகிறது.

ஆதலால், நமது அன்பர்கள் குழந்தை பிறந்தவுடன், அதிலும் ஆண் குழந்தை பிறந்ததும், குளிர்ந்த ஜலத்தில்

ஸ்ஞனம் செய்வதுடன் புண்யாஹ வாசன தினத்தில் ஜாதகர்மாவை அவஶ்யம் செய்யவேண்டும். இப்பொழுதோ ஜாதகர்மா, நாமகரணம், அன்ன ப்ராஶனம், சௌளம் ஆகிய இவைகளை உபநயனத்துடன் ஒன்றுகச் சேர்த்துப் பலர் செய்கின்றனர். அது ஶாஸ்த்ர ரீதியாகத் தவறே ஆகும். அந்தந்த கர்மாவிலும் தனித் தனியாக பித்ருக்களையும் தேவர்களையும் ஆராதித்து அவர்களின் அருளைப் பெறமுடியாமல் போகின்றது அல்லவா? குழந்தைகளின் ஆரோக்யம், நீண்ட ஆயுள், பாலாரிஷ்டம் இல்லாமை இவைகளை விரும்புவோரும் பித்ருக்களின் ப்ரஸாதத்தை வேண்டுவோரும், வைதிக கர்மாவிலும் ஶிஷ்டாசாரத்திலும் அன்புடையோரும் தவறுமல் அந்தந்த காலத்தில் அந்தந்த கர்மாவைச் செய்ய வேண்டுகிறோம். இக்காலத்திலும் சில அன்பர்கள் இங்ஙனம் காலத்தில் கர்மாவைச் செய்து வருவதையும் நேயர்களுக்கு அறிவிக்கின்றோம்.

### ஜாதகர்ம மந்த்ர அர்த்தம்

முன்னம் கர்ப்பாதாஞதிகளில் செய்ததுபோல் தம்பதிகள் அனுக்ஞை, விக்னேஶ்வர பூஜை, ஸங்கல்பம் செய்து பிறகு வாத்ஸப்ரமெனும் திவஸ்பரி என்ற அனுவாக மந்த்ரத்தால் குழந்தையைத் தொடவேண்டும். உபநயனத்துடன் சேர்த்து ஜாதகர்மா செய்வோர் உரிய காலத்தில் அதைச் செய்யாததற்காக ஸர்வப்ராயஶ்சித்தம் செய்யவேண்டும். ப்ராயஶ்சித்த கர்மாவிற்கு ப்ரதிநிதியாக, க்ருச்ரம் என்று கொஞ்சம் ஹிரண்யத்தைத் தானம் செய்து லௌகிகாக்னியில் பூர்வாங்கங்களை முடித்து, வ்யாஹ்ருதியைச் சொல்லி, நெய்யினுல் ஸர்வ ப்ராயஶ்சித்த ஹோமம் செய்ய வேண்டும். வத்ஸப்ர என்ற ரிஷி குமாரர் கண்டு பிடித்ததால் "வாத்ஸப்ரம்" என்று பெயர். அது தைத்திரீய ஸம்ஹிதை 4-2-2வது அனுவாகமாம். இது அக்னிசயனம் என்ற யாகத்தில் அக்னி உபஸ்தானத்திற்கும் இப்படியே கூறப்படுவதால் ப்ரதிதினம் காலை மாலை அக்னி ஹோத்ரம் செய்வோர் இதை ஜபிக்கின்றனர். இதில் 11 மந்த்ரங்கள் இருக்கின்றன.

மந்த்ரார்த்த ஸங்க்ரஹம் : *(1)* திவஸ்பரி - *அக்னி முத லில் ஆகாயத்தில் ஸூர்யனாகத் தோன்றினார். பிறகு பூமியில் அக்னியாக அவதரித்தார். மூன்றாவதாக ஸமுத் திரத்தில் பாடபாக்னியாகத் தோன்றினார். இம்மூன்று பிறப்புக்களிலும் தன்னை உபாஸிப்பவரிடம் அனுக்ரஹ புத்தி உள்ளவர். அவரை நாம் கிழவனாகும்வரை புரோடாசாதிகளால் வ்ருத்தி செய்ய வேண்டும். (2)* வித்மா தே - ஹே *அக்னே ! முற்கூறிய மூன்று இடங்களி* லும், *கார்ஹபத்யம் முதலிய இடங்களிலும் ரஹஸ்ய மான தேவேத்த, மன்வித்த என்ற மந்த்ரத்தால் கூறப்படும் நாமாவிலும். மின்னல் ரூபமாக நீர் வரும் இடத்திலும் (மேகத்திலும்) உம்மை நன்கு அறிய அவா கொள்கிறோம். (3)* ஸமுத்ரே - ஸமுத்திரத் திலும், *ஜலத்திலும் மூன்றாவதான தேஜோ மண்ட லத்திலும் இருக்கின்ற உம்மை யாகம் செய்பவர் வேதி யில் பூஜிக்கின்றனர். ரித்விக்குகளிடம் அன்பு கொண்டு* வேதியரிடம் வேதார்த்தத்தைக் கூறும் நானும் உம்மை *ப்ரகாசப் படுத்துகிறேன். (4)* அக்ரந்தத் - ஆகாயத்தி லுள்ள மேகம் செடி கொடிகளை ஸந்தோஷப் படுத்திக் கொண்டு *அக்னி தாபம் உண்டாமல் மழை பெய்து எப்படி கர்ஜிக்கின்றதோ, அங்ஙனம்* அக்னி *தனது கிரணத்தால் உலகத்தை ஸந்தோஷப் படுத்துகிறது. (5)* உஶிக் - *அனுக்ரஹ புத்தி உள்ளவரும், பாபத்தை அகற்றுபவரும், நல்ல புத்தி உள்ளவரும், மரணமில் லாதவருமான அக்னி, மனிதருடைய நன்மைக்காக அளிக்கப்பட்டிருக்கிறார். அவர் தூமத்தால் நம் கண்ணைக் கெடுக்காமல் மேலே செல்லும் ஜ்வாலையோடு ப்ரகாசிக் கிறார். (6)* விஶ்வஸ்ய - *உலகை அறிந்தவரும்,* உலகில் கர்ப்பம் போல் நடுவில் இருப்பவரும், பிறந்தவுடன் *ஆகாசத்தை வ்யாபிப்பவருமான அக்னியை நான்கு ரித்விக்குகளுடன் கூடிய யஜமானன் பூஜிக்கிறான். அவர் பர்வதம் போன்ற மேகங்களை உண்டு பண்ணு கிறார். (7)* ஸ்ரீணாம் - *பசு முதலிய ஸம்பத்தையும், செல்வத்தையும் அளித்து யாகத்தைக் காப்பவரும், அக்னியைக் கடைந்தபோது ஜனிப்பவரும், மழை பொழியும்போது இடியாக இடிப்பவருமான அவர்*

காலையில் அக்னிஹோத்ரிகளால் ஹோமம் செய்யப்பட்டு ப்ரகாசிக்கிறார். (8) யஸ்தே- மங்களமான தேஜஸ் உள்ளவரே, எந்த யஜமானன் உபஸ்தரணம் (ஹவிஸ்ஸுக்கு முன்பு பாத்ராபிகாரம்), அபிகாரம் (ஹவிஸ்ஸின் மீது நெய்விடுதல்) முதலியவைகளோடு ஹோமம் செய்கிறானோ, எப்பொழுதும் யுவாவாக இருக்கும் ஓ அக்னியே, தெய்வபக்தி உள்ள அந்த யஜமானனுக்கு உயர்ந்த செல்வத்தைத் தாரும் (9) ஆதம்பஜ- ஹே அக்னே! வைதிக கர்மாவிலும் சாஸ்த்ரத்திலும் என்னை ஊக்கமுள்ளவனாகச்செய்யும், நான் அக்னியிடமும் ஸூர்யனிடமும் ப்ரியமாக இருக்கும்படி செய்யும். எனக்கு புத்ர பௌத்ராதிகள் பிறப்பதால் ஆனந்தம் உண்டாகட்டும், (10) த்வாமக்னே- ஹே அக்னே! வேள்வி செய்வோர் அனைவரும் ப்ரதிதினம் உமக்காகவே கர்மாக்களையும், அதற்கு அனுகூலமான செல்வத்தையும் வைத்துக் கொண்டு உம்மோடு கூட வஸிக்கின்றனர். இத்தகைய கர்ம ஆசையும், கர்ம ஸாதனமான செல்வமும் மேன் மேலும் வ்ருத்தியாக வேண்டுமென செல்வனை உம்மை வேண்டுகின்றனர். (11) த்ருசானோ- அக்னி ஸுவர்ணம் போல் அழகாக ப்ரகாசிக்கிறார். அவரை எவரும் அவமதிக்க முடியாது அவர் ஹவிஸ்ஸுகளால் அம்ருதராக ஆகிவிட்டார். இவரைத் தேவலோக வாஸிகள் நல்ல ரேதஸ் உடையவராகப் படைத்தனர்.

இம் மந்த்ரத்தால் குழந்தையைப் பிதா அபிமர்சனம் செய்து (தொட்டு) அஸ்மின் என்ற மந்த்ரத்தால் மடி மீது வைத்துக்கொள்ள வேண்டும். மந்த்ரார்த்தம்: இக் குழந்தை ஸ்வதந்தரனாக வளர்ந்து எனக்குப் பல வகையான இச்சையைப் பூர்த்தி செய்யவேண்டும். (இது மந்த்ர ப்ரச்ன மந்த்ரம் (2-12). அங்காத் என்ற இரு மந்த்ரங்களால் குழந்தையின் உச்சி முகரவேண்டும். மந்த்ர அர்த்தம்: ஓ குழந்தாய், எனது ஒவ்வொரு அங்கத்திலிருந்தும் நீ உண்டானாய். என் ஹ்ருதயத்திலிருந்து உண்டானாய். 'புத்ர' எனும் நீ எனது ஆத்மாவாக இருக்கிறாய். நீ நூறாண்டு ஜீவித்திரு. அச்மா பவ- நீ கல்போல் அசையாமல் ஸ்திரமாய் இரு! கோடாலிபோல் (சத்ரு

வுக்கு) இரு! அழுக்கில்லா ஸுவர்ணம்போலிரு! பசுக்கள் தனது கன்றை ப்ரீதியுடன் ஹிங்காரத்தால் முகருவது போல் உன்னை யான் முகருகிறேன். என்று கூறி, எந்த நக்ஷத்ரத்தில் குழந்தை பிறந்ததோ அந்த நக்ஷத்ரத்தால் (க்ருத்திகா என்று) வலதுகாதில் கூறி அழைக்கவேண்டும். மேதாந்தே என்ற மந்த்ரங்களால் தேனையும் நெய்யையும் கலக்கி ஸுவர்ணத்தில் தர்ப்பையை முடிபோட்டு, அந்த ஸுவர்ணத்தால் குழந்தை வாயில் தடவி அது உட்கொள்ளும்படி செய்யவேண்டும். மேதாம்-உனக்கு ஸவிதா எனும் தேவன் மேதையை அளிக்கட்டும். ஸரஸ்வதீ தேவியும் தாமரஸ மாலை அணிந்த அஶ்வினீ தேவர்களும் அங்ஙனமே உனக்கு மேதையை அளிக்கட்டும். த்வயி- உனக்கு மேதையையும் குழந்தையையும் தேஜஸ்ஸையும் அக்னி உண்டுபண்ணட்டும். மேதை, ப்ரஜை, இந்த்ரியம் இவைகளை இந்த்ரன் உண்டு பண்ணட்டும். க்ஷேத்ரியை என்ற மந்த்ரங்களைக் கூறி கூர்ச்சத்தால் (தர்ப்பை முடியால்) குழந்தைக்கு ஸ்னானம் செய்விக்க வேண்டும். மந்த்ர அர்த்தம்- சிகித்ஸை செய்ய முடியாத நோயிலிருந்தும் பிஶாசாதிகளின் தலைவனை நிருரிதியினிடமிருந்தும், துரோஹம் செய்பவரிடமிருந்தும் வருண பாஶத்திலிருந்தும் உன்னை விடுவிக்கிறேன். உன்னைப் பாபமில்லாதவனாக்கி, வேத அத்யயனம் செய்வதற்கு ஏற்றவனாகச் செய்கிறேன். ஆகாஶம், பூமி இரண்டையும் உனக்கு அனுகூலமாகச் செய்கிறேன். நீருடன் தீயும், ஓஷதிகளுடன் விண்ணும் மண்ணும், காற்றுடன் ஆகாஶமும், நான்கு திக்குகளும் உனக்கு மங்களத்தை உண்டுபண்ணட்டும். யா தைவீ:- இந்த்ர ஸம்பந்தியான தேவி, ப்ரதானமான 4 திக்குகள் வாயுவால் ரக்ஷிக்கப்படுபவர், ஸூர்யன் ஆகிய இவர்கள் கிழவர்களாகும் வரை உன்னை உலகில் ஸ்தாபிக்கிறேன். (நீண்ட காலம் எனப் பொருள்). உன்னிடமுள்ள யக்ஷ்ம ரோகம் நிருரிதியிடமே செல்லட்டும். இந்த குமாரன் யக்ஷ்ம ரோகம், பாபம், த்ரோஹி, வருண பாஶம், நிருரிதி ஆகியவைகளிடமிருந்து விடுவிக்கப்பட்டான். ஏழ்மை அகன்றது. ஸுகத்தைப் பெற்றான். புண்ய லோகத்தில் உண்டானான். இப் பொருளுள்ள மந்த்ரத்தைக் கூறி

ஒரு முறை கூர்ச்சத்தால் ஸ்ஞனம் செய்வித்து ப்ரணவத்துடன் வ்யாஹ்ருதிகளால் தயிரையும், நெய்யையும் கலக்கி வெண்கலத்தால் ஒரு முறை குழந்தைக்கு ஊட்ட வேண்டும். மிகுதியைப் பசுக்கொட்டகையில் ஜலத்துடன் கலந்து கொட்ட வேண்டும்.

குறிப்பு:— தகப்பனுக்குப் பதில் வேறு ஒருவர் குழந்தைக்கு ஜாத கர்மா செய்தால் "என் அங்கத்திலிருந்து உன் அங்கம் உண்டாகிறது" என்ற மந்த்ர அர்த்தம் "உன் பிதாவின் அங்கத்திலிருந்து" என்ற ப்ரகரணத்தை ஒட்டி மாறும். ஆதலால், நாம் மந்த்ரத்தை மாற்றக் கூடாது சாஸ்த்ரம் கூறியவிடத்தில். சிஷ்யனுக்காக குரு நாந்தி செய்யும்போது "இவனுடைய பித்ருக்கள்" என்று கூறவேண்டும்.

பிறகு. மாதே என்ற மந்த்ரத்தால் குழந்தையைத் தாய்மடியில் விட வேண்டும். அர்த்தம்: இக்குழந்தையை ராக்ஷஸர் கொல்ல வேண்டாம். பசு முதலியவை என் வீட்டை விட்டு வேறிடம் செல்ல வேண்டாம். நம் வீட்டிலுள்ள பசு புத்ர ரூபமான தனத்தில் ப்ரியமாக இரு. அவைகளை வ்ருத்தி செய். "அயம் குமார:" என்ற மந்த்ரத்தால் தாயின் வலது ஸ்தனத்தை - குழந்தைக்கு பால் கொடுக்க வேண்டும். பொருள் - இக்குழந்தை பால் குடிக்கும் வ்யாஜமாக தீர்க்க ஆயுளை அடையட்டும். ஓ ஸ்தனமே! இவனுக்கு நீ பாலைப் பெருக்கு. ஆயுஸ், வர்ச்சஸ், யசஸ், பலம் இவைகளையும் வ்ருத்தி செய். (இம் மந்த்ரத்தைக் கூறி, விதிப்படி குழந்தைக்குத் தாய் பாலூட்டி மற்ற பாக்யங்களையும் வேண்டுகிறோம்.) 12 அல்லது 16 வயதில் உபநயனத்துடன் சேர்த்து ஜாத கர்மா செய்தால் அவன் எப்படிப் பால் குடிப்பது? மந்த்ரத்தால் வேண்டப்படும் பாக்யத்தை எப்படி அடைவது? நிமித்தாபாவே நைமித்திகா பாவ: பால் குடிக்காததால், அதற்காக ஏற்பட்ட மந்த்ரத்தைக் கூற வேண்டாமே என சிலர் நினைப்பது ஸஹஜம். ஆனால் அது தவறு. அந்த வேத மந்த்ரத்தைப் படிப்பதால் ஒரு புண்யம் (இதை 'அபூர்வம்' என மீமாம்ஸா சாஸ்த்ரம்

கூறுகிறது) உண்டாகிறது. அதை நாம் இழக்கக் கூடாது. காலத்தில் கர்மாவைச் செய்து அந்த மந்த்ரத்தை ஸபலமாகச் செய்ய வேண்டும். பிறர் செய்யவில்லை என்று கூறுவதை விட நாம் காலத்தில் செய்து, நமக்கு ஸ்வாதீனமானவர்களையும் செய்யும்படி தூண்டினுல், அது பிறர்க்கு நிதர்ஶனமாகும்.

அடுத்த இரு மந்த்ரங்களால் பூமியைத் தொடவேண்டும். யத்பூமே:— ஓ பூதேவியே! உனது ஹ்ருதயமானது (நிழல்) ஆகாஶத்திலுள்ள சந்த்ரன் நடுவில் களங்கமாக இருக்கிறது. அதை யான் பார்த்துக்கொண்டு ஜீவித்திருக்கவேண்டும். உன்னைத் தொடுவதால், புத்ரனுக்காகவோ அவனது புத்ரனுக்காகவோ நான் அழும்படி நேரக் கூடாது. யத்தேஸுஸீமே-நன்ருக எல்லைகளைப் பிரித்துள்ள தேவி! உனது ஹ்ருதயம் செடி கொடிகளை வளர்க்கும் சக்தியாக சந்த்ரனிடத்தில் இருக்கிறது என்பதை அறிவோம். உன்னை யாம் ஸ்பர்ஶிப்பதால், புத்ர பௌத்ரர்களை நாடி நாம் அழாமல் இருக்கவேண்டும். அடுத்த மந்த்ரத்தில் பூமியில் குழந்தையை விட்டு தொடவேண்டும். நாமயதி— எந்த இடத்தில் மந்த்ரத்தை சொல்கிறேமோ, எந்த இடத்தைத் தொடுகிறேமோ அங்கு அமர்ந்த இக்குழந்தை நோயில்லாதிருக்கும். அழாமலிருக்கும். பிறகு குழந்தை தலைமீது ஜலகும்பத்தை வைத்து ஜபிக்க வேண்டும். (சிறு குழந்தையானுல், தலைமீது படும்படி பிதா பிடித்துக் கொள்ள வேண்டும்.) ஆப3 — ஓ ஜல தேவதையே! நாங்கள் உறங்கும் போது நீ விழித்திருந்து ராக்ஷஸர்களை விரட்டு. குழந்தையை ஹிம்ஸை செய்யாமல் ரக்ஷிப்பதற்காக கடுகு கலந்த தவிட்டை ஹோமம் செய்ய வேண்டும். அயங்கலிம்— ஓ மருத்துக்களே! பசிகொண்ட நாயைப் போல் இக் குழந்தையை பக்ஷிக்க வரும் கலி தேவதையை, ஓயாமல் கத்தும் ஆட்டுக்குட்டியைப்போல் தூரே தூக்கி எறியும். ஶண்டே— ஓ அக்னியே ஶண்டேரதன், ஶண்டிகேரன், பெரியவனும் துஷ்டனுமான உலூகலன், கர்ப்பத்தை நழுவும்படி செய்யும் ச்யவநன் என்ற நான்கு அஸுரர்களையும் தூக்கி எறியும். அயஶ்ஶண்டோ- ஓ அக்னியே, அயோமுகன்,

ஶண்டன், மர்க்கன், உபவீரன், உலூகலன், ச்யவநன் இவர்கள் அழியட்டும். கேஶீநீ— அக்னே, கேஶிநீ, ஶ்வலோமிநீ, கஜாப, அஜோப, காஶிநீ, முதலான பிஶாசங்கள் தூரே செல்லட்டும். அவை நாஶமாகட்டும். மிஶ்ர-மிஶ்ரவாஸஸ், ரக்ஷோ ராஜனால் தூண்டப்பட்ட குபேரனைச் சார்ந்தவர்கள், ஸஜானீகன், கிராமத்தை நாடி வருகின்றவர், உபநயனம் ஆகாத குழந்தைகளைக் கொல்ல வருகின்றவர் ஆகிய இவர்கள் நாஶமாகட்டும். ஏதான்— ப்ரும்ம புத்ரரான அக்னே, "இவர்களைக் கொல்லு, இவர்களைப்பிடி, என்று கூறிக்கொண்டு நீர் அவர்களைத் துறத்தும். குழந்தைகளைத் தேடி வருபவரும் பெரிய பற்களுள்ளவரும், விரிந்த கேஶமுள்ளவரும் தொங்கும் ஸ்தனமுள்ளவருமான பிஶாசங்களை ப்ராம்மணனை நானும் அறிவேன். நக்தம்— ராத்ரியில் ஸஞ்சரிப்பவரும் ப்ரகாஶமான மார்புள்ளவரும், சூலத்தைக் கையில் ஏந்தியவரும், கபாலத்தைப் புஜிப்பவருமான பிஶாசிநிகளுக்கு முன்னே 'இதோ இந்தக் குழந்தையைப் புஜி,' என உரக்கச் சொல்லிக்கொண்டு செல்கிறது பிஶாசங்களின் தந்தை. தாயோ வியாதியுள்ள குழந்தைகளைத் தேடிக்கொண்டு பின்னால் செல்கிறாள். இவர்களை நாஶம் செய். நிஶீத- அர்த்த ராத்ரியில் ஸஞ்சரிப்பவள் பிஶாச ஸஹோதரி. கதவு த்வாரத்தால் உள்ளே இருப்பவரைப் பார்ப்பது சிலது. தூங்குபவரை எழுப்புகிறது சிலது. ப்ரஸவித்த ஸ்த்ரீயைப் பக்ஷிக்க எண்ணம் கொண்டது சிலது. ஓ அக்னே, இப் பிஶாசங்களின் மாம்ஸத்தையும், ஹ்ருதயத்தையும், கண்களையும் நீ கொளுத்து. இங்ஙனம் இரு கரங்களாலும் மூன்று மூன்று முறை ஹோமம் செய்து மிகுதியைக் கொண்டு பலி கொடுக்க வேண்டும்.

இந்த ஜாதகர்ம அங்கமாக ஒரு நாந்தீ ஶ்ராத்தம் செய்து, புண்யாஹவாசனம், அக்ஷதை, ஆசீர்வாதத்துடன் ஜாதகர்மா பூர்த்தியாகும். குழந்தைப் பருவத்தில் வ்யாதி ரூபமாக வரும் துர்தேவதைகளை அகற்றி, குழந்தையைக் காப்பதற்காகவரிவது காலத்தில் இதைச் செய்வது நலம்.

### நாமகரணம்

கர்ப்பாதானம், பும்ஸவனம், ஸீமந்தோன்னயனம், ஜாதகர்மா ஆனபின் 11-வது நாள் செய்ய வேண்டிய 5-வது ஸம்ஸ்காரம் இது. பிறந்த குழந்தைக்குப் பெயர் இடுவது இதன் நோக்கம். உலக வ்யவஹாரத்திற்காகப் பெயர் வைப்பது. நமக்கு இந்த உலகம் மாத்ரமல்ல, தேவலோகம் முதல் ப்ரும்மலோகம் வரை ஸம்பந்த முண்டு. சிற்சில புண்யத்தால் அந்தந்த உலகம் போவோம். அங்கு நம் கர்மாவிற்கேற்ப பலன் அளிக்கப் படும். அதற்காக நாம் பிறந்தவுடன் நமது பெயர் அவ் வுலகங்களிலும் குறித்து வைக்கப்படும். தேவர்களும் அறிவதற்காக தேவபாஷையால் - ஸம்ஸ்க்ருதத்தால் - ஸகல கர்மாக்களையும் செய்கிறோம். இதை அனுஸரித்து ஜனன மரணம் இங்கு பதிவு செய்யப்படுகிறது. குல தேவதையின் நாமா, ரிஷி நாமா, முன்னோர் அல்லது நக்ஷத்ர நாமாவை வைக்கவேண்டும் (கல், மரம், பச்சை என அன்யர் பெயர் வைத்துக்கொள்வதைப் பார்த்து தற்காலத்தவர் அங்ஙனம் பெயர் வைப்பதும், "ஜகதீசன்" என்பதை "ஜே. டைசன்" என்பதும் முழுப்பெயரைக் கூறாமல் முதல் எழுத்தை கா, ரா, பா, வி, எனப் பெயர் கொள்வதும் அடிமை புத்தியையும் நாஸ்திகத்தையும் காட்டுகிறது, பகவன் நாமாவை அடிக்கடி கூற அவகாசம் ஏற்பட்டு, நாம் அஜாமிளனைப் போல் நற்கதி பெறட்டுமென் பகவன் நாமாவை வைக்கச் சொன்னார்கள். பகவன் நாமாவை வைத்து முழுப் பெயரையும் கூறி அழைக்க வேண்டுகிறோம். நாராயணனை நாணு, கிருஷ்ணனை கீசா என்றும் அழைக்காதீர்). புருஷர்களுக்கு 2 எழுத்து, 4 எழுத் துள்ளதாகவும், க, ச, ட, த, ப. இவ்வர்க்கங்களின் 3, 4 எழுத்துக்களில் ஆரம்பிப்பதாயும் கீர்த: ஹிரண்ய என்பது போல் இருக்கவேண்டும். ர்த என்பது ஒரே எழுத்து. பெண்களுக்கு அழகாயும், ஸுலபமாய் அர்த்தமாவதும், கடைசி எழுத்து தீர்க்கமாயும் (யசோதா என்பதுபோல்) இருக்கவேண்டும். ப்ராம்மணன் பெயருக்குப் பின்னால் சர்மா, க்ஷத்ரியனுக்கு வர்மா. வைச்யனுக்கு குப்தா, பால

சூத்ரனுக்கு தாஸ என்றும் சேர்க்க வேண்டும். இவை தான் ஶுப அஶுப காலங்களில் ஸங்கல்பத்தில் கூறப் படும் நாமாக்கள். அய்யர், ஶாஸ்த்ரீ, தீக்ஷிதர், ஶ்ரௌதி இது போன்றவை அவரவர் யோக்யதையால் ஏற்பட்டவை.

குழந்தை பிறந்த நக்ஷத்ரம், ராஶி இவைகளைக்கூறி, இதற்கு நாமா வைக்கிறேன் என்று ஸங்கல்பம் செய்ய வேண்டும். அந்த கர்மாவிற்கு அங்கமாக புண்யாஹ வாசனம் செய்ய வேண்டும். கும்பத்தில் வருணனை ஆவாஹனம் செய்து, ஷோடஶோபசார பூஜை செய்ய வேண்டும், நவ க்ரஹப்ரீதி செய்து புண்யாஹ மந்த்ரம் ஜபிக்கும்படி ப்ராம்மணர்களை ப்ரார்த்திக்கவேண்டும். நாமகரண கர்மாவுக்கு புண்யாஹத்தைத் தாங்கள் கூறுங்கள் என்று 3 முறை கூறி இந்த கர்மாவிற்கு ஸ்வஸ்தி கூறுங்கள் என வேண்டுகிறோம் "நீ நாராயண ஶர்மா" எனக்கூறி, நாராயண ஶர்மாவிற்கு ஸ்வஸ்தி கூறுங்கள் என ப்ராம்மணர்களை இரு முறை கேட்கவேண் டும். ரித்திம்— செழிப்பை நீங்கள் கூறுங்கள் என்று 3 முறை கூறவேண்டும். மற்றவை ஸாமான்ய புண்யாஹ வாசனம் போலாம். இந்த கர்மாவிற்கு அங்கமாக நாந்தி ஶ்ராத்தம் செய்து, அதன் அங்கமாக புண்யாஹ வாசனம் செய்து இந்த கர்மா பூர்த்தியாகிறது.

இது மிகச்சிறிய ஸம்ஸ்காரம். புண்யாஹவாசன தினமான 11-வது தினத்தில் ஜாதகர்மா, நாமக்ரணம் என்ற இரண்டையும் செய்யலாம்.

குறிப்பு : மற்ற ஸூத்ரக்காரர்கள் ஜாதகர்மா முதலே நாந்தி செய்கின்றனர். ஆபஸ்தம்ப ஸூத்ரக் காரர் நாமகரணம் முதலே நாந்தி செய்கின்றனர். ஜாத கர்மாவில் செய்வதில்லை.

### அன்ன ப்ராசனம்

ஆறுவது மாதத்தில் செய்ய வேண்டிய ஸம்ஸ்காரம் இது. விதிப்படி குழந்தைக்கு அன்னம் ஊட்டுவதால் அன்ன ப்ராஶனம் என்று பெயர். நல்ல நாள் பார்த்து

தம்பதிகள் நித்ய கர்மாவை முடித்து, மற்றவைபோல் அனுக்ஞை பெற்று, தர்ப்பைமீது அமர்ந்து, பவித்ர மணிந்து, பத்னி தர்ப்பையால் பதியைத் தொட்டுக் கொண்டிருக்க, விக்னேஶ்வர பூஜை ஆனபின் ஸங்கல்பம் செய்ய வேண்டும். முதலில் அன்ன ப்ராஶன கர்மாவுக்கு அங்கமாக ப்ரதிஸர பந்த கர்மா செய்ய வேண்டும். ப்ரதி ஸரபந்தம் என்பது கங்கண தாரணம் எனப்படும். இதைப்பற்றி முன்பேயே கூறினோம். ஆண் குழந்தைக்கு வலது கையிலும் பெண்ணுக்கு இடது கையிலும் கட்டவேண்டும். இந்த கங்கணதாரணம் போதாயன ஸூத்ரத்தில் கூறப்பட்டது. ஆபஸ்தம்பிகள் உதகஶாந்தி முதலியன போல் இதையும் போதாயனோக்த ப்ரகாரேண என்று கூறி அனுஷ்டிக்கின்றனர். உடனே அப்யுதம் என்ற நாந்தீ ஶ்ராத்தம். அதற்கு அங்கமாக புண்யாஹ வாசனம். புண்யாஹவாசன தீர்த்தத்தால் குழந்தையை யும் அன்னம் முதலியவற்றையும் ப்ரோக்ஷிக்க வேண்டும். பிறகு-நக்ஷத்ர-ராசியில் பிறந்த இந்த என் குழந்தையை அன்ன ப்ராஶன கர்மாவால் ஸம்ஸ்கார முள்ளவனாகச் செய்கிறேன் என ஸங்கல்பம் செய்து, நவக்ரஹப்ரீதி செய்ய வேண்டும். ஸுவர்ண பாத்ரத்தில் உப்பு உறப்பு இல்லாமல் அன்னத்தைத் தயிர், தேன், நெய் இவைகளு டன் சேர்த்து **भूरपां** (பூரபாம்) என்று 4 மந்த்ரங்களைக் கூறி ஒரு முறை குழந்தைக்கு அதை ஊட்டவேண்டும். (உபநயனத்துடன் சேர்ந்து அன்ன ப்ராஶனம் செய்தால் எப்படி ஊட்டுவது? இந்த ஸம்ஸ்காரமில்லாமல், குழந்தை கண்டதை உண்டபின் இதைச் செய்து பயனென்ன? அப் (ஜல) தேவதை, ஓஷதி தேவதை களின் அருளையும் அதனால் உண்டாகும் ஆரோக்யத்தை யும் பெறுவதெப்படி? காலத்தில் இதைச் செய்தால் குழந்தைக்கு நோயும் குறையும். நம் நேயர்களாவது இதையும் இதைப் போலவே மற்ற ஸம்ஸ்காரங்களையும் காலத்தில் செய்ய வேண்டுகிறோம்.)

பூரபாம்— ஶர்மன் இதில் முதலில் உள்ளது, முதல் வ்யாஹ்ருதி. அதைக் கூறியதனாலேயே ஓர் அத்ருஷ்டம் உண்டாகிறது. தீர்த்தம், ஓஷதி இவைகளின் ரஸத்தை

உனக்கு ஊட்டுகிறேன். அந்த தீர்த்தமும் ஒஷதியும் உனக்கு க்ஷேமத்தைத் தரட்டும். நோயை உண்டு பண்ணு மல் இருக்கட்டும்— ஶர்மா உள்ளவனே! புவ:—ஶர்மன். முன் போலவே இரண்டாவது வ்யாஹ்ருதி. அர்த்த மின்றியே கேவல உச்சாரணத்தால் பலனைத் தருகிறது. முன் கூறியதே மந்த்ரம். அர்த்தமும் அப்படியே. ஸுவ:- ஶர்மன் மூன்ருவது வ்யாஹ்ருதி, மந்த்ரமும் அர்த்த மும் முதல் கூறியதே ஆகும். பூர்—ஶர்மன் மூன்று வ்யாஹ்ருதிகளைச் சேர்த்துக் கூறி, முன்போலவே மந்த் ரமும் அர்த்தமுமாம். ஒரே மந்த்ரம் 3 தனி வ்யாஹ்ருதி, மூன்றையும் சேர்த்து ஒரு முறை கூறுவதால் 4 ஆகிறது. இந்த நான்கு மந்த்ரங்களையும் கூறி முடித்த பின், தங்க மோதிரத்தைக் கையில் வைத்துக் கொண்டு ஒரு முறை குழந்தைக்கு அன்னமூட்டுவர். பிறகு ஆசீர்வாதம் செய்து, ப்ருஹஸ்பதி ஸம்பாவனை செய்து, ஹாரத்தி எடுத்தால் இக்கர்மா பூர்த்தியாகிறது.

அன்ன ப்ராஶனமானவுடன் அக்குழந்தை எப்படி ஜீவிப்பான் என்று பரீக்ஷை செய்யும்படி மார்க்கண்டே யர் கூறுகிருர். குழந்தையின் எதிரில் சில பொம்மைகள், ஆயுதம், சஸ்த்ரம் முதலியவைகளை வைக்கவேண்டும். குழந்தை அவைகளில் முதலில் எதைத் தொடுகிறதோ அது ஸம்பந்தமான ஜீவனத்தைக் கைக்கொள்வான் என அறியலாம்.

### ஶிகை வைக்கவேண்டியது ஏன் ?

ஶிகை வைக்கும் ஸம்ஸ்காரம் இது. வேதத்தினுல் விதிக்கப்பட்ட கர்மா இது. முதல் ஆண்டு, மூன்ரும் ஆண்டு அல்லது ஐந்தாவது ஆண்டிலாவது அவஶ்யம் செய்ய வேண்டிய கர்மா சூடாகரணம் என்பது. சூடா என்ருல் ஶிகை. அதை விதிப்படி வைப்பது சூடாகரணம். சூடாகரணம் எந்த ஸம்ஸ்காரத்தில் செய்யப்படுகிறதோ அது "சௌளம்" எனப்படும். வேத மந்த்ரங்களைக் கூறி, அக்னியில் ஹோமம் செய்து நாந்தீ ஶ்ராத்தத்தால் பித் ருக்களைப் பூஜித்துச் செய்யும் கர்மா இது. இப்படி வேதோக்தமான மந்த்ரங்களைக் கூறி வைத்த ஶிகையை

வேதோக்தமான மந்த்ரங்களைக் கூறியேதான் எடுக்க வேண்டும். இஷ்டப்படி மாற்றக்கூடாது. அது எப்பொழுதெனில். க்ருஹஸ்தனுக்கு உரிய கர்மாக்களை நன்கு செய்து, யாகாதிகளால் தேவர்கடனை நீக்கி, ஸத்புத்ரனைப் பெற்று, அதனால் பித்ரு கடனை அகற்றி, தீவ்ர வைராக்யம் உண்டானால் ஸன்யாஸம் செய்து கொள்ள வேண்டும். அச்சமயம், பித்ருக்களுக்குப் பூஜை செய்து, அக்னியை ஆராதித்து. க்ருஹஸ்த ஆஶ்ரமத்திற்கு உரியதும், அவஶ்யம் வேண்டியதுமான ஶிகை, யக்ஞோபவீதம் இவைகளை ஸன்யாஸியே களைய வேண்டும். அச்சமயமே ஶிகையை எடுக்கவேண்டும். இடையில் எக்காரணம் பற்றியும் ஶிகையை எடுக்கக்கூடாது. மாதத்திற்கு ஒரு முறை க்ருஹஸ்தன் க்ஷவரம் செய்து கொள்ள வேண்டும். ஞாதிகள் அல்லது மாதா பிதாக்கள் இறந்ததால் உண்டாகும் ஆஶௌசம் (தீட்டு) நிவர்த்தியாகும் போதும், ப்ரயாகை முதலிய புண்ய தீர்த்தங்களிலும் விதிக்கப்பட்ட வபநம், ஶிகை தவிர் வபநத்திற்காக விடப்பட்டு வளரும் மயிரையே அகற்றுவதாம். விஷயமறியாத சிலர் இதரரைப்போல் திருப்பதி முதலிய க்ஷேத்ரங்களில் சென்று ஶிகையுடன் வப்நம் செய்து கொள்வது (மொட்டை அடித்துக்கொள்வது) சாஸ்த்ர விரோதமாம். நோயினால் அல்லது ராஜ சிக்ஷை முதலியவைகளால் ஶிகை போய் விட்டால் (யக்ஞோப வீதம் இல்லாவிட்டால் எப்படி ஸந்த்யாவந்தனம் முதலிய கர்மாக்கள் செய்ய யோக்யதை இல்லையோ அப்படியே) கர்மாக்களைச் செய்ய யோக்யதை இல்லாமல் போகிறது. அச்சமயம் பசுவின் வால் மயிர் அல்லது தர்ப்பையை சிரஸில் ஶிகைபோல் வைத்துக் கொண்டு கர்மா செய்யவேண்டும். தலையில் வைப்பது கஷ்டமாக இருந்தால், காதுக்கும் தலைக்கும் இடையே அதைச் சொறுகி வைத்துக் கொண்டு கர்மா செய்ய வேண்டும்.

ஆன்ஹிகத்தில் முதல் கர்மாவான ஸ்நான கர்மாவில் ஸ்நான அங்கமாக பித்ருக்கள் அருளை நாடி ஶிகோதகம் விடவேண்டும். அதாவது, ஸ்நானம் ஆனபின் பின்னால் தொங்கும் ஶிகையை முன்புறமாகத் தள்ளி, அங்கிருந்து

ஜலம் விழும்படி செய்யவேண்டும். ஆதலால் ஶிகை மிக அவஶ்யம் வேண்டும். பஞ்சாயதன பூஜை காலத்திலும், பஞ்சாக்ஷரீ முதலிய ஜப காலத்திலும் 'ந்யாஸம்' என்ற கர்மாவில் அந்தந்த மந்த்ரம் அல்லது பீஜாக்ஷரத்தால் ஒவ்வொரு அங்கத்தையும் தொடவேண்டும். அச்சமயம் ஶிகை மிக அவஶ்யம் வேண்டும். இல்லறத்தே உள்ளவன் குடும்பி எனப்படுவான். குடும்பி ஶிகை தரிக்க வேண்டும். அதுவே குடுமி என மாறி வந்தது போலும்! நமது சரீர அமைப்பு ஒரு ரதம் போலும், ஒரு நகரம் அல்லது வீடு போலும் இருப்பதாக உபநிஷத்துக்கள் கூறுகின்றன. அதற்கு ஶிகை என்பது கூரைபோலாகும். மேற்கூரை இல்லாத வீடுபோலாகும் ஶிகை இல்லாத உடல். அன்றியும், விக்ஞான சாஸ்த்ரத்திலும், ப்ரக்ஞான சாஸ்த்ரத்திலும் கரைகண்டவர்களும், அனுபவ க்ஞானம் பெற்று உலக நன்மையில் ஈடுபட்டவர்களுமான நம் மஹரிஷிகள் ஶிகை விஷயமாக் கூறியிருக்கும் தத்வம் நம் சிறிய புத்திக்கு எட்டாதது. மேரு மந்தர மலைக்கு ஸமமாக பாபங்கள் நமது கேசத்தை அண்டியிருப்பதால் புண்ய காலங்களில் (சிகையை விட்டு விட்டு மிகுதியை) வபநம் செய்து கொள்ளவேண்டும். பாப நிவ்ருத்திக்காச் செய்யும் கூஶ்மாண்ட ஹோமம், யாக தீக்ஷை முதலிய கர்மாக்களில் வபநம் விதிக்கப்பட்டிருக்கிறது. கேஶம், நகம் இவை நமது உடலிலிருந்து வளர்ந்த உயிரற்ற அம்சமானதால் அதை நாம் தரிக்கக் கூடாது. வபநம் செய்துகொள்ள வேண்டும் என்றும், இரு கக்ஷங்களை முதலிலும், பிறகு முகம், பிறகு தலை என்ற முறைப்படி செய்து கொள்ள வேண்டும். அதனுல் ஸ்வர்க்கம் முதலிய நன்மை உண்டாகும் எனவும் வேதம் கூறுகிறது. மரத்தில் உலர்ந்த சிறகுகள் தானே உதிர்கின்றன. அது செடியின் வளர்ச்சிக்கு அவஶ்யமாம். அதேபோல், துளஸியின் கதிர், புக இலையின் நுனி, வாழை மரத்தின் அருகில் உண்டாகும் கன்றுகள் ஆகிய இவைகளைக் கிள்ளி அல்லது வெட்டி எறிவது தாய் வாழையின் வ்ருத்திக்குக் காரணமாவது போல், ஶிகையை வளர்த்து அதன் வ்ருத்திக்குக் காரணமாக மற்ற இடத்தில் வபநம் செய்து கொள்ளும்படி கூறினர் போ

லும். பசுவின் குளம்பு அளவு நடுவில் சிகை வைத்துப் பின் புறமாகக் கட்ட வேண்டுமென ஒரு ரிஷியின் கொள்கை. நடுவில் சிகை வைத்து முன்புறம் அல்லது பக்க வாட்டில் முடிய வேண்டும் என மற்ருேர் ரிஷியின் மதம். அதைத் தழுவியே சிலர் முன் புறத்திலும் சிலர் பக்கத்திலும், சிகை கட்டி விடுவதைக் காணலாம். (அவர் முக்காணி தில்லை தீக்ஷிதர்.)

நமது மூளைதான் ஸகல அவயங்களிலும் சிறந்த பாகம். மனம் அங்கு சென்று ஒவ்வோரிடத்திலும் ஒவ்வொரு வகையான வேலையைச் செய்கிறது. வேலை செய்யும் இடம் கனமான கூரைபோன்ற சிகையால் மூடப்பட்டால், மூளைக்கு உறுதி என சிகை விதித்தனர் போலும். ரிஷி பேதத்தாலும் குல ஆசார பேதத்தாலும் சிகை வைப்பது வெவ்வேறு இடமாயினும், ஓரிடத்தில் சிகை, மற்ற இடத்தில் வபநம் என்ற விஷயத்தில் வேற்றுமையே இல்லை. வெளியில் சென்று வெய்யிலிலும் மழையிலும் அடிபடாத பெண் மக்களுக்குத் தலை நிறைய சிகை வைக்கச் சொன்னதற்கும் ஒரு சிறந்த காரணம் இருத்தல் வேண்டும். அன்றியும், பெற்ருேர் இறந்த ஆண்டில் ஆப்திகம் ஆகும் வரை புத்ரன் (பித்ரு மாத்ரு தீக்ஷை) வபநம் செய்து கொள்ளக்கூடாது. மனைவி கர்ப்பிணியாஞல், கர்ப்பம் வ்யக்தமாகத் தெரிந்த பின் 10 மாதம் வரை வபநம் செய்து கொள்ளக்கூடாது. விவாஹ தீக்ஷை, உபநயன மானபின் ஆறுமாதம் உபநயன தீக்ஷை. இந்த தீக்ஷை காலத்திலும் வபநம் கூடாது. ப்ரஸவித்த பத்தாவது நாள் வபநம் செய்து கொள்ளவேண்டும் என்று சாஸ்த்ரம் கூறுகிறது. பெற்ருேர் ஶ்ராத்தத்திற்கு முன்பும் பின்பும் சில நாட்களாவது வபநம் செய்து கொள்ளாமல் இருக்கவேண்டும்.

மாதத்திற்கு ஒரு முறை க்ருஹஸ்தனும், இருமாதத்திற்கு ஒரு முறை ஸன்யாஸியும், அமாவாஸ்யை பௌர்ணமிகளில் ஆஹிதாக்னியும் வபநம் செய்து கொள்ள வேண்டும். ஞாயிறு, செவ்வாய், வெள்ளிக்கிழமைகளில் வபநம் கூடாது. சதுர்த்தியில் வபநம் செய்து கொண்

டால் தாய்க்கு ஆகாது. சதுர்த்தஸி ஸஹோதரிக்கும், ஷஷ்டி ப்ராதாக்களுக்கும், ஏகாதசி, த்வாதசி, பௌர்ணமி, அமாவாஸ்யை பித்ருக்களுக்கும் ஆகாது. ப்ரதமையும் நவமியும் தனதான்யத்தை அழிக்கும். அஷ்டமீ குடும்பத்தை அழிக்கும் என்றும், க்ருத்திகை, பூரட்டாதி, உத்திரட்டாதி நக்ஷத்ரங்களில் வபநம் செய்து கொள்ளக் கூடாது என்றும் சாஸ்த்ரம் கூறுகிறது. தாய்க்கு தன் குழந்தையிடம் உள்ள அன்பை விட நம்மிடம் அதிக அன்புள்ளது சாஸ்த்ரம். நமது நன்மைக்காகவே ஏற்பட்டது அது. சாஸ்த்ர நம்பிக்கை கொண்டு கர்மா செய்ய வேண்டுமே தவிர, காரணம் கேட்டோ பயனைக் கோரியோ செய்தல் உசிதமன்று. நாள் செய்வதை நல்லவர் செய்ய முடியாது. "மயிர் நீங்கவும், உயிர் போகவும் நாளா" என எளிதில் கூறலாகாது. சனி, செவ்வாய், அஷ்டமி, அமாவாஸ்யை என்று கவனியாமல் வபநம் செய்து கொள்வதும், சிகை இல்லாமல் இருப்பதும், தானே வபநம் செய்து கொள்வதும், பூணல் இல்லாதது போலாம். இவைகளைக் கவனித்து நடப்பதுடன், வட தேசத்தவர்போல், கிராப்பின் நடுவிலாவது சிறிது சிகையேனும் வைத்துக் கொள்ள வேண்டுகிறோம்.

## சௌள மந்த்ர அர்த்தம்

மூன்றாவது வருஷத்தில் செய்யவேண்டி கர்மா இது. இதற்குப் பூர்வாங்கமாக உதகஶாந்தி, அங்குரம், ப்ரதிஸரம்' நாந்தி இவைகளைச் செய்து முடித்து, சௌளம் செய்ய வேண்டும். சுபதினத்தில் பெற்றோர் நித்ய கர்மாவை முடித்துச் சுத்தமாய் இன்ன நக்ஷத்ரத்தில் இன்ன ராசியில் பிறந்த இப்பெயர் ஶர்மா உள்ள குழந்தையைச் சௌள ஸம்ஸ்காரம் உள்ளவனாகச் செய்கிறேன் என ஸங்கல்பம் செய்து, குழந்தைகளுக்குக் காரம், உப்பு, புளி இல்லாமல் ஆஹாரம் செய்து வைக்க வேண்டும். (உரிய காலத்தில் செய்யாமல் உபநயனத்துடன் சேர்த்து ஜாதகர்மா முதல் சௌளம் வரை செய்பவரே தற்சமயம் அதிகமானவர். உபநயனத்தில் இங்ஙனம் ஒரு ஆஹாரம், வபநம் உண்டு. சௌளத்திற்

காக ஒன்று, உபநயனத்திற்காக ஒன்று, ஆக இரண்டு முறை ஆஹாரம். இரண்டுமுறை வபனம் செய்ய வேண்டும். அப்படி இருமுறை செய்ய நேர்ந்தபோது முதல் முறை சர்க்கரை, நெய், பால் ஆகிய இவைகளால் போஜனம் செய்து வைத்து, வபன மந்த்ரத்தை மாத்ரம் சொல்ல வேண்டும். உபநயநத்தன்று குமார போஜனம் என்று இரு அல்லது ஒரு ப்ரும்மசாரிக்கு வஸ்த்ரமளித்துக் கூட உட்கார்ந்து சாப்பிடச் சொல்கிறோம். அச்சமயம், பொங்கல், கருவடாம், குழம்பு முதலியன பாரிமாரப் படும். ஆனால் சாஸ்த்ரம் உப்பு புளிகளை வேண்டாம் எனக் கூறுவதைக் கவனித்து நம் நேயர் காலத்தில் சௌளம் செய்து இதையும் கவனிக்க வேண்டுகிறோம்.)

லௌகிக அக்னியை ப்ரதிஷ்டை செய்து வடபுறம் பாத்ரங்களை ஸாதனம் செய்யும்போது, உஷ்ண ஜல பாத்ரம், ஶீதஜல பாத்ரம், தர்ப்பை, நவதான்யம், சலாலு, தர்ப்பைக்கதிர், சாணி, பன்னி முள், கத்தி இவைகளை மற்றவைகளுடன் ஸாதனம் செய்ய வேண்டும். ஆஜ்ய பாகம் வரையிலுள்ள (முகாந்தம் எனப்படும்) பூர்வ அங்கத்தைச் செய்து முடிக்கவேண்டும். குமாரனைத் தொட்டுக் கொண்டே தாதா ததாது முதல் 4 யஸ்த்வா முதல் 4 மந்த்ரங்களைக் கூறி ஹோமம் செய்ய வேண்டும். (ஏற்கனவே இம்மந்த்ர மந்த்ரார்த்தங்கள் பும்ஸவனம் எனும் ஸம்ஸ்காரத்தில் கூறப்பட்டவை. அதைச் சுருக்க மாக இங்கு கூறுவோம்). தாதா. ஈஶானன் எங்களுக்குச் செல்வத்தை தரட்டும். எங்கள் இஷ்டத்தைப் பூர்த்தி செய்யட்டும். ப்ரஜை முதலியவைகளை அளிக்கும் தாதாவே உலகத்தைப் படைத்தவர். அவரே யஜமான னுக்குப் புத்ரனை அளிப்பவர். அவருக்கு ஹவிஸ்ஸைத் தருகிறோம். அவர் முன்னோருக்குத் தந்ததுபோல் எங்க ளுக்கும் செல்வத்தைத் தரட்டும். அவர் ஸத்யஸந்தர். பக்தரிடம் அன்பு கொண்ட அவரை த்யானம் செய் வோம். கர்ப்பாதானம் செய்த எனக்கு, அவர் ஸந்ததியைத் தரட்டும். மற்ற அமரரும் நம் வீட்டில் அமரட்டும். யஸ்த்வா—ஹே அக்னே, அமரரான உம்மை மனதோடு துதிக்கிறேன். எனக்குக் குழந்தைகளுடன்

உண்ண உணவைத்தாரும். நற்கர்மாவைச் செய்பவருக்கு ஸுகத்தை அளிக்கிறீர். ஹே இந்த்ரா! உம்மிடம் விரும்பத்தக்க பொருள்கள் இருக்கின்றன. உம்மைவிட உயர்ந்தவர் யாருமில்லை. யக்ஞத்தில் ஸோமரஸம் உம்மை ஸந்தோஷப்படுத்தட்டும். கஷ்டம் வந்தபோது எல்லோரும் உம்மைச் சரணமடைகின்றனர். இந்த 8 ஹோமங்களும் ஆனபிறகு உத்தராங்கமாக ஜயாதி ஹோமம் செய்ய வேண்டும். அக்னியைப் பரிஷேசனம் செய்து, சமியை நீக்கி அக்னிக்கு மேற்கே, கிழக்கு முகமாகக் குழந்தையை உட்காரவைத்து, பாத்ரத்துடன் ஸாதனம் செய்த முள்ளம் பன்றி முள், தர்ப்பைகளை எடுத்து, அவைகளால் க்ஷவரம் செய்ய வேண்டிய மயிரை ஒதுக்க வேண்டும். உஷ்ணேன என்ற மந்த்ரத்தைக் கூறி, உஷ்ண ஜலத்தை ஶீதஜலத்துடன் சேர்க்க வேண்டும். மந்த்ர அர்த்தம்: உஷ்ணேன-ஹே வாயோ, உஷ்ணமான ஜலத்தைக் கொண்டுவாரும். அதிதி கேசங்களை வபனம் செய்யட்டும், குழந்தையினுடைய தலையை ஜலம் நனைக்கட்டும். இவன் 116 வருஷம் ஜீவித்திருக்கவும் நன்கு ப்ரகாசிக்கவும், நீண்டகாலம் கண்பார்வை கெடாமல் ஸூர்யனைப் பார்க்கவும் ஜலம் அருள் புரியட்டும்.

பிறகு ஒவ்வொரு திக்காகத் தலையைத் தர்ப்பையால் துடைத்து எறியவேண்டும். கிழக்கு திக்கில் சிகையைத் துடைக்கக் கூறும் யேநாவபத் என்ற மந்த்ரத்தின் பொருள்: எந்தக் கத்தியினால் வபந கர்மாவில் குசலரான ஸவிதா ஸோம ராஜாவுக்கும் வருணனுக்கும் வபநம் செய்தாரோ அந்தக் கத்தியினால், ப்ராம்மணர்களே! இம்மாணவனுக்கு வபநம் செய்யும்படி எனக்கு உத்திரவு கொடுங்கள். இக்குமாரன் தீர்க்காயுள் உள்ளவனாகவும், உணவை ஜீர்ணம் செய்யும்சக்தி வாய்ந்தவனாகவும் இருக்கட்டும். இதைக் கூறி கத்தியினால் கேசத்தை நறுக்கி, தென்புறத்தில் பத்னி அல்லது ப்ரும்மசாரி கையில் வைத்திருக்கும் யவத்துடன் கூடிய சாணியில் போட்டு கை அலம்பவேண்டும். தென்புரம் வபநம் செய்யும்போது கூறும் யத்க்ஷுரேண என்ற மந்த்ர அர்த்

தம்: தீக்ஷ்ணமாயும் ப்ரகாசமாயுமுள்ள கத்தியால் கேசங்களை வபநம் செய்கிறோம். மாணவன் தலையைச் சுத்தமாகச் செய்! அவன் ஆயுளை அபஹரிக்காதே! மேற்கு புறம் கேசத்தைச் சேதிக்கும்போது கூறும் யேந என்ற மந்த்ர அர்த்தம்: எதனால் பூஷா, ப்ருஹஸ்பதி, அக்னி, இந்த்ரன் ஆகியவர்கள் ஆயுள் வ்ருத்தியின் பொருட்டு வபநம் செய்தாரோ. அந்தக் கத்தியால் இம்மாணவனுக்கு ஆயுஸ், கீர்த்தி, க்ஷேமம் இவை வ்ருத்தியாகும்படி வபநம் செய், முன்போல், அறுத்த கேசத்தைச் சாணியில் போட்டு, கை அலம்பி, வடக்கு புறத்தில் யேந என்பதால் அறுக்க வேண்டும், அதன் பொருள்: எதனால் பூஷா, ப்ருஹஸ்பதி, அக்னி, இந்த்ரன் இவர்களது ஆயுஸ் வ்ருத்தியாகும்படி வபநம் செய் தாரோ, ஹே—ஶர்மாவுள்ள மாணவனே, உனது ஆயுள் வ்ருத்தியாகும்படி அதனால் வபநம் செய்கிறேன். நீ நீண்டநாள் வர்ச்சஸ்ஸுடன் நல்ல மனதுள்ளவனாக இரு.

இக்கேசங்களைச் சாணியுடன் அத்தி மரத்தடியில் அல்லது தர்ப்பை ஸ்தம்பத்தில் போடவேண்டும். அச்சமயம் கூறும் உப்த்வா என்ற மந்த்ர அர்த்தம்: ப்ருஹஸ்பதி ஸவிதா, ஸோமன், அக்னி என்ற இவர்கள் கேசத்தை பலவிடங்களில், அதாவது த்யாவா, பூமி, ஜலம், ஸுவர்க்கம் முதலிய இடங்களில் போட்டதுபோல் நானும் அத்தி, தர்ப்பை முதலிய இடங்களில் போடு கிறேன். பிறகு தென்புறம் அமர்ந்த ப்ரம்மாவுக்குத் தக்ஷிணை யளித்து இந்த ஜலத்தால் நாபிதனைக்கொண்டு மாணவனுக்கு வபநம் செய்விக்க வேண்டும்,

மாணவனும் பிதாவும் ஸ்நாநம் செய்து, மடியுடுத்திக் காலலம்பி, ஆசமனம் செய்து, அக்ஷதாசீர்வாதம் செய்து அக்னி உபஸ்தானம் செய்யவேண்டும். இத்துடன் சௌளம் பூர்த்தியானது.

### உபநயன விவரம்

இது மிக முக்யமான சிறந்த கர்மா. ஆதலால் ஆபஸ்தம்ப ரிஷி "அத உபநயனம் வ்யாக்யாஸ்யாம:"

எனத் தனிக்கட்டமாக ஆரம்பிக்கிறார். இதைப் பற்றி மிக அவஶ்யம் அறியவேண்டியதைக் கூறி, பின்னர் கர்மாவை ஆரம்பிப்போம். ஜாதகர்மா முதல் சௌளம் வரை அந்தந்த காலத்தில் செய்துவிட்டு கர்ப்பாஷ்டமத்தில் ப்ராம்மணனுக்கும், கர்ப்ப ஏகாதஶத்தில் க்ஷத்ரியனுக்கும், கர்ப்ப த்வாதஶத்தில் வைஶ்யனுக்கும் இவ்வுபநயனத்தைச் செய்யவேண்டும். வஸந்த ருது ப்ராம்மணனுக்கும், க்ரீஷ்ம ருது க்ஷத்ரியனுக்கும், ஶரத் ருது வைஶ்யனுக்கும் சிறந்த காலம். (சித்திரை-வைகாசி வஸந்த ருது. ஆனி-ஆடி க்ரீஷ்ம ருது. ஆவணி-புரட்டாசி வர்ஷ ருது. ஐப்பசி-கார்த்திகை ஶரத் ருது. மார்கழி-தை ஹேமந்த ருது, மாசி-பங்குனி ஶிஶிர ருது.) குழந்தையின் வாக்கு நன்றாக இருந்து, குழந்தைக்கும் ப்ரும்மவர்ச்சஸ் வேண்டுமென பிதா விரும்பினால் ஐந்தாவது வயதில் ப்ராம்மணனுக்கு உபநயனம் செய்விக்கலாம்.

உப - நயனம் என்ற இரண்டு சொல் தொடர் இது. ஸமீபத்தில் அழைத்துச் செல்வது எனப்பொருள். வேத மந்த்ரமே "உபநயே" என்று கூறுவதாலும் இப்பெயர் இடப்பட்டது. யாரை யாரிடம் அழைத்துச் செல்வது? பூணல் போட்டுக்கொள்ளும் மாணவனைக் குருவினிடம் அழைத்துச் செல்வது என்று பொருள். மாணவனைக் காயத்ரீ எனும் ப்ரும்மத்தினிடம் அழைத்துச் செல்வது என்றும் கூறுவர். இதுவரை மாணவன் இஷ்டமானபடி உண்ணலாம். உடுக்கலாம். உறங்கலாம். உபநயநமான பின் ப்ரும்சாரியாகி விட்டாய் என்று குரு கூறி சில நியமங்களை உபதேசிப்பார். அவைகளைக் கைகொள்ள வேண்டும். உபநயனம் என்பது மறு பிறவியாகும். ஶுக்லஶோணித ஸம்பந்தத்தால் பிறந்த பிறவியை விட இப்பிறவி மிகச் சிறந்தது. இதில் குருவே பிதா, காயத்ரியே மாதா. உபநயனமான பின்புதான் ஸகல வைதிக கர்மாவையும் செய்ய அதிகாரம் ஏற்படுகிறது. குழந்தைக்கு உயர் ஜன்மாவையும், சிறந்த அறிவுக் கண்ணையும் அளிக்கும் பிதா, முதலில் சுத்தனாகவும் காயத்ரீ ஜபம் செய்பவனாகவும் இருக்க வேண்டும்.

உபநயன மந்த்ரத்தையும், மந்த்ர அர்த்தத்தையும், அங்கு செய்யப்படும் கர்மாவையும் நன்கு அறிந்திருக்க வேண்டும். இல்லையேல் குருடன் குருடனுக்கு வழி காட்டுவது போலாம். ஆதலின் காயத்ரீ உபதேசம் செய்யும் பிதா அல்லது மற்றவர், சில விஷயங்களை முதலில் கவனித்து அனுஷ்டிக்க வேண்டும். முதலில் பிழையின்றி. அபஸ்வரமின்றி, காயத்ரீ உபதேசிப்ப தற்கு முன் சில நாட்களாவது ஆயிரம் ஆவர்த்தி ஜபம் செய்ய வேண்டும். உபநயன மந்த்ர, மந்த்ரார்த்தங் களைத் தெரிந்தவர் மூலம் முன்னதாகக் கேட்டு வைத்துக் கொள்ள வேண்டும். 100 ப்ராம்மணர்களுக்கு அன்ன மிட வேண்டுமாதலால், மற்ற படாடோப செலவுகளைக் குறைத்து, அன்னதானம் ப்ராம்மண தக்ஷிணைகளை நன் ருகச் செய்ய வேண்டும். காலம் தவருமல் 8 வயதில் பூணல் போட வேண்டும். ஸந்த்யாவந்தனம், ப்ரும்ம யக் ஞம், ஸமிதா தானம் முதலான மந்த்ரங்களைத் • தக்க வரைக்கொண்டு அபஸ்வரமின்றி கற்பிக்க வேண்டும். தான் ஆசாரத்துடன் இருந்து, உபநயனமான மாண வனுக்கும் ஆசாரத்தைக் கற்பிக்கவேண்டும். காயத்ரி யைவிட சிறந்த மந்த்ரமில்லை. அது பரப்ரும்ம ஸ்வரூபம். ஆதலால்தான் காயத்ரீ உபதேசத்தை வேறெந்தப் பெய ராலும் அழைக்காமல் ' ப்ரும்ம உபதேசம் ' என்கின்றனர். அது அதி ரஹஸ்யமானதால், பட்டினுல் மூடிக்கொண்டு உபதேசிக்கிருேம்.

காயத்ரீ மந்த்ரத்தில் உள்ள ஒவ்வொரு எழுத்தும் வித்யுத் சக்தியை (எலெக்ட்ரிக் கரண்டை) விட அதிக சக்தி வாய்ந்தது. அந்த சக்தியைச் சிஷ்யனுக்குக் கொடுக் கிருர் குரு. அது வெளியில் சிந்தாவண்ணம் பட்டு அதைக் தடுப்பதால், எலெக்ட்ரிக் கம்பிக்குப் பட்டு நூல் சுற்றுவதுபோல், பட்டை உபயோகிக்கிருேம். உபதேச மே மிக முக்ய கர்மாவானதால் அச்சமயம் அபசகுனம் நேரா வண்ணம் மங்கள வாத்யம் கெட்டியாக வாசிக்கப் படும். ஆனுல், அந்த கோஷம் மாணவன் காதில் மந்த் ரம் விழாதபடி தடுப்பதாக இருக்கக்கூடாது. மாண வனுக்குப் பெற்ருேர் முதலியவர் இல்லாவிடிலோ,

ஸ்வல்ப செலவுகூட செய்யமுடியாத நிலையிலோ 16 வயது வரை ஆபத்கால பக்ஷமாக உபநயனம் செய்ய லாம். 16 வயது ஆகியும் உபநயனம் ஆகாதவன் பதிதனு வான். மாணவன் தாய் 6 மாதத்திற்குமேல் கர்ப்பிணி யாய் இருந்தால், புத்ரனுக்கு உபநயனம் செய்யக் கூடாது. இது ப்ராம்மண்யத்தைத் தரும் முக்ய கர்மா வாதலால் காலதாமதமின்றி முக்ய காலத்தில் செய்ய வேண்டும். 100 பேருக்கு அன்னமளிக்க முடியாவிடில் முடிந்தவரை அன்னமளித்து 4 நாட்கள் விதிப்படி உபநயனம் செய்விக்க வேண்டும். மந்த்ரம், மந்த்ர அர்த்தம் இவைகளைக் கேட்பதும், முன் ஒருவாரமாவது நித்யம் 1008 முறை காயத்ரீ ஜபம் செய்வதும் மிகமிக அவஶ்யமென மறுமுறை நினைவூட்டுகிறோம். யாசகம் வாங்கியாவது காலத்திலிதை செய்யும்படி சாஸ்த்ரம் கூறுகிறது. பெண் கல்யாணமானால், சட்டம் வரன், ஸம்பந்தி பூஜை, வரதக்ஷிணை முதலிய கஷ்டங்கள் உண்டு. உபநயனத்தில் இத்தகைய ஶ்ரமங்கள் இல்லாத தால், நம் அன்பர்கள் இதையாவது காலத்தில் செய்து, ஸந்த்யாவந்தனம், ப்ரும்ம யக்ஞம், ஸமிதாதானம் முதலிய மந்த்ரங்களைக் கற்பிக்க வேண்டுகின்றோம்.

## உபநயனம் செய்யும் வகை

குறிப்பு :—"புருஷார்த்தம் ஒன்றல்ல. ஸ்ம்ருதிகளோ பின்ன பின்னமானவை. ரிஷி ஒருவரல்ல. ஒருவரேயானால் அவர் சொல்லை ப்ரமாணமாகக் கொள்ளமுடியும். தர் மத்தின் தத்வமோ குஹையில் மறைத்து வைக்கப்பட் டது போல் ரஹஸ்யமானது. இந்த நிலையில் சிஷ்டர் எந்த வழி சென்றனரோ அதே நமக்கு வழி" என்ற சான்றோர் சொற்படி, பல ஸூத்ரக்காரர். ஒரு ஸூத்ரத் தைத் தழுவி ப்யோகமாக எழுதியவர் பலர். சிஷ்டா சாரத்தைக் கைக்கொள்வோமெனில் அதுவும் பலவித மாகக் காணப்படுகின்றது. ஆதலால், வைதிக கர்மாக் களை அனுஷ்டிப்பதிலும், பிறர்க்குக் கூறுவதிலும் உள்ள ச்ரமத்தை அனுஷ்டாதாதான் அறிவர். இங்கு ஆபஸ் தம்ப ஸூத்ரத்தைத்தழுவி ச்ரௌதபூஷணம் ஸ்ரீ முத்து

ச்ரௌதிகள் எழுதிய ப்ரயோகத்தை ஒட்டி எழுதப்படு கிறது. ஒன்றுமே அறியாமல், உபாத்யாயர் சொற்படி ஏதோ செய்கிறோம் என்று செய்யாமல், சிறிதாவது கர்ம தத்வம் தெரிந்து நடத்தவேண்டும் என்ற அவா வால் சிற்றறிவுக்கு எட்டிய அளவு எழுதுகிறோம். இக் கருத்தை நன்கு உணர்ந்து இதை ப்ரசாரம் செய்யும் சில பண்டிதர்களுக்கு எவ்வளவு நன்றி கூறினும் போதா. மற்ற பண்டிதர்களும் இதை அன்புடன் நோக்கி, மனித ருக்கு இயற்கையான, தோஷங்களைக் களைந்து, குணத் தைக் கொண்டு தர்ம அபிவிருத்திக்கு ஸஹாயம் செய்து, தர்ம பலனை அனுபவிக்கும்படி வேண்டுகிறோம்.

இந்த உபநயன கர்மாவிற்குப் பூர்வாங்கமான உதக ஶாந்தி, அங்குர, ப்ரதிஸர, (பாலிகை, ரக்ஷை) நாந்தி இவைகளை முதலில் செய்யவேண்டும். உதக ஶாந்தியை முதல்நாள் காலையில் அல்லது இரவில் செய்வது அவரவர் ஸௌகர்யத்தைப் பொருத்தது. அப்யுதயம் எனும் நாந்தியை அன்னஶ்ராத்த ரூபமாகச் செய்வது இன் னும் மலையாளத்திலும், இங்கும் சில விடங்களிலும் உண்டு. அஃதே நல்லது. அப்படி ஸௌகர்யமில்லாதவர் அதம பக்ஷமாக எட்டுபேரை வரித்து நாந்தி செய்வது உசிதம். அப்படி வரிப்பதற்குச் சில அஸௌகர்யங்கள் தோன்றில், மொத்தமாகத் தத்தம் செய்து ப்ராம்மணர் களுக்குத் தக்ஷிணையாகக் கொடுப்பது வழக்கம்.

பெற்றோர் மாணவனுடன் உட்கார்ந்து உபநயன ஸங்கல்பம் செய்யவேண்டும், இந்த நக்ஷத்திரத்தில் - இந்த ராஶியில் உண்டான—இந்த ஶர்மா உள்ள என் குமாரனை (குமாரனுக்கு) உபநயனம் செய்கிறேன் என் பது ஸங்கல்ப அர்த்தம். முதலில் அனுக்ஞை பெற்றுக் கொண்டு, வழக்கப்படி விக்னேஶ்வர பூஜை செய்ய வேண்டும். மேற்கூறிய ஸங்கல்பம் செய்து விக்னேஶ் வரரை யதாஸ்தானம் செய்யவேண்டும். பிறகு மாண வன் தரித்துக்கொள்வதற்காக உபாத்யாயர் கொண்டு வந்திருக்கும் யக்ஞோபவீதத்தை ஶுத்தம் செய்ய புண்யாஹவாசனம் செய்யவேண்டும்.

புண்யாஹவாசனம் என்பது சில முக்கிய கர்மாக்களுக்கு அங்கமாகச் செய்யப்படும் ஒரு கர்மா. 'ஜயாதி' போல் இதையும் பின்னர் விளக்குவோம். அந்த புண்யாஹவாசன தீர்த்தத்தால் மாணவனையும் யக்ஞோபவீதத்தையும் ப்ரோக்ஷிக்க வேண்டும். அதற்கு அனுக்ஞை பெறுவதற்காக தாம்பூலத்துடன் தக்ஷிணையை எடுத்துக்கொண்டு ''அஸேஷே ஹே பரிஷத்'' என்று கூற வேண்டும். ஓ பரிஷத்தே, தங்கள் திருவடியில் என்னால் ஸமர்ப்பிக்கப்பட்ட ஸ்வல்பமானாலும்கூட யதோக்த தக்ஷிணையாக இதைக் கருதி, தாம்பூலத்தையும், தக்ஷிணையையும் ஏற்றுக் கொண்டு இம்மாணவனுக்கு யக்ஞோபவீதம் தரித்துக் கொள்வதற்கு யோக்யதை ஸித்திக்கட்டுமென அனுக்ரஹம் செய்யுங்கள் என்பது அனுக்ஞையின் கருத்து. கர்மாவின் ஆரம்பத்தில் ஓர் அனுக்ஞை. இப்போது ஒன்று. ப்ரும்மோபதேச காலத்தில் ஒன்று. இப்படி எவ்வளவு முறை அனுக்ஞை. அடிக்கடி உபாத்யாயர் நெச்சரிக்கிறார் பணத்திற்கு என்று கருதக்கூடாது. ஸாதுக்களது அனுக்ரஹத்தால்தான் நமக்கு ஒரு கர்மாவைச் செய்ய யோக்யதை உண்டாகின்றது. அவர்களைப் பூஜிக்காமல் உத்திரவு கேட்கக்கூடாது. அவர்களுக்கு நாம் எவ்வளவு கொடுத்தாலும் போதாது என்பதைக் காட்டவே ''யத்கிஞ்சித் தக்ஷிணமபி'!—மிக ஸ்வல்பமாக இருந்தாலும் என்று காலணு முதல் ஒரு ரூபாய் வரை அல்லது அதைவிட அதிகம் கொடுப்பவர்கூட இதையே கூறவேண்டும். முன்பு பொதுவாக உபநயன கர்மாவிற்காக அனுக்ஞை பெற்றோம். இப்போது பூநூல் தரிப்பதற்காகக் கேட்கிறோம். இப்படி ஒவ்வொரு கர்மாவிற்கும் அனுக்ஞை பெறுவதுதான் முறை. அதேபோல் ''க்ரஹப்ரீதி'' என்பதுமாம். யக்ஞோபவீத தாரண லக்னத்தை அபேக்ஷித்து எந்த எந்த க்ரஹங்கள் ஶுபஸ்தானத்தில் இருக்கின்றனதோ, எந்த எந்த க்ரஹங்கள் ஶுபேதர ஸ்தானங்களில் இருக்கின்றனவோ (இங்கு ஶுபகர்மாவில் அஶுப என்ற சொல்லைக் கூறாமல் 'ஶுபேதர' என்று சொல்வது கவனிக்கத்தக்கது.) அந்த க்ரஹங்கள் மிகச் சிறந்த ஶுப பலத்தை அளிப்பதற்காக நவக்ரஹ ரூபியான ப்ராம்மணருக்கு தக்ஷிணை

வுடன் தாம்பூலம் தருகிறேன்" என உபாத்யாயருக்கு க்ரஹப்ரீதி அளிக்கவேண்டும். இதுவும் சில கர்மாக்களுக் குப் பூர்வாங்கமாக அடிக்கடி செய்யப்படும். யக்ஞோப வீத தாரணத்திற்காக ஸங்கல்பம் செய்துகொண்டபின் இந்த க்ரஹப்ரீதி செய்யவேண்டும். பலருக்கும் அளிக் கலாம்.

யக்ஞோபவீததாரண ஸங்கல்பம் : ஶுக்லாம் பரதரம் —ஶாந்தயே. ஓம் பூः—ஸுவரோம். மமோபாத்த ஸமஸ்த துரித க்ஷயத்வாரா ஸ்ரீபரமேஶ்வர ப்ரீத்யர்த்தம்— நக்ஷத்ரே—ராஶௌ ஜாதஸ்ய மம குமாரஸ்ய ஶ்ரௌத ஸ்மார்த்த விஹித நித்ய கர்மானுஷ்டான யோக்யதா ஸித்யர்த்தம் ப்ரும்மதேஜோபி வ்ருத்யர்த்தம் மம குமா ரேண யக்ஞோப வீத தாரணம் காரயிஷ்யே. க்ருஹப் ரீதி செய்து, மந்த்ரமில்லாமல் குமாரனை ஆசமனம் செய் விக்க வேண்டும். (நாம் தரித்துக்கொள்ளும் போது மமோ பாத்த— ப்ரீத்யர்த்தம் யக்ஞோப வீததாரணம் கரிஷ்யே என்று கூறவேண்டும். ('காரயிஷ்யே' எனில் தரிக்கும்படி செய்கிறேன் என்று பொருள்). யக்ஞோப வீதத்தைத் தரிப்பதற்கு ஒரு மந்த்ரம் உண்டு. மந்த்ரம் என்றால் அதைக் கண்டு பிடித்தவர் அல்லது அதனால் பயனடைந்த ரிஷி ஒருவர் இருப்பர். அதற்கு ஒரு சந்தஸ் (விருத்தம்) உண்டு. அதனால் கொண்டாடப்படும் தெய்வம் ஒன்று உண்டு. அவைகளைக்கூறி இந்த மந்த்ரம் இந்த கார்யத்தில் பயன்படுகிறது எனக் கூறவேண்டும். அது தான் கீழே வரும் மந்த்ரம்.

யக்ஞோபவீத தாரண மஹா மந்த்ரஸ்ய- பரப்ரும்ம ரிஷி: (தலைமீது கை விரல்களை வைக்கவேண்டும்.) த்ருஷ்டுப் சந்த: (நுனி மூக்கில்) பரமாத்மா தேவதா। (மார்பில்) யக்ஞோபவீத தாரணே ஜபே விநியோகः। என்று கூறி, பிதா அல்லது பூநூல் போடுகிறவர் குமார னுடைய இரு கரங்களுடன் தன் கரங்களால் அதைப் பிடித்துக்கொண்டு மந்த்ரத்தைக் குமாரனுக்குச்சொல்லி வைக்கவேண்டும். வலது கையை உள்ளங்கை மேலே நோக்கி இருக்கும்படியும் இடது கையின் உட்புறம் கீழ்ப் பக்கம் நோக்கி இருக்கும்படியும், பிடித்துக்கொள்ள

வேண்டும். யக்ஞோப வீதம்— தேஜ: । மந்த்ர அர்த்தம்: "யக்ஞோப வீதமானது மிக்மிகச் சுத்தமானது, ப்ரும்மா வுடன் கூடவே முன் உண்டானது. அது ஆயுஸ்ஸைக் கொடுக்கக்கூடியது. மிக ஸ்ரேஷ்டமான, வெண்மை யானது. அதைத் தரிக்கிறேன். பலமும் தேஜஸ்ஸும் உண்டாகட்டும்," இம் மந்த்ரத்தைக் கூறி, யக்ஞோப வீதத்தை மாணவன் தரிக்கும்படி செய்து முன்போல் மந்த்ரமில்லாமல் ஆசமனம் செய்விக்க வேண்டும். "யக்ஞோ— க்ருஹ்ணந்து" என்று ஆசார்யன் கேட்க வேண்டும் "யக்ஞோபவீதத்தைத் தரிக்கும்படி செய்த முகூர்த்தம் நல்ல முஹூர்த்தமாக இருக்கவேண்டும் என்று அநுக்ரஹம் செய்யுங்கள்" என்பது பொருள். "ஸுமுஹூர்தோஸ்து"—நல்ல முஹூர்த்தமாக இருக் கட்டும் என ப்ராம்மணர்கள் கூறுவார்கள்.

மாமன் பாட்டனுர் செய்யும் சீர், வேஷ்டி, மாண வனது தாய் தந்தைக்கு வேஷ்டி, புடவை, வெள்ளி பஞ்ச பாத்ர உத்தரிணி, தாம்பாளம், மோதிரம் முதலியன யளிப்பர். அத்துடன் வரும் வெள்ளிப் பூணல், தங்கப் பூணல்களைப் பெற்று, நூல் பூணலுடன் வெள்ளி, தங்கப் பூணல்களை அலங்காரமாகத் தரிப்பது ஸம்ப்ரதாயத்தில் வந்த வழக்கம். வெள்ளிப் பூணல், தங்கப் பூணல்களைத் தானம் செய்தால், செய்பவரது குடும்பத்தில் குழந்தை கள் மறிக்கமாட்டார்கள். பூர்வ ஜன்ம பாப விஸேஷத் தால் குழந்தைகள் பிறந்து இறந்தால், பெற்ருேர் வெள்ளி, தங்கப்பூணலைத் தானம் செய்யவேண்டும் என கர்ம விபாகம் கூறுகிறது, அன்றியும், பூணல் தரித்த பின் மாணவன் தனது பித்ரு வர்க்கத்தைப் போலவே மாதாமஹ வர்க்கத்தையும் தர்ப்பணுதிகளால் ஸந்தோ ஷப்படுத்துகிருன். ஆதலால் அவனது அம்மான் பாட்டன் மாணவனுக்குச் சீர்செய்வதும், தங்கப் பூணல், வெள்ளிப் பூணல், பக்ஷ்யங்கள் அளிப்பதுமான முன் ஞேர் ஸம்ப்ரதாயம் அர்த்த புஷ்டியுள்ளதென ஸ்பஷ்ட மாகும்.

இதுவரை ஸாதாரணமாக யக்ஞோபவீத தாரணம் நடந்தது. இதன் பின் குமாரபோஜனம். இம் மாணவ

னுடன் சில ப்ருஹ்மசாரிகளைச் சாப்பிடும்படி செய்வதும், அவர்களுக்குப் புது வஸ்த்ரமளிப்பதும் மற்றொரு பழக்கம். வஸ்த்ர தானத்தால் ஸர்வ தேவதைகளும் ஸந்தோஷ மடைகின்றனர், ஆயுளும் வ்ருத்தியாகின்றது. ஆதலால் மாணவனது ஆயுளைப் பெருக்கும் இந்த ஆசாரம் மிக ஶ்லாக்யமானது. ஆனால், குமார போஜனத்தில் பொங்கல், குழம்பு, கருவடாம், அப்பளாம் பக்ஷிப்பது தான் சாஸ்த்ர விரோதமான கார்யமாகும். உப்பு, காரம் இல்லாமல் நெய், பால், கலந்த அன்னம் அளிக்க வேண்டுமென்பது சாஸ்த்ரம். குமார போஜனத்தில், மாணவனுக்குப் பிதா, மந்த்ரமின்றி, பரிஷேசனம், ஆபோஶனம் ப்ராணாக்னி ஹோத்ரம், உத்தராபோஶ னம் முதலியன செய்விப்பர். காயத்ரியைச் சொல்லி, பிதாவே அன்னத்தைப் ப்ரோக்ஷிக்க வேண்டும் என்பது சௌநக மஹர்ஷியின் மதமாகும். பின்னர் உபநயன அங்கமாக மாணவனுக்கு வபனம் விதிக்கப்பட்டுள்ளது. சௌளம் என்ற ப்ரகரணத்தில் இந்த விஷயம், மந்த்ரம். மந்த்ரார்த்தம், செய்யவேண்டிய முறை அனைத்தும் விளக்கப் பட்டிருப்பதை இங்கு நேயர் கவனிக்க வேண்டும்.

லௌகிக அக்னியை ப்ரதிஷ்டை செய்து ஆஜ்ய பாகம் வரை செய்யவேண்டும். பாத்ர ஸாதனம் செய்யும்போது தர்ப்பை, ஜலம், கூர்ச்சம், வஸ்த்ரம் அஶ்ம (கல்), பலாஶ தண்டம், க்ருஷ்ணாஜினம், மேகலை முதலியவைகளையும் ப்ரதிஷ்டை செய்யவேண்டும். பிறகு மாணவன் வலது கையில் ஒரு பலாஶ ஸமித்தைத் தந்து, அதை உபநயனம் செய்பவர் வாங்கி, ஆயுர்தா— நயேமம் । ஆதேஹி என்று ஆசார்யன் கூற, குமாரன் அதை அக்னியில் வைக்கவேண்டும். மந்த்ரார்த்தம்: "ஹே தேவ, ஆயுளை அளிப்பவர் நீரே. ஸ்துதியை ஏற்றுக் கொண்டு ப்ரகாஶமான அவயவமுள்ளவராய். ஆஜ்யத் தைப் பின்புறமும் வைத்துக்கொண்டு ஆஜ்யபானம் செய்யும். ஆஜ்யம் பசுவினிடம் உண்டானது. அம்ருதம் போல் சுவையானது. அந்த ஸமித்தின் ஆஹுதியானது பிதா புத்ரனைப்போல். இந்த மாணவனைத் தீர்க்காயுள் உள்ளவனாகச் செய்யும்." ஆயுர்தே—அக்னய இதம் நமம ।

என்று உத்தேஶ்யாகம் கூறவேண்டும். பிறகு அக்னிக்கு வடபுறத்தில் உள்ள கல்லில் மாணவன் வலது காலை வைக்கச் செய்து ஆதிஷ்டேமம்— யத: என்ற மந்த்ரம் கூறவேண்டும். ஆதிஷ்ட எனும் இம் மந்த்ரம் விவாஹத்தில் கல்யாணப் பெண் அம்மி மிதிக்கவும் பயன்படுகிறது. இதன் பொருள் ' "குழந்தாய், இந்தக் கல்மீது நில். இதன் மேல் நின்று அந்தக் கல்போல் அசையாதிரு. உன்னை எதிர்த்துச் சண்டையிடுகிறவாகளை எதிர்த்து நில். அவர்களை அவமதிக்கும்படியான சக்தி உனக்கு உண்டாகட்டும்." பிறகு புது வஸ்த்ரத்தை ரேவதீஸ்த்வா—தவனம் என்ற மந்த்ரங்களால் மந்த்ரிக்க வேண்டும். மந்த்ர அர்த்தம்: "ஓ வஸ்த்ரமே, ரேவதி எனும் தேவதை நீ பருத்தியாய் இருக்கும்போது உன்னைப் பிய்த்தெடுத்தது. க்ருத்திகா தேவதை உன்னை நூலாக்கிற்று. தீய என்ற தேவதை நூலிலிருந்து வஸ்த்ரமாக செய்தது. க்ஞ எனும் தேவதை தரியிலிருந்து அறுத்தெடுத்தது. மற்றும் ஆயிரக் கணக்கான தேவதைகள் இரு புறங்களையும் ஒழுங்காக்கித் தந்தனர். அந்த ஆயிரக்கணக்கான தேவதைகள் ஸவிதா எனும் தேவனுக்கு வஸ்த்ரமாக இருந்தனர். அந்த பெரிய தேவதைகள் ஸூர்யனுக்கு வஸ்த்ரமாக இருந்தது போல். நீ இம் மாணவனுக்கு வஸ்த்ரமாக இரு.

மேலே, யா அக்ருந்தன்— ஸம் வ்யயஸ்வ என்று மூன்று மந்த்ரங்களைக் கூறி மாணவனுக்கு வஸ்த்ரத்தை இடுப்பில் கட்டவேண்டும். (1) எந்த தேவதைகள் வஸ்த்ரத்தை முதலில் பருத்தியிலிருந்து எடுத்தனவோ, எவை நெய்தனவோ, எவை இரு புறமும் ஒழுங்காகும்படி செய்தனவோ, அந்த தேவதைகள் உன்னை நீ கிழவனுகும் வரை சூழ்ந்து கொள்ளட்டும். நீ தீர்க்காயுஸ்ஸாக இருந்து வஸ்த்ரத்தைத் தரித்துக்கொள். (2) ரேவதி முதலிய தேவதைகளே! இக் குமாரனை வஸ்த்ரத்தால் மூடுங்கள். மறையுங்கள். இவனை நூறு ஆயுஸ் உள்ளவனுகச் செய்யுங்கள். இந்த வஸ்த்ரத்தை ப்ருஹஸ்பதி ஸோமராஜாவுக்குத் தீர்க்காயுஸ்ஸாக இருந்து உடுத்திக் கொள்ளும்படி கொடுத்தாரல்லவா? (3) குழந்தாய்!

இதை நீ கட்டிக்கொள். தீர்க்காயுஸ்ஸாக இரு. பந்து ஜனங்களை ரக்ஷிப்பவனாக இரு. நூறாண்டு நல்ல வர்ச்சஸ் உள்ளவனாக ஜீவித்திருந்து தனதிகள் வ்ருத்தியடையும் படி வஸ்த்ர தாரணம் செய்துகொள்.

(இங்கு வஸ்த்ரத்தை மந்த்ரிக்க இரண்டு மந்த்ரம். தரிக்க மூன்று மந்த்ரம். பின்னர் ஒரு மந்த்ரமும் கூறப் பட்டன. இவை அனைத்தும் வஸ்த்ரத்தை உண்டுபண்ண பல தேவதைகள் கூடியிருப்பதாகவும், இதை முன்னம் ஸுர்யன் அணிந்ததாகவும் ப்ரஹஸ்பதி சந்த்ரனுக்கு அளித்ததாகவும் கூறி, சந்த்ரன் எப்படி ப்ரகாசமாகவும் நீண்ட ஆயுள் பெற்றவனாகவும் இருக்கிறானோ அங்ஙனமே இம்மாணவன் இருக்கவேண்டும் என்றும் கூறுகின்றன. இதனால் எங்கும், எக்காலத்திலும், எக்கார்யத்திற்கும் தேவதைகள் ஸஹாயம் இருக்கிறது என்ற தத்வமும் மாணவன் தீர்க்காயுளாகவும், ப்ரகாசத்துடனும் இருக்க வேண்டும் என்ற ப்ரார்த்தனையையும் மஹரிஷிகள் விளக்கி இருக்கின்றனர். ஷை வஸ்த்ரத்தை மந்த்ரத்து டன் மாணவன் இடுப்பில் நாபியின் மேலே, தொங்க விடாமல் சுற்றிக் கொள்ளவேண்டும். அச்சமயம் சிறு வயதாக இருந்தால் (8,9,10 வயது வரை) கௌபீனத்தை உடுத்திக்கொண்டு துடை திறந்திருப்பதற்காக வெட்கப் படாமல் இருப்பான். அதற்குமேல் வயதானவன் கௌ பீனம் அணிந்திருந்தாலும், பலர் எதிரில் முன் கூறியபடி அணிய வெட்கப்படுவது ஸஹஜம். பெண் குழந்தை களுக்கு வெட்கப்பட ஆரம்பிப்பதற்கு முன் விளையாடும் காலத்திலேயே மணம் செய்யவேண்டும் எனக் கூறியது போல் மாணவரும் வெட்கப்பட ஆரம்பிப்பதற்கு முன் பேயே உபநயனம் செய்யவேண்டும்).

வஸ்த்ரம் அணிந்தபின், பரீதம்—ஜீவன் என்ற மந்த் ரத்தைக் கூறி ஜபிக்கவேண்டும். மந்த்ரார்த்தம்: "நீ இந்த வஸ்த்ரத்தை, க்ஷேமமாக இருக்கும் பொருட்டு தரித்துக்கொண்டாய். இதை அணிந்து ஆப்தர்களான க்ஞாதிகளுக்கு ரக்ஷகனாக இரு. நூறாண்டு ஜீவித்திரு." பிறகு முஞ்ஜிப் புல்லினால் செய்யப்பட்ட மேகலை என் பதை மூன்று சுற்றாக ப்ரதக்ஷிணமாய் இடுப்பில் சுற்ற

வேண்டும், (சில விடங்களில் ஸாதாரண தர்ப்பையைத் திரித்து ஒரே சுற்ருகக் கட்டுவர். ஶ்ரத்தை உள்ள க்ரு ஹஸ்தர் முன்னதாகவே உபாத்யாயரிடம் சொல்லி நல்ல முஞ்ஜிப்புல்லைக் கொண்டு மூன்று சுற்று வரும்படி பின்னச் சொல்ல வேண்டும்.) மௌஞ்ஜி அணிய மந்த்ரம்: இயம்—மாரிஷாம. பொருள்: " இந்த மௌஞ்ஜி துர்வச னங்களை அகற்றிக்கொண்டு, அழகிய வீட்டைப் பாவன மாக்கிக் கொண்டு நம்மை வந்தடைந்தது. அன்றியும் இது ப்ராண அபானங்களுக்கு பலத்தை உண்டுபண்ணிக் கொண்டு தேவர்களுக்கு ப்ரியமாயும் அழகாயும் இருக்கி றது. மேலும், இம்மேகலை யக்ஞத்தை அல்லது ஸத்யத் தை ரக்ஷிக்கின்றது. தபஸ்ஸை நன்ருகக் காக்கின்றது. ராக்ஷஸர்களைக் கொல்கின்றது. ஶத்ருக்களை அவமதிக் கின்றது. அத்தகைய அம்மேகலை நமக்கு நான்குபுறத் திலும் ப்ரதக்ஷிணமாகச் சூழ்ந்திருக்கட்டும். மங்களமான மேகலையால் ரக்ஷிக்கப்பட்ட நாம், ஓ மேகலே, உன்னைத் தரித்துக்கொண்டு, நாம் துன்பம் அடையாமல் இருக்க வேண்டும் என வேண்டுகிருேம்.

பிறகு, மித்ரஸ்ய—ததேஹம் என்ற மத்த்ரங் கூறி க்ருஷ்ணுஜினத்தைத் தரிக்கவேண்டும். மந்த்ர அர்த்தம்: " ஸூர்யனுக்குக் கண்ணுகை இருக்கிருய். அத்யந்தம் பல முள்ளதான தேஜஸ்ஸாக இருக்கிருய். யஶஸ்ஸை அளிப்பதாகவும், வ்ருத்தி உள்ளதாகவும், ப்ரகாச முள்ள தாகவும், துதிக்கத்தக்கதாகவும் அன்னத்தை அளிப்ப தாகவும் இருக்கின்ற இந்த மான்தோலை நான் தரிக்கி றேன்." இம் மந்த்ரங்களைக் குரு மாணவனுக்கும் சொல்லி வைக்க வேண்டும்.

அக்னிக்கு வடபுறத்தில் வைக்கப்பட்ட அம்மி மீது நின்று, மாணவன் வஸ்த்ரம், மேகலை, க்ருஷ்ணுஜினம் இவைகளை அணிந்தான். பிறகு அக்னிக்கு வட புறத்தில் தர்ப்பையைப் பரப்பி அதில் மாணவன் மேற்கு முகமாக அமரவேண்டும். குரு கிழக்கு முகமாக இருந்து மந்த்ரத் தைச் சொல்லி வைக்கவேண்டும். அதற்கு, ஆகந்த்ரா– க்ருஹேப்யஃ என்ற மந்த்ரம். இதன் பொருள்: " எனக்கு அபிமுகமாக வருகின்ற ஆசார்யனுடன் சேர்ந்தேன்.

அவர் அருளால் யமனே என் அருகே வராமல் விரட்டி விட்டேன். அரிஷ்டங்களைக் கடப்பேன். ஆசார்யனுக்கும் க்ஷேமம் உண்டாகட்டும். க்ருஹஸ்தாஶ்ரமம் செல்லும் வரை எனக்கும் க்ஷேமம் உண்டாகட்டும்.'' பிறகு குரு, தன் கையில் ஜல அஞ்ஜலியை எடுத்து அதை மாணவன் கையில் விடவேண்டும். அது கீழே விழுந்த பின் அந்த ஜலத்தால் மந்த்ரத்தைக் கூறி ஒரு முறையும், மந்த்ரமில்லாமல் இரு முறையும் மாணவன் தன் மீது ப்ரோக்ஷித்துக் கொள்ள வேண்டும். ஸமுத்—ஆயன். இந்த ப்ரோக்ஷண மந்த்ர அர்த்தம்: எந்த ரஶ்மிகளுடன் எங்கள் பித்ருக்களான அங்கிரஸர்கள் முன்னம் அம்ருத பானம் செய்தார்களோ, அந்த ரஶ்மியுடன் கூடிய ஜல பிந்துக்கள் என் மீது விழுந்தன. அவைகளால யான் அம்ருதத்தை அடையவேண்டும். (முன்னோரிடம் நாம் கொள்ள வேண்டிய பக்தியை இது விளக்குகிறது). அக்னி—தவ. என்ற மந்த்ரங்களைக் கூறி குரு சிஷ்யனது கையை மேல் முகமாக, அக்ரபீத் என்றபோதெல்லாம் உருவி விடுவது போல் செய்யவேண்டும்.

மந்த்ர அர்த்தம்: '' நான் உனது கையைப் பிடிப்பது அக்னியே பிடிப்பது போலாகட்டும். ஸோமன், ஸவிதா, ஸரஸ்வதீ, பூஷா, அர்யமா, அகும்ஶர், பகர், மித்ரர் ஆகிய இவர்கள் உன் கையைப் பிடிக்கட்டும். தர்மத்தினால் நீ மித்ரனுக்கு ஸமமானவனாகிறாய். அக்னியே உனக்கு ஆசார்ய ஸ்தானத்தில் இருக்கட்டும்.'' குரு தனது கையினால் தன்னைச் சரணமடைந்த மாணவனைப் பிடித்து அவனை மாணவனாக ஏற்றுக் கொள்கிறார். தான் அவனைப் பிடிப்பது முன் கூறிய தேவதைகளே பிடித்தது போலாகட்டும். அக்னியே ஆசார்யனாக இருக்கட்டும். என குரு கோருகிறார். அப்படித் தான் அவனைத் தன் கையால் பிடித்தது தேவர்களே பிடித்தது போலாகட்டும் என்று ப்ரார்த்திப்பதுடன், அந்த தேவர்களிடம் அம்மாணவனை ரக்ஷிப்பதற்காக ஒப்படைக்கிறார். அதற்கேற்ற மந்த்ரமும் அதன்பொருளும்: அக்னயே—ம்யஸௌ. இம்மந்த்ரத்தில் ' அஸௌ ' என்று வரும் இடங்களில் மாணவனது பெயரை ஶர்மாவுடன் கூறவேண்டும். ஓ—

ஶர்மன், உன்னை ரக்ஷிக்கும் பொருட்டு அக்னியிடம் உன்னைக் கொடுக்கிறேன். ஸவிதா, ஸரஸ்வதீ, ம்ருத்யு, யமன், கதன், அந்தகர், ஜலதேவதை, ஓஷதி, வைஶ்வாநரருடன் கூடிய ப்ருத்வீ ஆகியவர்களிடம் நன்கு உன்னைக் காப்பாற்றுவதற்காக அவர்களிடமே உன்னை யான் ஒப்படைக்கிறேன். பெற்றோர் தன்னிடம் (குருகுலத்திற்கு) அனுப்பும் மாணவனை குரு எவ்வளவு ஜாக்ரதையாக தேவர்கள் மூலம் காப்பாற்றுகிறார் என்பதையும் மனிதனால் ரக்ஷிக்கப்படுவதை விட தேவர்களால் காக்கப்படுவதே சிறந்தது என்பதையும் இந்த மந்த்ரம் விளக்கிக் காட்டுகிறது.

அடுத்தபடி, குரு மாணவனை, தேவஸ்–அஸெள. என்ற மந்த்ரத்தைக் கூறி அருகே அழைத்துக் கொள்கிறார். இம் மந்த்ரத்தில் காணப்படும் உபநயே என்ற சொல்லைக் கொண்டுதான் இந்த ஸம்ஸ்காரத்திற்கு உபநயனம் என்று பெயர் தோன்றிற்று. மந்த்ரார்த்தம்:—ஶர்மன், ஸவிதா எனும் தேவனது அநுக்ஞையின் மீது உன்னை யான் என்னருகே ஏற்றுக்கொள்கிறேன். மாணவனைக் குரு, தன்னருகே. வேதத்தின் அருகே, காயத்ரின் அருகே, காயத்ரியின் பொருளான பரமாத்மாவினருகே அழைத்துச் செல்கிறார் என்ற பல பொருள் கொண்டு 'உபநயனம்' என்ற சொல் அமைந்துளது. இதைக்கொண்டு, வேத வித்யை கற்க வேதம் கூறும் ஸம்ஸ்காரம் இது. விவாஹாதிகளில் செய்வதுபோல் கேவலம் உத்ஸவம் விளையாட்டு முதலியவைகளுக்கு இதில் இடமில்லை என்பது ஸ்பஷ்டமாகிறது.

ஸுப்ரஜா:—போஷை: என்ற மந்த்ரத்தைக் குரு சிஷ்யனது வலது காதில் ஜபிக்கவேண்டும். மந்த்ர அர்த்தம்: ஓ ப்ரும்மசாரி, நல்லவனும், வீரனும், வர்ச்சஸ்வியும், போஷாக்குள்ளவனுமான குழந்தை உண்டாகி, நீ நல்லப்ரஜை உள்ளவனாகவும், நல்ல வீரனாகவும், வர்ச்சஸ்வியாகவும் போஷணை உள்ளவனாகவும் ஆவாய், இங்கு குரு சிஷ்யனது கல்விக்கு மாத்ரம் பொறுப்பாளியில்லாமல் அவன் குடும்ப வ்ருத்திக்கும் விசேஷமான பல நன்மைகளுக்கும் முழுப் பொறுப்பாளியாக இருக்-

கிறார் என எடுத்துக் காட்டுகிறது இம் மந்த்ரம். தந்தை யே உபநயனம் செய்தால் கேட்கவேண்டுமா? மேலே சிஷ்யன் 'ஹே குரோ ஸவிதா எனும் தேவதையினால் அனுமதிக்கப்பட்டு நீர் என்னை உமது ஸமீபத்திற்கு அழைத்துக்கொள்ளும். நான் வேத அத்யயனம் செய் வதற்குரிய வ்ருதத்தை—ப்ரும்ம சர்யத்தை— அடைந்து விட்டேன் ; என்ற பொருள்கொண்ட ப்ரும்மசர்ய— ப்ரஸூத: என்ற மந்த்ரத்தைக் கூறவேண்டும். இம் மந்த்ரத்தில், யார் ப்ரும்மசாரி ? ப்ரும்மசாரி என்ன செய்ய வேண்டும்? என்பது நன்கு எடுத்துக் காட்டப் படுகிறது. வேதத்திற்கே ப்ரும்மம் என்று பெயர். அந்த வேதத்திற்குத் தாய்போன்ற காயத்ரிக்கும் ப்ரும்மம் என்று பெயர். வேத்ததாலும், வேத ஸாரமான காயத் ரியாலும், வேதாந்தத்தாலும் கூறப்படும் தெய்வத் திற்கும் ப்ரும்மம் என்று பெயர். அந்த மூன்று வகை யான ப்ரும்மத்தினிடம் ஸஞ்சாரம் செய்பவர் ப்ரும்ம சாரியாவர்.

பிறகு குருவின் கேள்விக்கு ஶிஷ்யன் ஸமாதானம் கூறும் வகையில் மந்த்ரம் அமைந்துளது. ' நீ என்ன பெயர் உள்ளவன் ? என குரு கேட்க. தன் பெயரைக் கூறி, சிஷ்யன் இன்ன பெயருள்ளவன் எனச் சொல் கிறான். பிறகு குரு "நீ யாருடைய ப்ரும்மசாரியாக இருக்கிறாய் ?" என்று கேட்க, "ப்ராணனுக்கு ப்ரும்ம சாரியாக இருக்கிறேன்" என்கிறான். இந்த மந்த்ரத்தி லிருந்து பல விஷயங்கள் புலப்படுகின்றன. 'கோ நா மாஸி ?" உனக்கு என்ன பெயர்? என்ற கேள்வி ஏற்கனவே, அதாவது அதற்குரிய காலத்தில் ஜாதகர்மா ஆனவுடன் நாமகரணம் ஆய்விட்டதென்பதைக் காட்டு கிறது. இப்போது நடப்பதுபோல், உபநயனத்தன்றே நாமகரணம் நடத்தி இருந்தால். சில நாழிகைக்குள் அதை மறந்து உன் பெயர் என்ன என்று கேட்கவேண்டிய அவஶ்ய மிராது. அதனால் நாமகரணம் காலத்தில் நடந்திருக்கும் என்பது தெளிவாகிறது. அன்றியும் உபநயன மந்த்ரம், மந்த்ரார்த்தம். காயத்ரியின் பொருள் தெரியாதவன் ஒருவனுக்கு உபநயனம் செய்து வைப்பது

அக்குமாரனை இருளில் தள்ளுவதாகும் என்ற வசனப்படி, இவைகளை அறியாத தகப்பன் உபநயனம் செய்வதைவிட, இவைகளை நன்கு உணர்ந்த குருவைப் போன்றவர் உபநயனம் செய்து வைக்க வேண்டும் என்ற ஒரு மஹரிஷியின் கக்ஷிக்கு இம் மந்த்ரம் பல மளிப்பது போலாகும். எப்படி? குருவினிடம் புதியவனான மாணவன் தனக்கு உபநயனம் செய்து வைக்க வேண்டுமென்று வந்தபோது. தந்தையாயிருந்தால் பிள்ளையின் பெயர் தெரியுமல்லவா? நீ யார் எனக் கேட்பாரா? அவன் பெயர் தெரியாததால், நீ யார், உன் பெயரென்ன என்று கேட்க அவஶ்யமுண்டு. அன்றியும் நீ யார் என்ற கேள்விக்கும் பின்னால் குரு சொல்லும் உபதேச மந்த்ரங்களுக்கும் பொருள் விளங்கும்படி இளமையிலேயே வேதம் தவிற மற்ற காவ்ய க்ஞானம் இருந்திருக்கும் எனத் தெரிகிறது. "யாருடைய ப்ரும்ம சாரி? என்ற கேள்விக்கு "ப்ராணனுடைய ப்ரும்ம சாரி" என்கிறான் சிஷ்யன். இங்கு ப்ராணன் என்பது ஆத்மாவாகும். முன் கூறிய வேதம் காயத்ரீ, பரமாத்மா அல்லது பரப்ரும்மம் என்ற மூன்றில் எதை நாடுகிறாய்? என்ற குருவின் கேள்விக்கு "பரமாத்ம ஸ்வரூபத்தையே நாடுகிறேன்" என்று சிஷ்யன் சொல்லும்போது ப்ரதானமான பரமாத்மாவை உபதேசி எனில் க்ரமமாக காயத்ரீ, வேதம் இவைகளும் கூறப்படும் என்பதும் ஸ்பஷ்டமாகிறது.

பிதா சொல்லவேண்டிய மந்த்ரம் :—ஶர்ம ஏஷதே—ஸஞ்சர ஶர்மன்— "ஹே ஸூர்ய தேவ, உன்னுடைய ப்ரும்மசாரி இவன். இவனை நீர் ரக்ஷியும். அவன் உமது புத்ரன். அவன் மரணம் அடையாதிருக்கட்டும்: தீர்க்காயுஸ்ஸாக இருக்கட்டும். அக்னி, வாயு, ஸூர்யன், சந்த்ரன், ஜலம் இவைகள் எந்த வகையான நன்மையைப் பெற்றிருக்கின்றனவோ அந்த நன்மையை இந்த மாணவன் பெறட்டும்." அடுத்த மந்த்ரம் :—அத்வநாம்—பாரமஶீய. அர்ச்சிராதி வழிகளுக்குத் தலைவனான ஸூர்ய! உமது அருளால் இம் மாணவன் துன்பமில்லாமல் ப்ரும்மசர்ய மார்க்கத்தை அடையட்டும்.

அக்னி ப்ரதிஷ்டை செய்து ஆஜ்ய பாகம் வரை முடித்துப் பின்னர் உபநயனத்திற்குரிய முக்ய ஹோமங்கள் 11 செய்யவேண்டும். மந்த்ரத்தை ஆசார்யன் கூறி, மாணவன் கையைப் பிடித்துக்கொண்டு ஹோமம் செய்யவேண்டும். சில மந்த்ரம் மாணவனுக்கும், சில இருவருக்குமாம். (1) யோகே— ஷுதயே ஸ்வாஹா. குதிரையை ரதத்தில் பூட்டும்போது எப்படி அதன் வேகம் வ்ருத்தியாகின்றதோ அப்படி ஒவ்வொரு கார்யத்திலும் இந்த்ரனது சக்தி வ்ருத்தியாகும். அத்தகைய இந்த்ரனை நாங்கள் அவருக்கு தோழனைப்போலிருந்து ஒவ்வொரு கார்யத்திலும் எங்களை ரக்ஷிக்கும் பொருட்டு கூப்பிடுகிறோம். இந்த்ராய இதம் ந மம. (2) இமமக்ன—ஸத் ஸ்வாஹா. அக்னி வருண ஸோமாதிப்ய : விச்வேப்யோ தேவேப்யः இதம் ந மம. ஹே அக்னே, இம் மாணவனை ஆயுஷ்மானாகவும் வர்ச்சஸ்வியாகவும் செய்யும். ஹே, வருண, இவனுக்கு விவாஹமானபின் ப்ரியமான புத்ரனை அளியும். ஓ ஸோமராஜனே, நீங்களும், ஓ அதிதே நீங்களும், இவனுக்குத் தாயைப்போலிருந்து ஸுகத்தைத் தாருங்கள். ஓ விச்வே தேவர்களே, நீங்களும் இவன் தீர்க்காயுஸ்ஸாக இருந்து ஸுகத்தை அனுபவிக்கும்படி செய்யுங்கள். (3) சத மின்னு — கந்தோ ஸ்வாஹா. தேவேப்ப இதம் ந மம. ஓ தேவர்களே. எங்களுக்கு மிக அல்பமாக நூறு வயதே உளது. அந்த வயதிலும் சிறிதுகாலம் சிறுவர்களாக இருக்கிறோம்; சிறிது காலம் சிறுவர்களுக்குப் பிதாவாக இருக்கிறோம். ஆயுளே அல்பம். அதில் இளமை, கிழத்தனம், குடும்பக் கவலை ஆக பல கஷ்டம். இதனிடையிலே அபம்ருத்யுவும் நேராதபடி தீர்க்காயுஸ்ஸாகச் செய்யுங்கள். (4) அக்னிஷ்ட—ஆததாது ஸ்வாஹா. அக்னீந்த்ர மருத் - ஆதித்ய வஸுப்ய : இதம் நமம. அக்னி நமது ஆயுளைச் சிறந்ததாகச் செய்யட்டும். புஷ்டியை வ்ருத்தி செய்யட்டும். இந்த்ரன் ஆதித்யர்களுடனும் வஸுக்களுடனும் நமக்குப் புஷ்டியைத் தரட்டும். (5) மேதாம்—மே ஸ்வாஹா. அங்கிரோப்ய : ஸப்தர்ஷிப்ய: ப்ரஜாபதயே அக்னயே இதம் நமம। எனக்கு அங்கிரஸ்ஸுகள் மேதையைத் தரட்டும், ப்ரஜாபதி, அக்னி மேதையைத் தரட்டும். (6) அப்ஸராஸு

—இஹ ஸ்வாஹா. மேதா யஶோப்யாம் இதம் நமம । அப்ஸரஸ்ஸுகளிடம் உள்ள மேதையும், கந்தர்வரிடமுள்ள யஶஸ்ஸும். தெய்வீகமானதும், மானுஷிகமுமான மேதை என்னை வந்து அடையட்டும். (7) இமம்—ராசகே ஸ்வாஹா. வருணாய இதம் நமம । ஹே வருண, இந்த எனது ஆஹ்வானத்தைக் கேளும். கேட்டு இப்பொழுதே என்னை ஸுகப்படுத்தும். உம்மை யான் பாலகன் என துதிக்கிறேன். (8) தத்வா—ப்ரமோஷீ ஸ்வாஹா. வருணாய இதம் நமம. ஓ வருண ! பலரால் துதிக்கப்படும் நீர் நமது ஆயுளை அபஹரிக்காதீர். கோபமின்றி சாந்தராக நாம் கூறுவதை அறியும். பின் சொல்வதை யான் உம்மிடம் யாசிக்கிறேன். மந்த்ரத்தால் நீர் துதிக்கப்படுபவர். யக்ஞம் செய்பவர் எல்லோரும் ஹவிஸ்ஸுகளால் உம்மையே வேண்டுகின்றனர். (9) த்வன்னோ-மத் ஸ்வாஹா. அக்னீ வருணாப்யாம் இதம் நமம. ஓ அக்னே, நீர் எல்லாம் அறிந்தவர். என்மீது வருண ராஜனுக்கு இருக்கும் கோபத்தை அகற்றும். நீர் யாகம் செய்பவரில் சிறந்தவர். நன்றாக ஹவிஸ்ஸை எடுத்துச் செல்பவர். ப்ரகாசமுள்ளவர். எனது பகைவரால் உண்டாகும் கபடம், பந்தம், ஹிம்ஸை முதலியவைகளை என்னிடம் வராதபடி அகற்றும். (10) ஸத்வம்நோ— ஏதி ஸ்வாஹா. அக்னி வருணாப்யாம் இதம் நமம. ஹே அக்னே, நீர் தேவர்களில் முதல்வர். இந்த இரவு விடியும்போது என்னைக்காக்க என் அருகில் இரும். வருணன் என்மீது அவன் பாஶத்தை வீசாதபடி செய்யும். எனது இஷ்டத்தைத் த்தாரும். நான் அளிக்கும் ருசியான ஹவிஸ்ஸைச் சாப்பிடும். நான் உம்மை அடிக்கடி அழைக்கும்படி இரும். (11)த்வமக்னே—பேஷஜம்— ஸ்வாஹா. அக்னயே அயஸ இதம் நமம । ஓ அக்னே, நீர் பக்தருக்குத் தேடி அடையத்தக்கவராக இருக்கின்றீர். குற்றமற்றவரான நீர் எங்கள் மனதிற்கும் ஹிதமாயிருக்கிறீர். அத்தகைய நீர் நாங்கள் அளிக்கும் ஹவிஸ்ஸைத் தேவர்களுக்குத் தருகின்றீர். அப்படிப்பட்ட நீர் எங்களுக்கு நன்மையைத் தாரும்.

இந்த ஹோமம் ஆனபின் இதற்கு உத்தராங்கமாக ஜயாதி ஹோமங்களைச் செய்யவேண்டும். பிறகு, இந்த

உப நயன கர்மாவில் யஜுர்ப்ரேஷ ப்ராயஶ்சித்தம் கரிஷ்யே. புவ ஸ்வாஹா, வாயவ இதம் நமம. அனுக்ஞாதம் —ஸ்வாஹா என்ற ஹோமங்களையும் செய்ய வேண்டும். பரிஷேசனம், ப்ரணீதா தீர்த்த ப்ரோக்ஷணம், தாய் தந்தை புத்ரன் ஆகிய மூவர்க்கும்.

### ப்ரும்மோபதேஶம்

ஆசார்யன் மாணவனுடனும், மனைவியுடனும், 'நமஸ் ஸதஸே' என்று பெரியோர்கள் மீது அக்ஷதையைப் போட்டு, நமஸ்காரம் செய்து, தக்ஷிணை, தாம்பூலத்தைத் தட்டுடன் கையில் எடுத்துக் கொண்டு, அஶேஷே—ஸ்வீக்ருத்ய என்று கூறி, பெரியோருக்குத் தக்ஷிணை தரவேண்டும். "ஓ பரிஷத்தே, தங்கள் திருவடியில் ஸமர்ப்பித்த தக்ஷிணை மிகச்சிறியதாக இருந்தாலும், யதோக்த தக்ஷிணைபோல் தாம்பூலத்தையும் ஏற்றுக்கொண்டு, ப்ரும்மோபதேஶ யோக்யதை உண்டாக வேண்டும் என அருள்புரிக" என்பது அதன் பொருள். இது ப்ரும்மோபதேஶம் பெறுவதற்கு மாணவனுக்கும், உபதேஶம் செய்யத் தனக்கும் யோக்யதை உண்டாக வேண்டுமென ப்ரார்த்திப்பதற்காக முக்ய தக்ஷிணை அளிப்பதால், அந்த காயத்ரியை நன்கு ஜபிப்பவரும், அத்யயனம் செய்தவரும், ஶிஷ்டர்களுமான பெரியோர்களுக்கு முழுத் தேங்காயும் ஶக்திக்கேற்ற தக்ஷிணையும் தரவேண்டும். இச்சமயம் வேஷ்டியும் கொடுக்கலாம். பிறகு சொல்லும் மந்த்ரம்: நக்ஷத்ரே—குமாரஸ்ய, ஜன்ம ப்ரப்ருதி—யோக்யதா ஸித்திம் அனுக்ரஹாண. இந்த நக்ஷத்ரம், ராசியில் பிறந்த இந்த ஶர்மாவுள்ள என் குமாரனுக்கு, பிறந்தது முதல் இதுவரை, பால்ய வயதில் அறியாமையால் தாய் தந்தைகளை உபேக்ஷை செய்ததால் உண்டானதும், தனது வர்ணம் அல்லது வேறு வர்ணத்து ஸ்த்ரீகளது பாலையும், தன் தாயின் பாலையும் உட்கொண்டதால் உண்டானதும், தகாதவருடன் உட்கார்ந்து உண்டது, உச்சிஷ்டம் அருந்தியது, பங்க்திக்கு ஏற்காதவருடன் உட்கார்ந்து உண்டது, தன் ஜாதியாரையும், பிற ஜாதியார் முதலியவர்களையும் தீண்டியது, அந்தந்த காலத்தில் தக்க ஶரீர ஶுத்தி செய்து கொள்ளாதது முதலியவை

களால் உண்டானதுமான பாபங்கள் அகன்று, மாண வனுக்குக் காயத்ரியை உபதேஶம் பெறவும், எனக்கு உபதேஶிக்கவும் யோக்யதை உண்டாக வேண்டுமென தாங்கள் அருள் புரியுங்கள்,'' என முன் கூறிய மந்த்ரத் தால் வேண்டுகிறேம்.

தக்ஷிணையைப் பெற்ற ஸாதுக்கள் '' ததாஸ்து. யோக்யதா ஸித்தி ரஸ்து '' என அநுக்ஞை தருவார்கள். அதைப் பெற்றுக்கொண்டு '' ப்ரும்மோபதேஶ முஹூர் த்த லக்நாபேக்ஷயால் ஆதித்யன் முதலான நவக்ரஹங் களது ப்ரீதியை ஸம்பாதிப்பதற்காக க்ரஹப்ரீதி என்று தக்ஷிணை தரவேண்டும். அக்னிக்கு மேற்குப் புறத்தில் வடக்கு நுனியாக கூர்ச்சத்தை வைத்து மாணவன் குருவினிடம் ''கூர்ச்ச:'' என்று கொடுக்கவேண்டும். பிதா ''ஸுகூர்ச்ச:'' என்று கூறி 'ராஷ்ட்ர ப்ருதஸி—யோஷம்' என் றும் கூறி அதன்மீது அமரவேண்டும். '' ஓ கூர்ச்சமே, நீ ராஜ்யத்தையே வஹிக்கும் ஶக்தி வாய்ந்தவர். எங்கள் ஆசார்யனுக்கு ஆஸனமாக இரு. உன்னை விட்டு யான் பிரியாது இருக்கவேண்டும். (கூர்ச்சம் என்பதே குருச்சு அல்லது கூர்ச் என கூறப்படுகிறது போலும்). ஆசார் யன் பணிவிடை செய்ய அடிக்கடி ஆஸனத்தை யான் அவருக்கு அளிக்கவேண்டும். பிறகு குமாரன் மேற்கு முகமாக உட்கார்ந்து, குருவின் பாதங்களை அலம்பி, சந் தனத்தால் அலங்காரம் செய்து ஸ்வர்ணபுஷ்ப தக்ஷிணை அளித்து, தனது வலது கையினல் அவருடைய வலது காலையும், இடது கையால் இடது காலையும் பிடித்துக் கொண்டு, நமஸ்கரித்து, '' ஸாவித்ரீம் போ அனுப்ரூஹி '' என ப்ரார்த்திக்க வேண்டும். ப்ரும்மா, பத்னீ இருவரும் அருகிலிருக்க பட்டினுல் மாணவனையும் தங்களையும் மூடிக் கொண்டு மாணவனது வலது காதில் பிதா காயத்ரீ மந்த் ரத்தை உபதேஶிக்கவேண்டும்.

முதலில் ப்ரணவத்துடன் முதல் வ்யாஹ்ருதியைக் கூறி காயத்ரியின் முதல் பாதத்தையும், பிறகு இரண்டா வது வ்யாஹ்ருதியைக் கூறி இரண்டாம் பாகத்தையும், பிறகு மூன்ரும் வ்யாஹ்ருதியைக் கூறி மூன்ரும் பாதத் தையும், பின்னர் முதல் வ்யாஹ்ருதியைக் கூறி, காயத்ரீ

யின் முதல் பாதம் இரண்டாம் பாதம் இரண்டையும் சேர்த்தும், பின்னர் இரண்டாவது வ்யாஹ்ருதியைக் கூறி மூன்றும் பாதத்தையும், பின்னர் மூன்ருது வ்யாஹ்ருதியைக் கூறி மூன்று பாதங்களையும் சேர்த்தும் உபதேசிக்க வேண்டும். இதேபோல் மாணவனைக் கூறும்படி சொல்லி வைக்கவேண்டும். "ப்ரும்மோபதேஶ முஹூர்த்தம் ஸுமுஹூர்த்தமாக இருக்கட்டும் என அநுக்ரஹம் செய்யுங்கள்" என பிதா கூறவேண்டும். ததாஸ்து ஸுமுஹூர்த்தோஸ்து' என ப்ராம்மணர் ஆசீர்வதிக்க வேண்டும்.

மாணவன் அவ்ருதமஸௌ—கோபாய என்ற மந்த்ரத்தைக் கூறி, மேல் உதட்டை ஜலத்துடன் தொட்டுத் தடவி ஆசமனம் செய்யவேண்டும். காயத்ரீ மந்த்ர அர்த்தம்: — எந்ததேஜஸ் எல்லோராலும் த்யானம் செய்யத் தக்கதோ, அப்படிப்பட்ட தேவரான ஸூர்யனுடைய, மிக அழகானதும் பாபங்களை அகற்றுவதுமான தேஜோமயமான ரூபத்தை த்யானம் செய்கிறோம். எந்த தேவர் நமக்கு தர்ம விஷயமான புத்தியைத் தூண்டுகிருரோ. அவ்ருதம் என்ற மந்த்ர அர்த்தம்: நான் இந்த க்காயத்ரீ மந்த்ரத்தால் வ்ருத்தி அடைந்தேன். என்னுள்ளே இருக்கும் சிறந்த ஆத்மாவே! காயத்ரீ எனும் இந்த தனத்தைக் காப்பாற்று. 'ப்ரும்மண' என்ற மந்த்ரத்தைக் கூறி, இரு காதுகளையும் தொடவேண்டும். அதன் பொருள்: "ஒ கர்ணங்களே, காயத்ரீ எனும் மந்த்ரத்திற்கு நீங்கள் ஆணி போலிருங்கள். காயத்ரீம்ய ஸாவித்ரீ எனப்படும். அதைப்பெற்ற பின் மாணவன் அந்த உத்தம தனத்தைக் காப்பாற்றும்படி தன் அந்தராத்மாவை வேண்டுகிருன். இரு காதுகளையும் பார்த்து, ஆணி அடித்தால் எப்படி பெட்டியிலுள்ளதை வெளியே எடுக்க முடியாதோ அப்படி காயத்ரீ மஹாமந்த்ரத்தை உள்ளேயே ஜாக்ரதையாக வைத்து ரக்ஷியுங்கள். கேட்ட வழியே மந்த்ரம் வெளிச் சொல்லாதிருக்க வேண்டும் என மந்த்ரம் கூறுகிறது.

இதைக் கவனித்தால், காயத்ரியை எவ்வளவு மதிப்புடன் ஜாக்ரதையாக ரக்ஷிக்கும்படி வேதமே கூறு

கிறது என நன்கு அறியலாம். ஆகையால் காயத்ரீ விஷயத்தில் நாம் மிக ஶ்ரத்தையுடன் நடக்கவேண்டும். அபஸ்வர மில்லாதபடியும், எழுத்துப் பிழை இல்லாத படியும், பொருளேயும் விளக்கி, குழந்தைகளுக்குச் சொல்லவேண்டியது பிதாவின் கடமையாகும். காயத்ரீ உபதேஶமான பின்புதான் மாணவனுக்கு ஸந்த்யா வந்தனம், ஸமிதாதானம், வேதாத்யயனம் முதலிய கர்மாக்களில் அதிகாரம் ஏற்படுவதால், காயத்ரியையும் ஸந்த்யா வந்தனத்தையும் குழந்தைகள் ஶ்ரத்தையுடன் செய்யும்படி தூண்டுவது தந்தைக்கு மாத்ரமல்ல, தாய்க்கும் அது கடமையாகும்.

'பலாஶ தண்டத்தை, ஸுஶ்ரவ:—பூயாஸம் என்ற மந்த்ரத்தைக் கூறி, தரிக்கவேண்டும். மந்த்ர அர்த்தம்: தேவர்கள் கூறிய ப்ருஹ்மவாதத்தைக் கேட்டு பலாஶ மரம் ஸுஶ்ரவஸ் என்ற பெயரைப் பெற்றது. அத்தகைய ஓ ஸுஶ்வரவஸ் எனும் பலாஶ தண்டமே! உன்னைப் போல் நான் ஸுஶ்ரவஸ்ஸாக ஆகவேண்டும். நல்ல வேத விஷயங்களைக் கேட்கவேண்டும். நீ எப்படி தேவர்களது நிதியைக் காக்கின்றாயோ அங்ஙனமே நானும் ப்ராம்மணர்களது நிதியான வேதத்தைக் காக்கவேண்டும். ஸ்ம்ருதஞ்சமே—பூயாஸம் என்ற மந்த்ரத்தை மாணவனுக்குச் சொல்லி வைக்கவேண்டும். மந்த்ர அர்த்தம்: நினைவு, வேண்டாததை மறப்பது தோஷத்தை நிந்திப்பது, குணத்தை நிந்திக்காமலிருத்தல், நல்ல விஷயத்தில் ஶ்ரத்தை, மற்றதில் அஶ்ரத்தை, நற்கல்வியை அறிவது மற்றதை அறியாதது, நல்லதைக் கேட்பது, மற்றதைக் கேளாமலிருத்தல், ஸத்யம், அவஶ்யமானதில் அந்ருதம், பிக்ஷாசரணாதி தபஸ், ஶக்தியில்லாத தினத்தில் தவமில்லாமை, நியம அத்யயனம், வ்ருதம், அஶக்தனான போது அவ்ருதம், இம்மாதிரி இரண்டு இரண்டுகளாக அமைந்த எல்லாம் எனக்கு வ்ருதமாக இருக்கட்டும்.

ப்ராம்மணர்களுக்கு வேத விஷயமாக உள்ள வ்ருதமும், இந்த்ரன், ப்ரஜாபதி, தேவன், மனுஷ்யன், மனுஷ்ய ராஜன், பிதா, பித்ரு ராஜன், கந்தர்வன், அப்ஸரஸ் இவர்களுடன் கூடி அக்னி பகவானுடைய வ்ருதமும்

எனக்கு வ்ரதமாகும். என்னிடம் எனக்குத் தோன்றிய வ்ரதம் (அதாவது ஆசார்யர் மற்றொரு மாணவனை ஒரு கார்யமாக அனுப்பும்போது நானே அந்த வேலையைச் செய்வது) முதலிய வ்ரதங்கள் என்றால் கைக்கொள்ளத் தக்கனவாம். அக்னியின் வ்ரதம் வ்ரதத்தைக் காப்ப தாம். இந்த்ரனது வ்ரதம் உலகில் ப்ரதான மாயிருத் தல். ப்ரஜாபதி வ்ரதம் படைத்தல். தேவ வ்ரதம் தானம் செய்தல். தேவர்களை ஸந்தோஷப்படுத்துவது தேவராஜ வ்ரதம். ப்ரியமாகப் பேசுதல் மனுஷ்ய வ்ரதம். குடிகளை ரக்ஷிப்பது மனுஷ்ய ராஜ வ்ரதம். புத்ரோத்பத்தி செய்வது பித்ருக்களது வ்ரதம். ஸமமாக இருத்தல் யமனது வ்ரதம். தேவர்களைத் துதிப்பது கந்தர்வர்களது வ்ரதம். நன்கு பரிசரணை செய்வது அப்ஸரஸ்களின் வ்ரதம். இத்தகைய வ்ரதங்கள் ஒரு மனிதனது வாழ்க்கைக்கு மிக அவச்யமானதால், நல் வாழ்க்கைக்கு வழிகாட்டியான ப்ரும்மசர்ய வ்ரதத்தி லேயே இவை அனைத்தும் வேண்டப்படுகின்றன. ஆத லால் உபநயனம் என்பது கேவலம் ஜீவனுக்கு ஸம்ஸ்கா ரத்தை அளிக்கும் அத்ருஷ்ட கர்மா மாத்ர மல்ல. இல்லற வாழ்க்கைக்கு மிக அவச்யம் வேண்டிய ஸகல பாக்யங்களையும் தேவர்களிடம் வேண்டுகின்ற த்ருஷ்ட பலமளிக்கும் கர்மாவுமாகும்.

உதாயுஷா—அநு. என்ற மந்த்ரத்தைக் கூறி மாண வன் எழுந்திருக்கவேண்டும், மந்த்ரார்த்தம்:— ஓ தேவர்களே, ஆயுஸ்ஸுடனும், எனக்கு ஏற்பட்ட நூறு ஆயுஸ்ஸுடனும், பலத்தை அளிக்கும் ஓஷதி ரஸத்துட னும், பர்ஜன்யனுக்குள்ள சுஷ்மம் என்ற பலத்துட னும் கூட நான் எழுந்திருக்கிறேன். (குருவினிடம் காயத்ரீ உபதேசத்தை உட்கார்ந்தபடியே கேட்டு, மாணவன் எழுந்திருக்கும் போது, தான் தீர்க்காயுஸ்ஸாக இருந்து நல்ல பலத்துடன் இந்த உத்தம காயத்ரியை நன்கு ஜபிக்கவேண்டும் என ப்ரார்த்திக்கிறான்). தச்ச க்ஷுர்—ஸூர்யந்த்ருசே என்ற மந்த்ரங்களால் ஸூர்யனை உபஸ்தானம் செய்து தர்சிக்க வேண்டும். மந்த்ர அர்த் தம்: ஸூர்ய தேஜஸ்ஸானது மிக ப்ரஸித்தமானது.

5

உலகிற்குக் கண்போன்றது. தேவேந்த்ரனால் அமைக்கப் பட்டது. கிழக்கு திக்கில் பரிசுத்தமாகத் தோன்றுவது. நூருண்டு அந்த ஜ்யோதிஸ்ஸை யான் பார்த்துக் கொண்டு இருக்கவேண்டும். நூருண்டு செல்வத்துடன் ஜீவித்திருக்கவேண்டும். புத்ர பௌத்ராதிகளுடன் இன்பத்தை அனுபவிக்க வேண்டும். ஐஶ்வர்த்துடன் இருக்கவேண்டும். ப்ரியமும் ஹிதமுமான சொற்களைக் கேட்கவேண்டும். நன்கு அவர் பெருமையைக் கூறவேண் டும். எவராலும் ஹிம்ஸிக்கப் படாமல் நான் இருக்க வேண்டும். பல காலம் ஸூர்யனைப் பார்த்துக்கொண்டே இருக்க வேண்டும் (உபதேஶம் ஆனவுடன் அம்மந்த்ரத் தின் அர்த்தமான ப்ரத்யக்ஷ ஸூர்யனைத் தர்ஶிப்பதும் துதிப்பதும் மிகப் பொருத்தமானது. அன்றியும், ஸூர்ய ரஶ்மி நமது அரோக த்ருடகாத்ரத்திற்கு முக்ய காரண மானதால் அவரிடம் கேட்கும் ப்ரார்த்தனை மிக அர்த்த முள்ளது, தற்கால இன்பத்தை மாத்ரம் கோராமல், புத்ர பௌத்ரர்களின் ஸுகத்தையும் கோருவது தீர்க்க தர்ஶனத்தைக் காட்டுவதாகும். இம் மந்த்ரம் நித்யம் மாத்யான்ஹிக உபஸ்தானத்திலும் கூறப்படுகிறது.)

ஸூர்ய உபஸ்தானம் ஆனபின், மாணவன் தன்னை விட்டுப் பிரியாமல் இருப்பதற்காக குரு, யஸ்மின் — (ம்யஸௌ) — ஶர்மன் என்ற மந்த்ரத்தைக் கூறி, மாண வனது வலது கையைப் பிடிக்கவேண்டும். மந்த்ர அர்த்தம்: ஏற்கனவே தோன்றியவரும், இப்போது பிறக் கின்றவரும், இனி பிறக்கப்போகின்றவருமான மனிதர் ப்ரும்மாவினிடம் தங்கி இருக்கிறார்கள், அந்த ப்ரும்மா வினுடைய உத்திரவினால் உன்னை யான் பிடித்துக் கொள்கிறேன், எனக்காக உன்னை எற்றுக்கொள்கிறேன். ஓ—ஶர்மன். இது ஆன பின் ஸமிதாதானம். (உபநயன மான வுடனேயே ஆரம்பித்து விவாஹம் ஆகும்வரை ஸந்த்யாவந்தனம் போல் விடாமல் நித்யம் செய்ய வேண்டிய கர்மா இது. ஸமிதாதானம் செய்யாத தினத்தில் ப்ரும்மசாரியின் ஆயுளை அந்தகன் அபஹரிப்ப தாக வேதம் கூறுகிறது. அதாவது, எத்தனை நாள் ப்ரும்மசாரி ஸமிதாதானம் செய்யவில்லையோ அத்தனை நாள் அவனது ஆயுள் குறையும். பெற்றோர் இதைக்

கவனித்து, 10 நிமிஷத்தில் செய்யக்கூடியதும், ஆயுஸ், பலம், வர்ச்சஸ், மேதை, ஆரோக்யம், செல்வம், ஸந்ததி முதலியவைகளை அளிக்கக் கூடியதுமான இக் கர்மாவை, காலை மாலைகளில் செய்யும்படி கவனிக்கவேண்டும்.)

ஸமிதாதானம்

ஓம் ஶுக்லாம்—ஶாந்தயே. ஓம் பூ:—ஸுவரோம். மமோபாத்த—ப்ரீத்யர்த்தம் ப்ராத: ஸமித: ஆதாஸ்யே. பரித்வாக்னே— ப்ரும்ம சாரிபிஃ என்ற மந்த்ரத்தைக் கூறி நான்கு புறமும் உள்ள அக்னியை ஒன்றாகச் சேர்ப்பதுபோல் பரிஸமூஹனம் செய்யவேண்டும். பிறகு மந்த்ரம் ஒன்றுமில்லாமல் அக்னியைப் பரிஷேசனம் செய்யவேண்டும். மந்த்ர அர்த்தம்: ஹே அக்னே, உன்னை யான் நான்கு புறமும் துடைத்து சோதனம் செய்கிறேன். அதனால் எனக்கு ஆயுஸும் தனமும் வ்ருத்தியாகட்டும். நல்ல குழந்தை பிறந்து அதனால் யான் நல்ல குழந்தை உள்ளவனாகவும், பேரனால் நல்ல பேரன் உள்ளவனாகவும், வர்ச்சஸ்ஸினால் நல்ல வர்ச்சஸ் உள்ளவனாகவும், புஷ்டி கரமான பொருட்களால் ஸுபோஷனாகவும், வீட்டினால் நல்ல வீடுள்ளவனாகவும். நல்ல ஆசார்யனால் ஸுபதியாகவும் நல்ல மேதாவியாகவும், என்னுடன் அத்யயனம் செய்யும் ப்ரும்ம சாரிகளால் நான் நல்ல வேதாத்யயன ஶீலனாகவும் ஆக வேண்டும். ஸமித்துக்களை ஸ்வாஹா என்றபோது அக்னியில் வைக்கவேண்டும். 12 ஆஹுதிகள். (1) அக்னயே-ஸமேதய ஸ்வாஹா. அர்த்தம்:—ஓ அக்னே, மிகப் பெரியவரும், செல்வமும் மேதையும் நிறைந்தவருமான உமக்காக இந்த ஸமித்தைக் கொண்டு வந்தேன். இந்த ஸமித்தால் நீர் ப்ரகாசிப்பதுபோல், தீர்க்க ஆயுஸ்ஸாலும், வர்ச்சஸ்ஸாலும், நல்ல லாபத்தாலும், மேதையாலும், ப்ரஜையாலும், பசுக்களாலும், ப்ரும்ம வர்ச்சஸ்ஸாலும், உண்ணும் ஶக்தியினாலும், என்னை நன்றாக ப்ரகாசிக்கும்படி செய்யும், (2) ஏதோஸி—ஸ்வாஹா. அர்த்தம் :— ஓ ஸமித்தே. நீ அக்னி ஜ்வலிப்பதற்கு ஸாதனமாக இருக்கிறாய். உன்னை ஹோமம் செய்யும் நானும் வ்ருத்தியடைய வேண்டும். (3) ஸமிதஸி—மஹி ஸ்வாஹா. அர்த்தம் :—நீ ஸமித் அல்லவா? உன்னால்

நானும் நன்கு வ்ருத்தியடைய வேண்டும் (4) தேஜோஸி —தேஹி ஸ்வாஹா. அர்த்தம் :— தேஜஸ்ஸுக்கு நீர் காரணம். என்னிடத்தில் தேஜஸ்ஸை உண்டுபண்ணும். (5) அபோ—வர்ச்சஸா ஸ்வாஹா. ஸமிதாதானம் எனும் இக் கர்மாவைச் செய்கிறேன். இதனால் எனக்கு மேன்மேலும் கர்ம ஶ்ரத்தை வ்ருத்தியாகவேண்டும். ஓ அக்னியே ஸமித்தினால் நான் உம்மை ப்ரதிதினமும் அர்ச்சிக்கவேண்டும். என்னை நீர் வர்ச்சஸ் உள்ளவனாகச் செய்யும். (6) ஸம்மா—தநேனச ஸ்வாஹா. அக்னே, என்னை வர்ச்சஸ், ப்ரஜை, தனம் இவைகளுடன் கூடிய வனாகச் செய்யும் (7) வித்யுன்மே—ரிஷிபி: ஸ்வாஹா. இக் கர்மாவைச் செய்யும் என்னை தேவர்களும் ரிஷிகளு டன் கூட தேவேந்த்ரனும் அறிவர். (8) அக்னயே—நாகாய ஸ்வாஹா. ப்ரபை யுள்ளவரும், ஸ்வர்க்கத்தில் நாகன் என்ற பெயருள்ளவருமான அக்னிக்கு ஸமித்தை அளிக்கிறேன். (9) த்யாவா-ஸ்வாஹா. த்யுலோகமாயும் பூமி வடிவனாயுமுள்ள அக்னிக்கு ஸமித்தைத்தருகிறேன். (10) ஏஷாதே—மானஶ்ச ஸ்வாஹா. ஓ அக்னே, உமக்கு இந்த ஸமித்தைத் தருகிறேன். அதனால் நீர் வ்ருத்தி யடையும். பூர்ணனாக இரும். நானும் அதனால் வ்ருத்தியாக பூர்ணனாக இருக்கிறேன். (11) யோ மாக்னே—குரு ஸ்வாஹா. ஓ அக்னே, உலகிலுள்ள நல்ல பொருள்களைப் பெறுவதற்கு ஏற்றவனான எனக்கு அதை அளிக்கவேண்டும். அதை யான் பெறக்கூடாது என எவன் நினைக்கின்றானோ அவனை அந்த பாக்கியம் இல்லாதவனாகச் செய்யும் (12) ஸமித மாதாய-ஸ்வாஹா ஓ அக்னே நான் இந்த ஸமித்தை உமக்கு அளித்து பூர்ண ப்ரதனாக ஆகவேண்டும். ஆஹுதி முடிந்தது.

பிறகு முன்போல் மந்த்ரமில்லாமல் பரிஷேசனம். அக்னியில் ஒரு ஸமித்தை வைத்து, அக்னி உபஸ்தானம் கரிஷ்யே என எழுந்து, யத்தே அக்னே—ததாது என்ற மந்த்ரத்தை ஜபிக்க வேண்டும். அர்த்தம் :—ஓ அக்னே, உன்னிடமுள்ள தேஜஸ்ஸினால் நான் தேஜஸ்வியாக வேண்டும். உமது வர்ச்சஸ்ஸால் நான் வர்ச்சஸ்வியாக வேண்டும். உமது பாபத்தை அகற்றும் சக்தியால் நான்

அந்த சக்தி உள்ளவனுக ஆகவேண்டும். அக்னி எனக்கு மேதையையும் ப்ரஜையையும், தேஜஸ்ஸையும் தரட்டும். இந்த்ரன் எனக்கு மேதையையும், ப்ரஜையையும் இந்த்ரியத்தையும் உண்டு பண்ணட்டும். ஸூர்யன் எனக்கு மேதையையும் ப்ரஜையையும் ப்ரகாஶமான வர்ச்சஸ்ஸையும் அளிக்கட்டும், அக்னயே நமஃ

மந்த்ர ஹீனம் க்ரியா ஹீனம் பக்திஹீனம் ஹுதாஶன.
யத் ஹுதம்து மயா தேவ பரிபூர்ணம் ததஸ்துதே.
ப்ராயஶ் சித்தானி அஶேஷாணி தபஃ கர்மாத்ம
கானிவை.
யானி தேஷாம் அஶேஷாணும் க்ருஷ்ணனு
ஸ்மரணம் பரம்.

ஒ அக்னி தேவரே, மந்த்ரம், க்ரியை, பக்தி, இவைகள் குறைவாக இருந்தாலும் நான் செய்த இந்த ஹோமம் பரிபூர்ணமாக இருக்கட்டும். தபஸ், கர்மா வடிவமான எவ்வளவு ப்ராயஶ்சித்தங்கள் உண்டோ அவைகளுக்குள் ஸ்ரீக்ருஷ்ணனை நினைப்பதே சிறந்த ப்ராயஶ்சித்தமாம்.

நமஸ்காரம் செய்து, 'அபிவாதயே' கூறவேண்டும்.

பிறகு, அக்னி இல்லாததான பஸ்மாவை எடுத்து ஜலத்தைவிட்டு, குழைக்கும்போது, மானஸ்தோகே— விதேமதே. என்ற மந்த்ரம் கூற வேண்டும். மந்த்ர அர்த்தம்: ஒ ருத்ர தேவரே, எனக்கு உண்டாகும் குழந்தைகளிடமும், எனது ஆயுளிலும், பசுக்களிடமும் குதிரைகளிடமும் ஹிம்ஸை செய்யாமல் அன்பாய் இரும். கோபங்கொண்டு எனது வேலைக்காரர்களை ஹிம்ஸிக்க வேண்டாம். நான் ஹவிஸ் உள்ளவனுக இருந்து, நமஸ்காரம் முதலிய உபசாரம் செய்கிறேன். (ஒவ்வொரு மந்த்ரங்கூறி, குறித்த இடத்தில் பொட்டு வைக்க வேண்டும்) மேதாவீ பூயாஸம் (நெற்றியில் புத்தியுள்ளவனாய் இருக்கவேண்டும். தேஜஸ்வீ பூயாஸம் (வலது புஜம்) தேஜஸ் உள்ளவனாய் இருக்கவேண்டும். வர்சஸ்வீ பூயாஸம் (இடது தோள்) வர்சஸ் உள்ளவனாய் இருக்க வேண்டும். ப்ரும்ம வர்சஸ்வீ பூயாஸம். (ஹ்ருதயம்) ப்ரும்

மவர்சஸ் உள்ளவனுய் இருக்கவேண்டும். ஆயுஷ்மான் பூயாஸம் (கழுத்து) ஆயுஸ் உள்ளவனுய் இருக்கவேண்டும். அன்னுதோ பூயாஸம் (பின் கழுத்து) உண்ணும் சக்தி உள்ளவனுக இருக்கவேண்டும். ஸ்வஸ்தி பூயாஸம் (தலை) க்ஷேமம் உள்ளவனுய் இருக்கவேண்டும். இத்துடன் ஸமிதாதானம் முடிந்தது.

பிறகு பிதா மாணவனைப் பார்த்து உபதேசிக்கும் உபதேசங்களுக்கு. எல்லாம் பொருளை உணர்ந்து, மாண வன் 'ஸரி' எனக் கூற வேண்டும்:

குரு : ப்ரும்மசர்ய ஆஶ்ரமத்தை அடைந்து விட்டாய்.

மாணவன் : (பாடம்) ஆம்.

குரு : அன்னம் புஜி என்று நான் கூறிய பிறகே புஜிக்கவேண்டும். ஆனுல் என் உத்திரவின்றி தீர்த்தம் சாப்பிடலாம்.

மாணவன் : அப்படியே செய்கிறேன்.

குரு : ஸமித் கொண்டு வருவது முதலிய கர்மாக்களைச் செய்

மாணவன் : அப்படியே செய்கிறேன்.

குரு : பகலில் தூங்காதே.

மாணவன் : அப்படியே தூங்கவில்லை.

குரு : பிக்ஷை எடு.

மாணவன் : அப்படியே பிக்ஷை எடுக்கிறேன்.

குரு : ஆசார்யனுக்கு அடங்கி இரு.

மாணவன் : அங்ஙனமே அடங்கி இருக்கிறேன்.

இதைக் கூறியவுடன் மாணவன் தாயாருக்கு நமஸ் காரம் செய்து "பவதி பிக்ஷாம் தேஹி" எனக் கூற வேண்டும். பிறகு தாய் அரிசி பிக்ஷை அளிப்பள். மும்

முறை பிக்ஷை வாங்கி. அதேபோல் மற்ற பந்து ஸ்த்ரீகளிடமும் பிக்ஷைவாங்கி, அவ்வரிசியை ஆசார்யனிடம் அளிக்கவேண்டும். குரு "தத்ஸ்யபிக்ஷம்" என வாங்கிக் கொள்வார். பிறகு அக்ஷதை ஆசீர்வாதம் செய்து, ஹாரத்தி எடுத்து முதல் நாள் கார்யம் பூர்த்தி. அன்று முதல் மாணவன் நான்காவது நாள் வரை, உப்பு புளிப்பு, காரம் இல்லாமல் புஜிக்கவேண்டும். நித்யம் மூன்று வேளை ஸந்த்யாவந்தனமும், இரண்டு வேளை ஸமிதா தானமும் செய்துவரவேண்டும். நான்காவது நாள் காலையில் ஸந்த்யா வந்தனம், ஸமிதாதானம் ஆனபின், மாணவனுக்கு எண்ணை தேய்த்து ஸ்னானம் செய்து வைத்து. மாத்யான்ஹிகம், ப்ரும்மயக்ஞம். ஆனபின், வீட்டிலிருந்து கிளம்பி. கிழக்கிலோ வடக்கிலோ போய், பலாஶமரத்தின் அடியில் மூன்று ஸ்தண்டிலம் செய்து, புண்யாஹவாசன ஜலத்தால் அவைகளை ப்ரோக்ஷித்து. முறையே ப்ரணவம், ஶ்ரத்தை, மேதை என்ற தேவதைகளை ஆவாஹனம் செய்ய வேண்டும். (இது இப்பொழுது வீட்டிலேயே நடக்கிறது) அதற்கு த்யானம், ஆவாஹனம் முதலான 16 உபசாரங்களைச் செய்து, யஶ்சந்தஸாம்—கோபாய. என ப்ரணவத்திற்கும், ஶ்ரத்தயா—வர்த்தயாமஸி. என ஶ்ரத்தைக்கும், மேதாதேவீ—மேதே. என மேதைக்கும் உபஸ்தானம் செய்யவேண்டும்.

ப்ரணவ உபஸ்தான மந்த்ர அர்த்தம் :—"ப்ரணவமானது வேதத்தின் காளை போல் சிறந்ததாகும். ஸர்வ ஜகத் ஸ்வரூபமுமாம். ஸர்வ வேதத்திற்கும் மேலானது. மோக்ஷத்திற்குக் காரணமாக உண்டானது. அப்படிப் பட்ட பரமேஶ்வர ஸ்வரூபமான ப்ரணவம் எனக்கு மேதையைத் தரட்டும். ஓ தேவ! மோக்ஷத்திற்கு ஸாதனமான வேதத்தை தார்ஶிக்கத் தக்க சக்தி உள்ளவனாக நான் இருக்கவேண்டும். எனது உடல் நோயின்றி, வித்யாப்யாஸத்திற்கு ஏற்றதாய் இருக்கவேண்டும். நாக்கும் மிக மதுரமாய் இருக்கட்டும். காதுகளால் நன்கு கேட்க வேண்டும். ப்ரும்மத்திற்கு நீ ஆலம்பனமாய் (ஆஶ்ரயமாக) இருக்கிறாய். மேதையால் சூழப்பட்டிருக்கிறாய். நான் கேட்ட வேதத்தை ரக்ஷி."

மேதோபஸ்தான மந்த்ர அர்த்தம் :—" இந்த்ரன், ஸரஸ்வதீ, தாமரைமாலை அணிந்துள்ள அச்வினீ தேவர் ஆகியவர் எனக்கு மேதையைத் தரட்டும். அப்ஸரஸ்ஸுகளிடமும், கந்தர்வர்களிடமும் உள்ள மேதையும், தேவரிடமும், மனிதரிடமும் உள்ள மேதையும், காமதேனுபோல் என்னை வந்து அடையட்டும். காமதேனு போன்றதும், பல ரூபமுள்ளதும், தேவர் உடலில் ஹிரண்யவர்ணமாயுள்ளதும், ஜகத் ரூபமாக உள்ளதும், ஜகத்தினால் வேண்டத்தக்கதும் பலமுள்ளதும், பால் தயிர் முதலியன அளித்து என்னை வளர்ப்பதுமான மேதா தேவி ஸுமுகியாக வந்து என்னை அடையட்டும்."

ச்ரத்தோபஸ்தான மந்த்ர அர்த்தம் :—" குருவாக்ய, சாஸ்த்ர வாக்யங்களில் உண்டாகும் நம்பிக்கையே ச்ரத்தை எனப்படும், அதற்கு அதிஷ்டான தேவதை ச்ரத்தா தேவி. அந்த ச்ரத்தையால் அக்நி ஜ்வலிக்கின்றது. ச்ரத்தையால் ஹவிஸ் கிடைக்கின்றது. ஸௌபாக்யம் உண்டாவதற்கும் ச்ரத்தையே காரணம் என உன் பெருமையை எங்கும் கூறுகிறோம். ஓ ச்ரத்தையே, உனக்குப் பூஜையை இப்பொழுது செய்பவனும், இனி செய்யப்போகின்றவனுமான எனக்கு ப்ரியமானது உண்டாகும்படி அருள்புரியும். எனக்கு மாத்ரமல்ல, உலகில் போகத்தை விரும்பும் ஸகல ப்ராணிகளுக்கும், யாகம் செய்பவருக்கும் இன்பம் தாரும். உக்ரமான அஸுரரை ஜயிக்க தேவர் எங்ஙனம் ச்ரத்தை கொண்டார்களோ, அவ்வளவு ஊக்கத்துடன் நீர் எனது போகத்திலும், போக ஸாதனத்திலும், யாகம் செய்வோரிடமும் அன்பு வையும். தேவர்களும், தனது ப்ராணனை ரக்ஷிக்க விருப்பங்கொண்ட யாகம் செய்வோரும், ச்ரத்தையான உன்னையே உபாஸிக்கிறார்கள். முழுமனதுடன் ஸங்கல்பத்துடன் கூடிய ச்ரத்தையை உபாஸிக்கிறார்கள். அதற்காக ச்ரத்தையுடன் ஹவிஸ்ஸை ஹோமம் செய்கிறார்கள். ஹே! ச்ரத்தே. காலையிலும், பகலிலும், மாலையிலும் உன்னை யான் அழைக்கிறேன். வைதிக கர்மாக்களில் எனக்கு ச்ரத்தை உண்டாகும்படி செய். இந்த ச்ரத்தா தேவி தேவர்களிடம் வஸிக்கிறாள். இவ்வுல

கெல்லாம் ஶ்ரத்தை நிறைந்துளது. இஷ்டத்தைச் பூர்த்தி செய்யும் ஶ்ரத்தையை ஹவிஸ்ஸினுல் வ்ருத்தி செய்கிறேன்.

பிறகு ப்ரம்மசர்ய வ்ரதத்தில் ஏற்படும் குறை நீங்கு வதற்காக ப்ராயஶ்சித்த ரூபமாய் யத்கிஞ்சித் த்ரவ்ய தானம் செய்ய வேண்டும். பலாஶ மரத்தினடியில் தண்டத்தைப் போட்டு விட்டு, தீக்ஷா வஸ்த்ரம் (யக்ஞோப வீதம், சிலர் மாற்றுவதில்லை.) மேகலை, க்ருஷ்ணஜினம் முதலியவைகளைப் புதியதாக வேறு தரிக்கவேண்டும். பழைய தீக்ஷா வஸ்த்ரத்தை ஆசார்யரிடம் கொடுக்கவேண்டும். அதைப் பெற்றுக் கொள்ளும்போது குரு சொல்ல வேண்டிய மந்த்ரம் இது. யஸ்யதே—ஸுஜாதம். அர்த்தம் :— நீ முதலில் அணிந்த வஸ்த்ரத்தை யான் எடுத்துக்கொள்கிறேன். உன்னை விஶ்வேதேவர் காக்கட்டும். நற்பிறவி பெற்ற உன்னைத் தழுவி, உனக்கு அநேக ஸஹோதரர் உண்டாகட்டும். நீயும் அவர்களும் நன்கு வ்ருத்தி யடையுங்கள்.

அக்ஷதை ஆசீர்வாதம் செய்து, ஹாரத்தி எடுத்து பெரியோர்களுக்கு நமஸ்காரம் செய்யவேண்டும். இத்துடன் உபநயனம் பூர்த்தியானது.

### வேத வ்ரதங்களின் விவரம்

4 அல்லது 8 வேத வ்ரதங்கள் என்பன உபநயன மான பின் நடக்கவேண்டிய ஸம்ஸ்காரம். இவை எல் லாம் ஏக காலத்தில் சேர்த்து விவாஹ ஸமயத்தில் செய் யப்படுகிறது இப்பொழுது. நாம் யஜுர் வேதிகளுக்கு, ஆபஸ்தம்ப ஸூத்ரக்காரர்களுக்கே இந்த ஸம்ஸ்காரங் களைக்கூறுகிறோம் என்பது நேயர்களது நினைவில் இருக்க வேண்டும். க்ருஷ்ண யஜுர் வேதத்திலுள்ள ஏழு காண் டங்களுக்கும், நான்கு காண்ட ரிஷிகள் அதிஷ்டான தேவதைபோல் பூஜிக்கப்படுகின்றனர். ப்ரஜாபதி, ஸோமன், அக்னி, விஶ்வேதேவர்கள் ஆகிய இவர்களே ப்ரும்ம யக்ஞ தர்ப்பணத்திலும், ஶ்ராவணத்திலும் இங்கும் பூஜிக்கப்படுகின்றனர். அந்தந்த காண்டங்களை ஆரம்பிக்கும்போது, அந்தந்த காண்ட ரிஷிகளை நாடி

தர்ப்பணம், ஹோமம் முதலிய பூஜை செய்வது வ்ரதமாம். இங்ஙனமே ஆரம்பித்த காண்டம் முடிந்தவுடன் அந்த காண்ட ரிஷிகளுக்கு ஒரு பூஜை. இங்ஙனம் நான்கு ரிஷிகளுக்கும் செய்வதே, ஆரம்பத்தில் நான்கு, முடிவில் நான்கு ஆக அஷ்ட வ்ரதங்கள் எனப்படும்.

வேத ஆரம்பம், முடிவு இரண்டையும் செய்யாமல் வ்ரதம் மாத்ரம் செய்வது ஒரு தப்பு. அதற்காக வேதமே கற்கவில்லையே, வ்ரதம் ஏன் செய்ய வேண்டும்? என அதை விடுவது அதனிலும் பெரும் தப்பு. ஆரம்பத்தையும் முடிவையும் ஒன்ருகச் சேர்த்து செய்வது இரண்டாவது தப்பு. நான்கு காண்ட ரிஷிகளுக்கும் தனித் தனி பூஜை செய்வதைவிட்டு எல்லோருக்கும் ஒன்ருக ஒரே நாளில் செய்வது மூன்ருவது தப்பு. கல்யாணத்திற்காக வேத வ்ரதம் செய்வது நான்காவது தப்பு, பின், ஏன் இப்படி பலராலும் வெகு காலமாகச் செய்யப்படுகிறது? காலத்தில் விதிப்படி ஒவ்வொரு காண்ட ஆரம்ப முடிவுகளிலும் செய்யாவிடினும், வேதம் பூர்ணமாக அத்யயனம் ஆனபின்பு (கல்யாணத்தன்று செய்யாமல் முன்னதாகவே) அஷ்ட வ்ரதங்களையும் ஒரு காண்ட ஆரம்பம், உத்ஸர்ஜனம் என்று தனித்தனியே வேத வ்ரதம் நான்கையும் அனுஷ்டிக்க வேண்டும். (இப்படி என் குரு தன் புத்ரனுக்கும் செய்து வைத்தார். —ஆசிரியர்). இன்றைக்கும் மிக அபூர்வமாக சில இடங்களில் இது நடக்கின்றது. இன்ெனுரு கர்மா ஆரம்பிக்கும் வரை அதன் முன் செய்யவேண்டிய கர்மாவிற்கும் காலம் உண்டு. "ஆகாலாத் கால." என்ற விதியைத் தழுவியே பலர் ஸமாவர்த்தனம் என்ற அடுத்த ஸம்ஸ்காரம் ஆரம்பிப்பதற்குள் இதைச் செய்யவேண்டுமென, விவாஹத்திற்கு முதல் நாள் அல்லது சிறிது நேரம் முன்பு செய்கின்றனர்.

ஜாத கர்மா முதலியவைகளை உபநயனத்தில் சேர்த்துச் சிலர் செய்வதுபோல், விவாஹத்தில் வேத வ்ரதம் செய்கிருேம். வ்ரதம் செய்து ஸமாவர்த்தனம் ஆரம்பிக்கும்போது ப்ரும்மசாரிக்கு அடையாளமான ஒரு பூணல், தண்டம், மேகலை, க்ருஷ்ணுஜினம் இவைகள்

இவனை விட்டு விடும். பஞ்ச கச்சம், இரண்டு பூணல் தாரணம், புஷ்பதாரணம், மையிட்டுக் கொள்ளல், குடை பிடித்துக்கொள்வது, பாதுகை தரிப்பது போன்றவை ஸமாவர்த்தனம் செய்யும் இவனை வந்து அடைகின்றன. அவனுக்கு ஸ்னாதகன் என்று பெயர். ஸ்னாதகனான பின்பே விவாஹம் அல்லது ஸஹபத்னீ யோகம் என்ற ஸம்ஸ்காரம் செய்துகொள்ள யோக்யதை உண்டாகிறது. விவாஹம் செய்து கொள்ளாதவர்கூட வேத வ்ரத, ஸமாவர்த்தனங்களை அவஶ்யம் செய்யவேண்டும்.

### அஷ்ட வ்ரதம்

கிருஷ்ண யஜுர் வேதம் 7 காண்டமாகப் பிரிக்கப் பட்டிருக்கின்றது. ஆனால் இதற்கு அதிஷ்டான தேவதைகள் போன்ற காண்ட ரிஷிகள் நால்வரே ஆவர். ஆகவே ப்ராஜாபத்ய காண்டம், ஸௌம்ய காண்டம், ஆக்நேய காண்டம், வைஶ்வதேவ காண்டம் என பிரிக்கப்பட்டன. முதலில் ப்ராஜாபத்ய காண்ட வ்ரதத்தை ஆரம்பித்து ப்ரஜாபதி எனும் காண்ட ரிஷிக்குத் தர்ப்பணம். ஹோமம் செய்து அதற்கு அங்கமான சில கர்மாக்களையும் செய்து முடித்துப் பின்னர் ப்ராஜாபத்ய காண்டவ்ரத உத்ஸர்ஜனம செய்யவேண்டும். இங்ஙனம் மற்ற 3 காண்ட ரிஷிகளுக்கும் தர்ப்பண ஹோமாதிகள் செய்து அந்தந்த வ்ரத ஆரம்பம், உத்ஸர்ஜனம் என்ற வகையில் 8 வேத வ்ரதங்கள் செய்யவேண்டும். இவ் வ்ரதங்கள் வேத அத்யயநத்தைப் பலப்படுத்தி அதன் மூலமாக ஆத்ம ஸம்ஸ்காரமாகின்றன.

இவைகளைத் தனித்தனியே செய்ய அவகாசம் தனம். மற்ற ஸௌகர்யம் இல்லாதபோது. ஸமான தந்த்ரமாகச் சேர்த்துச் செய்யலாம் என்று கருணை மூர்த்திகளான முனிவர் கூறினர். பெரும்பாலும் இப்போது இந்த பக்ஷமே பல இடங்களில் நிலைத்து விட்டது. (இது ஸந்த்யாவந்தன ஜப ஆரம்பத்தில் ப்ரணவத்திற்கு ரிஷி சந்தஸ் தேவதை கூறியதுபோல், ஸப்த வ்யாஹ்ருதிகளுக்கும் தனித்தனியே ரிஷி சந்தஸ் தேவதைகளைக் கூறாமல் பூராதி ஸப்தவ்யாஹ்ருதிகளுக்கும் என்று சேர்த்துக் கூறுவது போலுள்ளது). வழக்கம்போல் குருவும்

சிஷ்யனும் நித்ய கர்மாக்களை முடித்துச் சுத்தர்களாகி அனுக்ஞை பெற்று 4 காண்ட வ்ரதாரம்பங்களை முதலில் ஆரம்பிக்கவேண்டும். அநுக்ஞையில் தக்ஷிணையைக் கொடுத்துவிட்டு பிதா - இந்த நக்ஷத்ரத்தில் இந்த ராஶியில் பிறந்த இந்த ஶர்மாவான மாணவனுக்கு உபநயம் முதல் இதுவரை ப்ரும்மசர்ய ஆஶ்ரமத்திற்குக் கூறப்பட்ட ஶௌச ஆசாரத்தையும், ப்ராதஸ் ஸந்த்யை, ஸமிதாதாநம், நியமாத்யயநம், மாத்யான்ஹிகம், ப்ரும்மயக்ஞம், பிக்ஷை எடுத்தல், ஸாயம் ஸந்த்யை, ஸமிதாதாநம், குருகுல வாஸம் இவைகளை அனுஷ்டிக்காததாலும், பழையது உண்ணல், எச்சிலன்னம் உண்ணல், இட்டன்னமுண்ணல், தாம்பூலமணிதல் ஆகியவைகளால் உண்டானதும், அந்தந்த காலத்தில் செய்ய வேண்டிய வ்ரதத்தைச் செய்யாததாலுண்டானதும் ஆகிய ஸர்வ பாபங்களும் அகல இம்மாணவனுக்கும் வ்ரத லோபத்திற்காகச் செய்யவேண்டி க்ருச்ரத்திற்கு ப்ரதிநிதியாகக் கொஞ்சம் ஹிரண்ய தாநம் செய்வது மூலமாக ப்ராஜாபத்ய ஸௌம்ய ஆக்நேய வைஶ்வதேவ காண்டவ்ரத உபக்ரமம், உத்ஸர்ஜந கர்மா இவைகளை ஸமான தந்த்ரமாகச் செய்ய யோக்யதை ஸித்திக்க வேண்டுமென அனுக்ரஹம் செய்யுங்கள் என உத்திரவு பெற்று இக்கர்மா நிர்விக்னமாக முடிவதற்கு விக்நேஶ்வர பூஜை செய்யவேண்டும்.

பிறகு க்ருச்ரம் என்ற ப்ராயஶ்சித்த கர்மாவை விதிப்படி (அதாவது குறைந்த பக்ஷம் 3 நாள் உபவாஸமிருத்தல் போன்றது க்ருச்ரம்) செய்ய முடியாததால் அதற்குப் பதிலாகக் கொஞ்சம் த்ரவ்ய தாநம் செய்கிறேன் என ஸங்கல்பம் செய்து, விக்நேஶ்வரரை உத்வாஸனம் செய்யவேண்டும். பின்னர் ஹிரண்ய தாநம் செய்து மாணவன் ஸமிதாதாநம் செய்யவேண்டும். மாணவனும் குருவும் ப்ராணாயாமம் செய்து மாணவனை ப்ராஜாபத்ய ஸௌம்ய ஆக்நேய வைஶ்வதேவ காண்ட வ்ரதோபக்ரம கர்மாக்களை ஸமான தந்த்ரமாகச் செய்விக்கிறேன் என்று குரு ஸங்கல்பம் செய்யவேண்டும். மேற்படி வ்ரதத்தை ஸமாந தந்த்ரமாகச் செய்கிறே-

னென சிஷ்யன் ஸங்கல்பம் செய்யவேண்டும். பின்னர் சிஷ்யனுக்கு வபநம் செய்விக்க வேண்டும். ஸ்நாநம் செய்து மடிவஸ்த்ர மணிந்து நெற்றிக்கிட்டுக் கொண்டு காலலம்பி ஆசமனம் செய்து காண்டரிஷி தர்ப்பணம் செய்யவேண்டும். பூணூலைத்தாவடமாக (மாலை போல் தரித்துக் கொண்டு) ரிஷி தர்ப்பணம் ரிஷி தீர்த்தத்தால் செய்யவேண்டும்.

ரிஷி தீர்த்தம் என்பது சுண்டி விரல் பக்கமாக ஜலம் விடுவது. நுனி விரல்கள் வழியாக ஜலம் விடுவது தேவதீர்த்தம். கட்டை விரல் பக்கமாக விடுவது பித்ரு தீர்த்தம். ஆசமனம் செய்வதுபோல் அடிக்கையால் விடுவது ப்ரும்ம தீர்த்தமாகும். (1) ப்ரஜாபதிம் காண்ட ரிஷிம் தர்ப்பயாமி. (2) ஸோமம் காண்டரிஷிம் தர்ப்ப யாமி (3) அக்னிம் காண்ட ரிஷிம் தர்ப்பயாமி (4) விஶ்வான்தேவான் காண்ட ரிஷீம்ஸ் தர்ப்பயாமி (5) ஸாகும் ஹிதீர் தேவதா உபநிஷத: தர்ப்பயாமி (6) யாக்ஞிகீர் தேவதா உபநிஷத: தர்ப்பயாமி (7) வாருணீர் தேவதா உபநிஷத: தர்ப்பயாமி (8) ப்ரும்மாணம் ஸ்வயம்புவம் தர்ப்பயாமி. (ப்ரும்ம தீர்த்தத்தால் தர்ப்பணம் செய்க). (9) ஸதஸஸ்பதிம் தர்ப்பயாமி. என தர்ப்பணங்களை மும் மூன்று முறை செய்யவேண்டும்.

பிறகு இந்த காண்ட ரிஷிகளை நாடி ஹோமம் செய்ய வேண்டும். அதற்கு முன்னர் கூறியபடி பூமியைச் சுத்தம் செய்து அக்னியை ப்ரதிஷ்டை செய்யவேண்டும். பாத்ர ஸாதந காலத்தில் 4 அத்தி ஸமித்துக்களையும், ஒரு தீர்த்த கும்பத்தையும், தலையைச் சுற்றிக் கட்டுவதற்கான ஒரு வஸ்த்ரத்தையும் ஸாதநம் செய்யவேண்டும். பவித்ரம் செய்து பாத்ரங்களை ப்ரோக்ஷித்து ஆஜ்ய ஸம்ஸ்காரம் செய்து, ஸ்ருக் ஸ்ருவம் என்ற ஹோம பாத்திரத்திற்குப் பதிலாக இரு பலாஶ இலைகளைத் தர்ப்பையால் துடைத்து அக்னியில் காட்டி ப்ரோக்ஷித்துப் பூமியில் வைத்து, அக்னியைச் சுற்றி பரிதிகளை வைத்துப் பரிஷேசநம் செய்து முகாந்தமானபின் குருவும் சிஷ்யனும் ஒருவரை யொருவர் தொட்டுக் கொண்டிருக்க குரு ஹோமம் செய்ய வேண்டும்.

ப்ரஜாபதயே காண்ட ரிஷயே ஸ்வாஹா.

ப்ரஜாபதயே காண்ட ரிஷய இதம் ந மம.

இதுபோல் மற்ற 8 ரிஷிகளுக்கும் ஹோமம் செய்ய வேண்டும்.

### வேத வ்ரத மந்த்ரார்த்தம்

(1) "ப்ரஜாபதயே காண்டரிஷயே ஸ்வாஹா" என்று ஹோமம் செய்தபின் "ப்ரஜாபதே" என்பது முதல் "யோ ராய ஈசே" வரையில் ஆறு ப்ரஜாபதி தேவதாகமான—ப்ரஜாபதியைப் போற்றுவதான--மந்த்ரங்களால் ஹோமம் செய்து உத்தேச த்யாகம் கூற வேண்டும். "ஓ ப்ரஜாபதியே! உம்மைத் தழுவியே உலகில் ஸகல ப்ராணிகளும் உண்டாயின. நாங்கள் எதை நாடி உமக்கு ஹோமம் செய்கிறோமோ அது எங்களுக்கு உண்டாகவேண்டும். செல்வபதியாக நாங்கள் ஆகவேண்டும் என்று அருள் புரியும்"என்பது போல் மற்ற மந்த்ரங்களாலும் அவர் பெருமையைக்கூறி நமக்கு ஸமஸ்த ஸம்பத்தும் உண்டாகும்படி வேண்டுகிறோம். அங்ஙனமே (2) "ஸோமாய காண்டரிஷயே ஸ்வாஹா" என்று ஹோமம் ஆனபிறகு ஸோமதேவதாகமான அதாவது ஸோமதேவனைக்கொண்டாடுவதான"ஸோமோ தேனும்" முதல் "யாதே தாமாநி திவி யா" வரையிலுள்ள ஆறு மந்த்ரங்களால் ஸோமனுக்கு ஹோமம் நடக்கின்றது. அந்த மந்த்ரங்களால் ஓஷதிகளுக்குத் தலைவனும், ப்ராம்மணர்களுக்கு ராஜாவுமான ஸோமனின் பெருமையைத் துதித்து நமக்கு அவர் நன்மை புரியும்படி வேண்டுகிறோம்.

அடுத்தபடி அதேபோல் (3) "அக்னயே காண்டரிஷயே ஸ்வாஹா" என்று அக்னிக்கு ஹோமம் செய்து, "அக்னே நய" முதல் "ப்ரகாரவோ" வரையிலுள்ள அக்னியைப் போற்றும் ஆறு மந்த்ரங்களால் ஹோமம் செய்கிறோம். அம்மந்த்ரங்கள் அக்னி தேவதையின் பெருமையைப் போற்றிப் புகழ்ந்து நல்வழியில் செல்வம்

முதலியன நமக்கு உண்டாகும்படி வேண்டுகின்றன. நான்காவதாக (4) "விஶ்வேப்யோ தேவேப்ய: காண்ட ரிஷிப்ய: ஸ்வாஹா" என ஹோமம் செய்கிறோம். பின்னர் "ஆநோ விஶ்வே" முதல் "விஶ்வே தேவா:" வரை உள்ள ஆறு மந்த்ரங்களால் ஹோமம் செய்கிறோம். அவை விஶ்வேதேவர் பெருமையை வர்ணித்து, துதித்து நமக்கு நன்மை உண்டாகும்படி வேண்டுகின்றன. (5) "ஸாகும் ஹிதீப்யோ தேவதாப்ய உபனிஷத்ப்ய: ஸ்வாஹா"— ஸாகும் ஹிதீப்யோ தேவதாப்ய உபனிஷத்ப்ய இதம் நமம" என முதல் உபனிஷத்திற்கு ஹோமமும் உத்தேஶ த்யாகமும் செய்கிறோம். (6) "யாக்ஞிகீப்யோ தேவதாப்ய உபனிஷத்ப்ய ஸ்வாஹா." (7) வாருணீப்யோ தேவதாப்ய உபனிஷத்ப்ய ஸ்வாஹா. (8) ப்ரம்மணே ஸ்வயம்புவே ஸ்வாஹா. (9) ஸதஸஸ்பதிம்— ஸ்வாஹா என்ற மந்த்ரத்தால் ஸதஸஸ்பதி ஹோமம் செய்து முறையே உத்தேச த்யாகம் செய்து நான்கு காண்ட ரிஷிகளான தேவதைகளை நாடி உபஸ்தானம் செய்கிறோம், "அக்னே வ்ரதபதே" முதல் "வ்ரதானும் வ்ரதபதே" வரையிலுள்ள மந்த்ரங்களால் "நான் அந்த ரிஷிவ்ரதம் செய்கிறேன். நான் சக்தி உள்ளவனாக வேண்டும்" என வேண்டுகிறோம்.

பிறகு முதலில் ஶாந்தி மந்த்ரங்களை ஜபிப்பதற்காக சில ரித்விக்குகளை வரிக்கவேண்டும், வ்ரதம் செய்யும் மாணவன் மதந்தியைத் தொட்டுக்கொண்டு "நமோ வாசே-ஶாந்தி:" என்று ஜபிக்கவேண்டும். பிறகு நான்கு அத்தி ஸமித்துகளை நெய்யால் நனைத்து "ப்ருத்வீ ஸமித், அந்தரிக்ஷகும் ஸமித், த்யௌஸ் ஸமித், ப்ராஜாபத்யாமே" என்ற நான்கு மந்த்ரங்களால் ஹோமம் செய்ய வேண்டும். உத்தேச த்யாகம் சொன்னபின், முன் போல் "அக்னே வ்ரதபதே" முதல் "வ்ரதானும்" வரை உபஸ்தானம் செய்யவேண்டும். பிறகு அந்த காண்ட அத்யயன பாடத்திற்காக ரித்விக்குகளை வரிக்கவேண்டும். "யுஞ்ஜதே" "ஸவிதா" என்ற இரு பதங்களையாவது மாணவன் சொல்லும்படி செய்யவேண்டும்.

பிறகு இந்த கர்மா ஸம்ருத்தியுள்ளதாகச் செய்ய "ஜயாதி" செய்யவேண்டும். அதன்பின் பரிதியை அக்னியில் போடுவது முதலிய உத்தர அங்கங்களைச் செய்து மதந்தியைத் தொட்டுக்கொண்டு உத்தம அனுவாகத்தினால் உத்தர ஶாந்தி செய்யவேண்டும். உத்தர ஶாந்திக்காக ரித்விக்குகளை வரித்து "ஶன்னோ—ஶாந்தி:" என ஜபிக்கவேண்டும். பிறகு மாணவனது முகத்துடன் தலையைப் புது வஸ்த்ரத்தால் ப்ரதக்ஷிணமாக மூடி சிறிது நேரம் பேசாமல் மாணவனை உட்காரவைத்து, வஸ்த்ரத்தை எடுத்து, அக்னி, ஆதித்யன், ஜலபாத்ரம், கல்கன்று, சிறு பெண், ஹிரண்யம் முதலியவைகளைப் பார்க்கும்படி செய்து அந்த வஸ்த்ரத்தைக் குருவிற்கு கொடுக்க வேண்டும். "வயஸ் ஸுபர்ணா" என்ற மந்த்ரத்தால் ஆதித்யனை உபஸ்தானம் செய்யவேண்டும்.

இப்போது செய்ததும், செய்யப்போவதுமான, காண்டவ்ரத உத்ஸர்ஜன ஸ்னான கர்மாவிற்கு அங்கமாக நாந்தி ஶ்ராத்தம், புண்யாஹவாசனம், அக்னி உபஸ்தானம்,ஆஶீர்வாதம் இவைகளுடன் வ்ரதம் பூர்ணமாகிறது. இந்த வ்ரதத்தைச் செய்யாவிடில் வேதஸாரமான காயத்ரீ மந்த்ரம்கூட பூர்ணபலனைத் தராது. காண்டங்களுக்கு தேவதைகளான ரிஷிகளைப் பூஜித்து அந்த வேதத்தைக் காப்பாற்றி நமக்கு அளித்ததற்காக நன்றி செலுத்த வேண்டாமா?

### ஸமாவர்த்தனம்

வேத வ்ரதங்கள் முடிந்த பின் குருவிற்கு ப்ரியமான தக்ஷிணையைக் கொடுத்துவிட்டு விவாஹம் செய்து கொள்ள வேண்டும். விவாஹத்திற்கு முதல்நாள், அல்லது அன்றே செய்துகொள்ள வேண்டிய கர்மா ஸமாவர்த்தனம். ஸமாவர்த்தனம் என்றால் குரு குலத்திலிருந்து திரும்பி வருவது என்று பொருள். நான்கு ஆஶ்ரமங்களில் ஒரு வித ஆஶ்ரமும் இல்லாமல் ஒரு க்ஷணம்கூட இருக்கக்கூடாது. ஆதலால், ஸமாவர்த்தனம் செய்து உடனே விவாஹம் செய்துகொண்டு க்ரஹஸ்தாஶ்ரமம் செல்லவேண்டும். இதில் ஸ்னானம் முக்யமானதால், ஸமாவர்த்தனத்திற்கு ஸ்னான கர்மா என்றும் ஒரு பெயர்

உண்டு. ஆபஸ்தம்பர் ஸமாவர்த்தன கர்மாவைப் பூர்ணமாய் ஸாங்கோ பாங்கமாகச் சொல்லிவிட்டுப் பிறகு. "தூஷ்ணீம் வா" மந்த்ரங்களில்லாமல் பெண் குழந்தைக்கு ஜாதகாதி செய்வதுபோல் செய்யலாம் என்றும் கூறினர். ஆதலால், மந்த்ரமில்லாமல் செய்வதுதான் தற்சமயம் எங்கும் அதிகமாகக் காணப் படுகிறது.

ஸ்னானகர்ம முறை :— விவாஹத்திற்கு முதல் நாள் காலையில் எழுந்து நித்ய கர்மாவை முடித்துக் கொண்டு, ஸூர்ய உதயத்திற்கு முன் பசுச் சாலைக்குச் செல்ல வேண்டும். அதன் வாசற்படியைக் கீழே ரோமம் இருக்கும்படி ஒரு அஜினத்தால் மூடவேண்டும். மாலை நக்ஷத்ர உதயமாகும் வரை வெளியில் வரக்கூடாது. ஸூர்ய ரஶ்மி மேல்படக்கூடாது. வபனத்திற்கு ஏற்ற காலத்தில் உபநயனத்தில் செய்வதுபோல் மந்த்ரத்துடன் வபனம் செய்துகொள்ள வேண்டும். இந்த வபனத்தில் விசேஷம் ஸர்வ அங்க க்ஷவரம் (தற்சமயம் ஸர்வாங்கமும் செய்து கொள்வதில்லை. தலையிலும் செய்துகொள்ளாமல் இக் கர்மாவில்கூட முகக்ஷவரமே செய்துகொள்வது மிக பாபகரமானது. வபன மந்த்ரங்களால் உண்டாகும் அத்ருஷ்டத்தை இழப்பதாகும். ஆதலால், நமது நேயர்களேனும் இதைக் கவனித்து ஶாஸ்த்ர விதிப்படி ஸர்வாங்கம் செய்து கொள்ளும்படி செய்ய வேண்டும்) வபனத் தீட்டுப் போக 13 முழுக்குப்போட்டு ஸ்னானம் செய்யவேண்டும். பிறகு, அதுவரை தான் அணிந்து கொண்டிருந்த மேகலையை (முஞ்சிப் புல்லாலான கயிறு) ஒரு ப்ரும்மசாரிக்கு தானம் செய்யவேண்டும். அவன் தர்ப்பைப் போத்தின் அடியில் புதைக்கவேண்டும். அது ஸ்னாதகனது பாபத்தைப் புதைப்பது போலாம்.

பிறகு, ஸ்னானம் செய்து அத்திக் குச்சியால் பல் துலக்க வேண்டும். அதன் பின், ஸ்னானத்திற்காக அமைந்துள்ள நெல்லிக்காய் முதலியவை கலந்தஸ்னானப் பொடியால் மந்த்ரங்களைக் கூறி, நிதானமாக ஸ்னானம் செய்யவேண்டும். மந்த்ரத்துடன் இருவஸ்த்ரம், இரு பூணல்களைத் தரிக்கவேண்டும். (இது முதல் பஞ்ச கச்சம்

ஆரம்பம். கச்சமில்லாமல் கர்மா செய்தால் பயனில்லை. பஞ்ச கச்சம் பார்க்கவும் அழகு. சாஸ்த்ரமும் கூறுகிறது. அதைக் கர்ம காலத்திலேனும் அவஶ்யம் கட்ட வேண்டும்.) பிறகு மந்த்ரங்களைக் கூறி, சந்தனம், குங்குமம், புஷ்பம், மை, கழுத்தில் ஸ்வர்ணமணி, கையில் இலந்த மணி அணிந்து, காதில் குண்டலமணிந்து, கண்ணாடி பார்த்து, காலில் செருப்பணிந்து, கையில் குடையையும், மூங்கில் தண்டத்தையும் பிடித்துக் கொள்ள வேண்டும்.

பிறகு அக்னியை விதிப்படி ஆராதித்து, ஸமித் ஹோமம் செய்து, உத்தராங்கமான கர்மாக்களையும் செய்து, நாந்தி ஶ்ராத்தம், புண்யாஹவாசனம், திக்கு, நக்ஷத்ரம் அக்னி இவைகளின் உபஸ்தானம் ஆகியவைகளைச் செய்து, அக்ஷதாஶீர்வாதத்துடன் ஸமாவர்த்தன கர்மா அல்லது ஸ்னான கர்மா பூர்ணமாகிறது. அன்று முதல் இவன் ஸ்னாதகன் எனப்படுவான். நான்கு வேதங்களையும் கற்று, வ்ரதம் செய்து, இந்த ஸ்னானம் செய்தவன் வித்யாவ்ரத ஸ்னாதகன் எனப்படுவான். வேதமின்றி வ்ரதம் மாத்ரம் செய்து ஸ்னானம் செய்பவன் வ்ரத ஸ்னாதகன் ஆவன். ஸ்னாதகன் செருப்பு, குடை, தண்டம் கண் மை, புஷ்பம் முதலிய அலங்காரமில்லாமல், வெளியில் போகக்கூடாது. அரசனிடம் சென்று, விவாஹத்திற்கு வேண்டிய பொருளைப் பெறவேண்டும்.

### மந்த்ரார்த்தம்

ஸமித் ஆதானம் : நம்மிடம் நல்ல எண்ணங்கொண்டு அனுக்ரஹம் செய்யும் அக்னியைத் துதித்து ஹோமம் செய்கிறோம்.

வபனம் : ஜமதக்னி, கஶ்யபர் இவர்களைப்போல் பால்யம், யௌவனம், கிழத்தன்மை ஆகிய காலங்களில் தீர்க்காயுளைப் பெறவேண்டும்.

ஸ்னானம் : ஜல தேவதையே, உமது ஸாரமான, ரஸமான அம்சத்தைக் கொண்டு எனக்கு ஸுகத்தை அளியும்.

தந்த தாவனம்: பற்களே, மலத்தைவிட்டு சுத்தமாக இருங்கள். சந்த்ரன் எனது முகத்தில் வந்து ப்ரகாசிப்பார்.

வஸ்த்ரம் அணிதல்: வஸ்த்ரம் சந்த்ரனைத் தேவனாக உடையது, அது என்னைக் காக்கட்டும்.

சந்தன மணிதல்: தேவருக்கு உன்னை அளிக்கிறேன். அவர்களுக்கும் அலங்காரத்தைத் தரும் சந்தனமே! என்னிடம் வாஸனையுடன் இரு.

குண்டல தாரணம்: பூமியில் தோன்றி, ஸகல உலகையும் காப்பாற்றும் ஸுவர்ணம் எனக்கு தேஜஸ்ஸைத் தரட்டும்.

இங்ஙனம் மற்றவைகளையும் ப்ரார்த்தித்து புஷ்பம், குங்குமம், குடை முதலியவைகளை அணிந்து, பந்துக்களைப் பார்த்து "இனி யான் என்ன செய்யவேண்டும்?" எனக் கேட்க வேண்டும், அவர்கள் கூறியபடி, தக்க குலத்தில் உதித்த கன்யகையைத் தேடி, மணம் புரிந்து கொள்ளவேண்டும்.

## விவாஹம்

கர்ப்பாதனம் முதல் புருஷக் குழந்தைக்கு வேத மந்த்ரத்தை உச்சரித்து ஸம்ஸ்காரங்கள்விதிக்கப்பட்டன. அவை அனைத்தும் பெண் குழந்தைக்கு மந்த்ரமில்லாமல் தந்த்ரம் மாத்ரம் செய்யப்படுகிறது. விவாஹம் என்பது உத்வாஹம், பாணிக்ரஹணம். கன்யாதானம், கல்யாணம் என்ற பெயர்களால் அழைக்கப்படுகிறது. வி+வாஹ, உத்+வாஹ என்ற இரண்டும் "சிறப்பாக வஹிப்பது" என்ற அர்த்தம் உள்ளவை. யார்? எதை? ஜாயா பதி இருவரும் சேர்ந்தால் தம்பதி ஆவர். தம்பதிகள் ஒன்றுகச் சேர்ந்து தர்மத்தை வஹிப்பது. அதற்காக, க்ருஹஸ்த தர்மத்தை வஹிப்பது என்று பொருள். வீட்டையும் குடும்பத்தையும் வஹிப்பது என்றும் பொருள்.

"ஒரு நிமிஷங்கூட ஆஶ்ரமம் இல்லாமல் இருக்காதே" என சாஸ்த்ரம் கூறுகிறது. ஆதலின், புருஷன்

ஸமாவர்த்தனம் ஆனவுடன் நல்ல குலத்தில் பிறந்து, நற்குணம், நல்ல லக்ஷணம் வாய்ந்த கன்யகையை மணந்து க்ருஹஸ்த தர்மத்தை நடத்த வேண்டும். ஒவ்வொரு ப்ராம்மணனும் தனக்கு ஏற்பட்ட ரிஷி கடன், தேவ கடன், பித்ரு கடன் என்ற மூன்றையும் தீர்த்து விட்டே மோக்ஷத்தைப் பற்றி பேசவேண்டும். ப்ரும்மசர்ய நியமத்துடன் வேத அத்யயனம் செய்வதால் ரிஷி கடன் அகல்கிறது. தேவ கடன் யக்ஞம் செய்வதால் அகலும். பித்ரு கடன் நல்ல ஸந்ததி பிறந்தால் அகலும்.

தேவ, பித்ரு கடன் அகல விவாஹம் மிக அவஶ்யமான தல்லவா? அதனுல் தான் " தர்ம ப்ரஜார்த்தம் வ்ருணீ மஹே " யக்ஞம் முதலிய தர்மத்தைச் செய்யவும் தர்மமாக ப்ரஜை உண்டாவதற்காகவும் இந்த கன்யகையை வரிக்கிருேம் என்று முதலில் கூறப்படுகிறது. மற்ற நாட்டவரைப்போல் கேவல போகத்திற்காகவோ, வீட்டு வேலைக்காகவோ மாத்ரம் செய்து கொள்ளும் ஓர் உடன்பாடல்ல விவாஹம் என்பது. விசேஷமாக ஸ்த்ரீகளுக்கு விவாஹமே முக்ய ஸம்ஸ்காரமாகும். " ஸ்த்ரீணும் உபநயன ஸ்தானே விவாஹ:" பெண்களுக்கு விவாஹம் என்பது உபநயன ஸ்தானத்தில் விதிக்கப்பட்ட ஒரு ஸம்ஸ்காரம் என்கின்றது சாஸ்த்ரம்,

விவாஹம் செய்து கொள்ளாமல் ஒரு பெண் வெகு காலம் தவம் செய்தாள். கிழவியாகவும் ஆனுள். ஒரு ஸமயம் நாரதர் அங்கே வர, அவருக்கு அர்க்ய, பாத்ய, ஆசமனீயம் அளித்து விருந்தை ஏற்கவேண்டும் என்ருள். அவர் அதை ஏற்க மறுத்து. "நீ உபநயனம் ஆகாத புருஷன் போலாவாய், உனது உணவை உட்கொண்டால், பதிதனுடைய ஆகாரத்தை உட்கொண்டதுபோல் பாபம் உண்டாகும்" என்ருர். உடனே அவள் முனிவரைப் பணிந்து, " என் அன்னமே தோஷமெனில், என் கதி யாது?" என்ருள். "உனக்கு விவாஹமானுல் ஒழிய நற்கதி இல்லை" என நாரதர் கூற, அவள் மிக வருந்தி, அவர் கூறிய வண்ணம் தனது தவத்தில் பாதி அளித்து ஒருவரை மணந்து நற்கதி அடைந்தாள்.

இந்தக் கதையிலிருந்து விவாஹமாகாத பெண்ணுக்கு நற்கதி இல்லை என்பதைத் தெரிந்து கொள்ள வேண்டும். "கிழவியும் விவாஹம் செய்து கொள்ளலாம். ருதுவான பின் மணக்கலாம்" என்று தப்பர்த்தம் கொள்ளலாகாது. அவ்வளவு தபஸ் இருந்தும் விவாஹம் எனும் ஸம்ஸ்காரம் இல்லாவிடில் ஜன்மா வ்யர்த்தம் என்றே தெரிந்து கொள்ள வேண்டும். பெண்களுக்கு உபநயனம் போல் முக்யமான ஸம்ஸ்காரம் இது. புருஷனுக்கு ஸஹதர்மசாரிணீ யோகம் என்ற ஸம்ஸ்காரமாம். இதைக் கொண்டுதான் ஜனகர் ஸ்ரீ ராமனைப் பார்த்து "இயம் ஸீதா மம ஸுதா ஸஹதர்ம சரீ தவ" என் பெண்ணான இந்த ஸீதை உனக்கு ஸஹ தர்ம சரீ - அதாவது உடனிருந்து தர்மத்தை அனுஷ்டிப்பவள் என்கிறார்.

விவாஹம் என்பது ஒரு பவித்ரமான ஸம்ஸ்காரம். ஆண் பெண் இருவர்களுக்கும் பொதுவாக ஏற்பட்ட உத்தம ஸம்ஸ்காரம். இவ்விருவர்களுக்கும் பிறக்கப் போகும் ஸந்ததிக்கு முன்னதாக ஏற்பட்ட சிறந்த ஸம்ஸ்காரம். பெண் ஆண் என்ற இருவரது குலத்தில் உள்ள பித்ருக்களுக்கு ஸந்தோஷத்தை அளிக்கும் ஸம்ஸ்காரம். ஸரியான காலத்தில் ஸரியான பாத்ரத்தில் கன்யாதானம் செய்தால் 21 தலைமுறை ப்ரும்ம லோகத்தைத் தரும் புண்ய ஸம்ஸ்காரம். பெண்ணின் சரீரத்தை அண்டியிருந்த ஸோமன், கந்தர்வன் அக்னி முதலியவர்களுக்கு இன்பம் அளிக்கும் ஸம்ஸ்காரம். திக்பாலர் முதலிய தேவருக்கும் பூஜை செய்து இன்பமூட்டும் ஸம்ஸ்காரம். இம்மையிலும் மறுமையிலும் இன்பம் தரும் ஸம்ஸ்காரம்.

கன்யாதானம் :— எட்டு வயதுள்ள பெண்ணே கன்யா எனப்படுவாள். 9 வயதானவள் ரோஹிணீ. 10 வயதானவள் கௌரீ எனப்படுவாள். அதற்கு மேல் வயதானவள் ரஜஸ்வலா எனப்படுவாள். கன்யாதானம் செய்தவர் ப்ரும்ம லோகம் செல்வர். 9 வயது ரோஹிணீ தானம் செய்பவர் வைகுண்டமும், 10 வயதுள்ள கௌரியை அளிப்பவர் ஸ்வர்க்கமும் செல்வர். 11 வயது முதல் உள்ள ரஜஸ்வலைகளைத் தானம் செய்பவர் ரௌரவ நர

கத்தை அடைவர். ருதுவாவதற்கு முன்பேயே பெண்களுக்கு விவாஹம் செய்துவிட வேண்டும். விவாகமாகாத பெண் பிதாவின் வீட்டில் ருதுவானல் தந்தை ப்ரூணஹத்தி செய்த பாபத்தை அடைகிருன். விவாஹம் ஆகாமல் எவ்வளவு முறை ருதுவாகின்ருளோ அவ்வளவு ப்ரூணஹத்தி செய்த பாபம் தந்தையை அடையும். அவளும் சூத்ரஸ்த்ரீ யாகிருள். அவளை மணந்தவன் எந்த வைதிக கர்மாவுக்கும் உதவாத சூத்ர ஸ்த்ரீ பதி யாகிருன்.

" ருதுவாகி மூன்று வருஷ பர்யந்தம் தந்தை தன்னை விவாஹம் செய்து கொடுக்காவிட்டால் நான்காவது வருஷம் நல்ல வரனைத் தேடித் தானே பெண் விவாஹம் செய்து கொள்ளலாம். நல்ல வரன் கிடைக்கா விடில் ஸுமாரான வரமானலும் விவாஹம் செய்து கொள்ள வேண்டும் " என்ற இந்த ஶாஸ்த்ரமானது ருதுமதீ விவாஹம் ஶாஸ்த்ர ஸம்மதம் எனக் கூற வந்ததல்ல. பெற்ருேருக்கே அந்த பெறுப்பு. ருதுவாகி விவாஹம் செய்து வைக்கக் கூடாது. ருதுவாகியும் விவாஹம் ஆக வில்லை யெனில் மூன்று வருஷங்களே பொருத்திருக்கலாம். அதற்கு மேல் பெண்ணே நல்ல வரனைத்தேடி மணக்கலாம் என பெண்ணுக்கு அதிகாரம் அளிப்பதே அதன் கருத்தாகும். ருதுவான பின் மணம் க்ஷத்ரிய வைசியர்களுக்கு உண்டு. ப்ராம்மணர்களுக்கு இல்லை. க்ஷத்ரியனுக இருந்தும் ஜனக மஹாராஜன் வைதிக தர்மத்தைக் கைப்பற்றி ருதுவாவதற்கு முன்பேயே ஸீதையைக் கன்யாதானம் செய்தார். ஸ்ரீ ராமனும் மணந்து கொண்டார்.

" ருதுவான பின் விவாஹம் செய்தால் அந்த பெண்ணின் ருதுவை (பஹிஷ்டை காலத்தில் வெளியாகும் ரத்தத்தை) பித்ருக்கள் சாப்பிடும்படி ஏற்படும். ஆதலின் பெண் குழந்தைகளுக்கு வெட்கம் உண்டாவதற்குள் புழுதியில் விளையாடும் காலத்திலேயே விவாஹம் செய்து விடு " என ஆபஸ்தம்பர் முதலிய மஹரிஷிகள் கூறுகிருர்கள். அங்ஙனமே நமது முன்னேர்கள் பால்ய விவாஹம் செய்து வந்தனர். பெண்களும் தீர்க்க ஸுமங்கலிகளாக

வாழ்ந்தனர். அச்சமயம் வரதக்ஷிணை என்ற கொடுமையும் இல்லை. அவர்களுக்கு உண்டான குழந்தைகளும் அரோக த்ருட காத்ரராகவே இருந்தனர்.

தற்சமயம் மேநாட்டு நாகரிகத்தால் பலர், "விவாஹம் என்பது ஒரு பவித்ரமான ஸம்ஸ்காரம், ருதுவாவதற்கு முன் விவாஹம் செய்ய வேண்டும். நம் முன்னோர்கள் நம்மைவிட விவேகி. மஹரிஷிகள் தீர்க்கதர்ஸிகள், விசாலமான த்ருஷ்டியும், பரந்த நோக்கமும் சிறந்த அறிவும், உயர்ந்த கருணையும், உள்ளவர்" என்று நினைப்பதில்லை. குருட்டுத்தனமாக எல்லாவற்றிற்கும் மே நாட்டையே கைப்பற்றுவது என்ற எண்ணம் உள்ளே குடிகொண்டது. அதனால் கற்பு என்பதையே அறியாதவரும், பரலோக சிந்தையில்லாதவரும், மிக மிக உயர்ந்த நமது ஶாஸ்த்ர ஸம்ப்ரதாயங்களை உணராதவரும், அதை மதியாதவருமான சில ஆங்கிலேயர் சொன்ன மொழிகளைக் கிளிப் பிள்ளைகளைப்போல் திரும்பத் திரும்பக் கூறுவர். நமது ஸதாசாரத்தைப் பின் பற்றுவதும் அதைப் பற்றி பேசுவதும் அநாகரிகம் எனக் கருதுவர். அந்த வாஸனு பலத்தால் தீர்க்க த்ருஷ்டியையும் பகுத்தறிவையும் இழந்தனர். சிலர் துணிந்து தானும் அதர்மத்தில் இறங்கி, தார்மிகரையும் படுகுழியில் தள்ள பகீரத ப்ரயத்னம் செய்தனர், செய்கின்றனர்.

"ஶாஸ்த்ரமே ருதிமதீ விவாஹத்திற்கு அனுகூலமாக இருக்கிறது. அதற்கு ஸரியான அர்த்தம் தெரியாமல் குருட்டுப் பழக்கத்தைப் பின் பற்றினோம். இதை விட்டு உண்மை ஶாஸ்த்ரீயமானதும் முன் கைப்பற்றப்பட்டதுமான ருதுமதீ விவாஹத்தைச் செய்வோம்" என்கின்றனர் ஒரு சிலர். இவர்கள் சில விவாஹ மந்த்ர அர்த்தங்களைக் கண்டு ஏமார்ந்து பிறரையும் ஏமாற்றுகின்றனர். அவர்களது கேள்வியின் ஸாராம்சம்.

(1) விவாஹப் பெண்ணைப் பார்த்துக் கணவன் கூறும் மந்த்ரங்களில் "என்னை ஆலிங்கனம் செய்து கொள்" என்பது போன்றவை பெரிய ருதுவான பெண்களிடமே பொருந்தும். ஆனதால் ருதுமதீ விவாஹம்

ஶாஸ்த்ர ஸம்மதம் என்பர். பதில்:— பல ஸ்ம்ருதி வாக்யங்கள் ஸ்பஷ்டமாக ருதுவாவதற்கு முன் விவாஹம் செய் என்று கூறுவதும் நமது புத்திக்கு எட்டின காலம் முதல் நடந்து வருவதும் ஶிஷ்டாசாரமும் ப்ரமாணமல்லவா? அதை விட்டு நேராக ருதுமதீ விவாஹம் செய் என்று கூறாத மந்த்ரத்தின் பொருளைக் கொண்டு ருதுமதீ விவாஹத்தை ஸாதிக்கக் கருதுவது முறை அன்று. அந்த மந்த்ர அர்த்தமும் இப்போதே பரஸ்பர ஆலிங்கனத்தைக் கூறவில்லை. பின்னால் நடக்கப் போவதைக் குறிக்கும். ப்ரும்மசாரி செய்யும் ஸமிதாதான மந்த்ரத்தில் "நல்ல புத்ரன் பிறக்க வேண்டும்" என்கிறது ஒரு மந்த்ரம். அதைக் கொண்டு ப்ரும்மசாரி புத்ரன் பிறப்பதற்கு ஏற்ற மனைவி வந்தவுடன் ஸமிதாதானம் செய்யவேண்டும் என பொருள் கொள்ளக் கூடுமா? ப்ரும்மசர்யம் முடிந்து விவாஹம் ஆனபின் நல்ல புத்ரன் பிறக்க வேண்டும் என்று பொருள் கூறுவது பொருத்த மல்லவா? அங்ஙனமே ருதுவாகாத பெண்ணின் விவாஹ காலத்தில் கூறப்படும் மந்த்ரம் ருதுவான பின் நடக்கும் விஷயத்தைக் கூறுவதாகும் என்பது ஸரியான பொருள்.

(2) ருது வாவதற்குள் விவாஹம் செய்ய வேண்டும் என்ற நிர்ப்பந்தம் இருப்பதால் வரதக்ஷிணைக் கொடுமை அதிகமாகி விட்டது. ருதுமதீ விவாஹம் நடந்தால் வரதக்ஷிணை அகலும். பதில்:— இதைப்பற்றி அனுபவமே தக்க ஸமாதானம் கூறும். நாம் சொல்ல வேண்டிய அவஶ்யம் இல்லை. சாரதா சட்டம் வந்தபின் கன்யகா விவாஹம் மிகக் குறைந்தது. 20, 22 வயதில் பலர் விவாஹம் செய்கின்றனர். வரதக்ஷிணை குறைந்ததாகக் கூற முடியவில்லை. ஶாஸ்த்ரீய விவாஹம் நடக்காததுடன் சொல்ல முடியாத பல அனர்த்தங்களையும் பார்க்கிறோம். ஆதலின் வரதக்ஷிணைக்கும் இதற்கும் ஸம்பந்தம் சிறிதும் இல்லை.

(3) மணம் என்பது என்ன என்று தெரியாத கன்யகைகளுக்கு விவாஹம் செய்விப்பது நியாயமா? மந்த்ரம் சடங்கு, பொறுப்பு இவைகளை அறியும் வயது வரவேண்டாமா? பதில்:— தக்க குணவானைத் தேடி விவாஹம்

செய்யாத பிதா பாபி. நரகம் செல்வான், என சாஸ்த்ரம் கூறுகிறது. தனது வயிற்றில் தோன்றிய பெண்ணுக்குச் செய்ய வேண்டிய பொறுப்பு பிதாவுக்கு அதிகமல்லவா? அதை உணர்ந்து செய்யும் பிதாவை விட அறிவு முதிர்ந்தவர்களா பெண்கள்? ஜாத கர்மா, நாம கர்ணம் முதலிய ஸம்ஸ்காரம்போல் விவாஹ ஸம்ஸ்காரத்தைத் தந்தை செய்யும்போது மந்த்ர அர்த்தம் அறிய வேண்டிய அவஶ்யம் பெண்ணுக்கு இல்லை. பிதாவே சிறந்த பொறுப்பாளி.

(4) இளம் வயதில் விவாஹம் செய்வதால் விதவைகள் அதிகமாகின்றனரே! பதில்:—வயதான பின் விவாஹம் செய்தால் அந்த கணவனைக் கொண்டு போவதில்லை என அந்தகன் ஏதேனும் வாக்களித்திருக்கிறானா? பூர்வ கர்மாவுக்கேற்க அவன் அல்பாயுஸ்ஸாக இறக்கிறான். இவள் விதவையாகிறாள். ருதுமதீ விவாஹத்தால் வைதவ்யத்தைத் தடுக்க முடியாது.

(5) பால்ய விவாஹம் செய்து கொள்வோரது ஸந்ததி பலஹீனர்களாகப் பிறக்கின்றனரே! பதில் :—பெற்றோரது ஶரீர பலமே குழந்தை பலத்திற்குக் காரணம். 20 வயதிற்கும்மேல் மணம் புரியும் பெண்ணின் குழந்தைகளும் பலஹீனமாக இருப்பதைக் காண்கிறோம்.

(6) ஸதிபதிகள் ஒருவரை ஒருவர் நேசித்துக்காதல் மணம் புரிவதே ஸந்தோஷத்திற்கு இடமாகும். பெற்றோர் செய்து வைக்கும் பால்ய விவாஹத்தில் தம்பதிகள் எலியும் பூனையும்போல் ஸுகமின்றி வாழ்கின்றனரே! பதில் :—காதல் மணத்தின் அழகைக்கண் கூடாகக் காண்கின்றோம். நமது பத்திரிகையில் எழுத முடியாத பல ஆபாஸங்கள் தோன்றி அதனால் விவாஹ ரத்தில் வந்து முடிகின்றன. அத்தகைய விவாஹத்தில் கற்பு ப்ரஶ்னை ஒருவாறு இருக்க, தற்சமயம் கண்ணுக்குப் பிடித்தவரை மணந்தால் அவர் பரம்பரையிலுள்ள ரஹஸ்யமான கர்ம வ்யாதி, குணக் குறைவு, முதலிய பல துன்பங்கள் பின்னரே தெரிந்து பல துன்பங்கள் தோன்றுகின்றன. பால்ய விவாஹத்திலோ இருவர்க்கும் என் பதி, என்

மனைவி என்ற பரஸ்பர அன்பு, தர்ம உறத்தால் பெற்றோரின் அன்பு நீர் பெருக்கால், நாளுக்கு நாள் வளர்கிறது. தர்ம விவாஹம் எப்போதும் பிரியாமல் இருவரையும் பிணைத்திருக்கின்றது.

(7) பால்ய விவாஹம் பெண் கல்விக்குத் தடங்கலாக இருக்கின்றதே. பதில்— பெண்களுக்கு அவஶ்யமானது மதக் கல்வி. அது தற்காலக் கலாசாலைகளில் கற்பிக்கப் படாததுடன் விபரீதமான கல்வியும் போதிக்கப்படுகிறது. அதனால் உண்டாகும் தீமைகள் கொஞ்சமல்ல. ஆதலால் வீட்டில் கற்கும் தர்மப்படிப்பே போதும்.

(8) கார்க்கி, மைத்ரேயீ, ஸீதா, த்ரௌபதி இவர்கள் நன்கு படித்தவர்களாகக் கூறப்படுவதால் பெண் கல்வி அவஶ்யமல்லவா ? பதில் :—பெண் கல்வி மிக மிக அவஶ்யமே. அனால் தத்காலம் கலாசாலைகளில் படிப்பதுபோல் அவர்கள் கற்றதாக ப்ரமாணமில்லை. பெற்றோரிடமே குடும்ப வேலை, பின்னல், தையல், பாட்டு, சமயல், வைதிக கர்மா, ஸதாசாரம், வேதாந்தம் இவைகளைப் பயின்றனர்.

(9) ஆண்களோடு கலந்து படிப்பதால் தைர்யம், உயர்ந்த குணம், விஶாலமான நோக்கம் முதலிய பல நன்மைகள் உண்டாகுமல்லவா ? பதில் :— இத்தகைய குணம் புருஷர்களுக்கே உண்டாகவில்லை. அப்படி அதனால் உண்டாவதானாலும் குணத்தைவிட தோஷமே அதிகமாவதைக் காண்கிறோம். நெய் குடம் பெண். நெருப்பு குடம் புருஷன். இரண்டையும் ஒன்று சேர்க்காதே என ஶாஸ்த்ரம் கூறுகிறது. இருவரும் சேர்ந்து கலாசாலைகளில் நடப்பதே சாக்ஷி.

(10) ஒரு ஸமயம் அவஶ்யம் நேர்ந்தால் பெண்கள் படித்திருந்தால் கணவனுக்குப் பிறகு உத்யோகம் செய்ய உதவுமல்லவா ? பதில்:—பெண்கள் ஜீவநத்திற்குத் தானே ஸம்பாதிக்க வேண்டிய நிலை ஏற்படுத்தக் கூடாது, இளமையில் பெற்றோரும், பருவத்தில் பதியும், முதுமையில் மக்களும் கார்க்க வேண்டும் என தர்ம நூல் கூறுகிறது.

இம் மூவரும் இல்லாத துர் தசையில்கூட பெண்கள் உத்யோகம் செய்யவில்லே. கற்பையிழப்பதாயின் இவைகளில் ஆசை வைக்கலாம், உத்யோகம் பார்ப்பவர் கற்பற்றவரா ? என சீறிவிழுவர் சிலர். அன்ய புருஷர்களுடன் பேசுவதும் பழகுவதும் கை குலுக்குவதும் கற்புக்கு பங்கமேயாகும். அன்யர் போகமில்லாதது மாத்ரம் கற்பல்ல.

கன்யகை, வரன்களின் லக்ஷணமும் தோஷமும்— அதிக அங்கமுள்ளவள், ரோகமுள்ளவள், உடலில் அதிகரோமம் உள்ளவள், ரோமமே இல்லாதவள், செம்பட்டை மயிர் உள்ளவள். பூனேக்கண் உள்ளவள், மரம், நக்ஷத்திரம், பக்ஷி. பாம்பு இவைகளின் பெயருள்ளவள், மிக குள்ளமானவள், ரொம்ப தீர்க்கமானவள். குறைவான அங்கமுள்ளவள், புருஷனேப்போல் இருப்பவள், புருஷனேப் போல் நடை, பேச்சு உள்ளவள், தாய். தந்தை, ஸஹோதரி, ஸகோதரன் இல்லாதவள் ஆகிய கன்யகைகளே மணந்து கொள்ளக் கூடாது.

ஹம்ஸம்போன்ற சப்தமுள்ளவள், தேன்போன்ற வர்ணமுள்ளவள், தந்தையின் ஸமான கோத்ரமில்லாதவள், தாயின் ஸமான ப்ரவரம், ஸமான பிண்டம் இல்லாதவள் ருதுவாகாதவள், முன் ஒருவனுக்குக் கன்யகாதானம் செய்யப்படாதவள், தன்னேவிட வயது குறைந்தவள். இத்தகைய கன்யகைகளே விவாஹம் செய்துகொள்வதற்கு ஏற்றவர்கள். தன் தாயைக்கொண்டு கன்யகையை ஏகாந்தமாக நன்கு பரீக்ஷிக்கவேண்டும். பிறகே விவாஹம் நிச்சயிக்க வேண்டும். நல்ல குலம், சீலம், சரீரம், வயஸ், வித்யை, தனம், பந்துக்களுடன் கூடியவன் என்ற வரலக்ஷணங்களேக் கவனித்துக் கன்யகாதானம் செய்யவேண்டும். கன்யகையைவிட இருமடங்கு அதிக வயஸ் உள்ளவனுக இருக்கவேண்டும் வரன். நபும்ஸகனு என பரீக்ஷித்துப் பின்பே கன்யகையை அளிக்கவேண்டும். நிஷ்டூரனுகவும். க்ரூரனுகவும், தீய குணமுள்ளவனுகவும் உள்ளவன் நற்குலத்தில் பிறந்தவனுக இருக்கமாட்டன். அத்தகைய வரனுக்குக் கன்யகையை அளிக்கக்கூடாது.

பிதாவைக் கொண்டு, மாப்பிள்ளையை நன்கு பரீக்ஷிக்க வேண்டும், பிறகே கன்யகாதானம் செய்யவேண்டும்.

வெட்கம் தெரிவதற்குள், மண்ணில் விளையாடும் காலத்தில், பசு நடமாடும் வீதியில் நிற்கும் காலத்தில், கன்யகைகளுக்கு விவாஹம் செய்வது உத்தமம்.

ருதுவாவதற்குள்ளாவது விவாஹம் செய்யவேண்டும். ருதுவானபின் விவாஹம் செய்தால், ஒவ்வொரு மாதமும் பித்ருக்கள் அந்த ரஜஸ்வலா ரத்தத்தைக் குடிக்க நேரும். ரஜஸ்வலையை விவாஹம் செய்தால் தாய், தந்தை, மூத்த ஸஹோதரன் ஆகிய மூவரும் நரகம் செல்வர்.

பெண்களுக்கு விவாஹம் என்பது உபநயன கர்மாவானதால், காலத்தில் விவாஹம் செய்யவேண்டும். பெண்ணின் உடலில் ரோமம் உண்டாகும்போது ஸோமன் அவளை ஏற்கிறான். ஸ்தனம் உண்டாகும்போது அக்னியும். ரஜஸ் உண்டாகும் போது கந்தர்வனும் அவள் உடலை ஏற்று அனுபவிக்கின்றனர். ருது ஆனவளை விவாஹம் செய்து கொண்டவன் எந்த வைதிக கர்மாவிற்கும் ஏற்றவனல்ல. ப்ரும்மஹத்தி செய்தவன்போல் நித்யம் தீட்டுள்ளவனாவன். ஒரு முறைதான் ஸஹோதரர்களுக்கு பங்கு பிரித்தல், ஒரு முறைதான் கன்யகாதானம். ஒரு முறை தான் தருகிறேன் எனக் கூறுவது இம்மூன்றையும் மறுமுறை செய்யலாகாது. குலம் சீலம், குணம், கல்வி. தனம், ஆகியவை இல்லாதவனுக்கும் நபும்ஸகனுக்கும் கன்யகையைக் கொடுப்பவன் நரகம் செல்வான். அரசன் அவனை சிக்ஷிக்க வேண்டும். ஆதலால் தக்க வரனைத்தேடி அளிப்பது நம் கடமை.

கன்யகாதனம் ஆவதற்குள், வரவேற்பு. ஜானுவாஸம். நிச்சிதார்த்தம், வ்ரதம். பரதேசிக் கோலம் முதலியவைகள் ஆனபின்பு வரன் அல்லது கன்யகை தோஷம் உள்ளவர் என அறிந்தால், கன்யகாதானத்திற்குள் அந்த விவாஹத்தை நிறுத்தி வேறு விவாஹம் செய்யலாம் என்று நாரத ஸ்ம்ருதி கூறுகிறது.

## எட்டு வித விவாஹங்கள்

ப்ராம்மம், தெய்வம், ஆர்ஷம், ப்ராஜாபத்யம் ஆஸுரம், காந்தர்வம், ராக்ஷஸம், பைசாசம் என 8 வித விவாஹங்கள் உள்ளன.

1. ப்ராம்மம்: வேதம் அறிந்து, நற்குணமுள்ளவரைப் பூஜித்து, அலங்கரித்துக் கன்யாதானம் செய்வது ப்ராம்ம விவாஹம் எனப்படும். ப்ராம்ம விவாஹத்தால் பிறக்கும் புத்ரன் தனக்கு முன் உள்ள 10 தலைமுறை, பின்வரும் 10 தலைமுறை, தான், ஆக 21 தலைமுறைகளைப் பாபத்திலிருந்து விடுவித்து நன்மை உண்டுபண்ணுகிறான். (இப்போது நாம் செய்வது ப்ராம்ம விவாஹம் எனக் கூறப்படுகிறது.)

2. தெய்வம்: யக்ஞத்தில் ஒரு ரித்விக்காக உள்ளவருக்குக் கன்யகையை அலங்கரித்து, தக்ஷிணையாகக் கொடுத்து விவாஹம் செய்வது தெய்வ விவாஹம் எனப்படும். இந்த விவாஹத்தால் பிறக்கும் புத்ரன் 15 தலைமுறைகளை முன்போல் பாபத்திலிருந்து விடுவித்துத் தானும் நற்கதி பெறுவான்.

3. ஆர்ஷம்: ஒன்று அல்லது இரண்டு பசுவையும் காளையையும் வரனிடமிருந்து வாங்கிக்கொண்டு விதிப்படி விவாஹம் செய்வது ஆர்ஷ விவாஹம் எனப்படும். அதனால் ஜனிக்கும் புத்ரன் 7 தலைமுறைகளைப் பாபத்திலிருந்து விடுவிப்பான்.

4. ப்ராஜாபத்யம்: இருவரும் தர்மத்தைச் செய்யுங்கள் என்று கூறி, விவாஹம் செய்வது ப்ராஜாபத்யம் எனப்படும். அதனால் பிறந்தவன் 13 தலைமுறைகளைப் பாபத்திலிருந்து விடுவிப்பான்.

இந்த நான்கு விவாஹத்தால் உண்டாகும் புத்ரர் மறுமையில் அந்தந்த பலன்களைத் தருவதுடன், இப்பிறவியிலும் மிக்க ப்ரும்மவர்ச்சஸ் உள்ளவர்களாக இருப்பார்கள். நீண்ட ஆயுளும் ஆரோக்யமும், செல்வமும், போக பாக்யமும் பெற்றிருப்பார்கள்.

5. ஆஸுரம் : கன்யகைக்கோ, அவளைச் சார்ந்த வர்களுக்கோ சக்திக்கு அதிகமாக பணத்தைத் தந்து விவாஹம் செய்வது ஆஸுர விவாஹமாகும். இதனால் உண்டாகும் புத்ரர் க்ரூரராகவும், பொய் சொல்பவராக வும், நிந்திக்கத்தக்கவராகவும் இருப்பார்கள். ஆதலால் ஆஸுரம் முதலான மற்ற விவாஹங்கள் ஶ்லாக்யமல்ல.

6. காந்தர்வம் : ஆணும் பெண்ணும் இச்சையால் ஒன்று கூடி, பிறகு விவாஹம் செய்துகொள்வது காந்தர்வ விவாஹமாம். இது க்ஷத்ரியர்களுக்கேற்றது. இதில் தர்மமில்லை.. கேவல காமமே ப்ரதானமானதால், இது காந்தர்வம் எனப்படும்.

7. ராக்ஷஸம் : அடித்து, உதைத்து, அழ அழத் தூக்கி வந்து விவாஹம் செய்து கொள்வது ராக்ஷஸ விவாஹமாம்.

8. பைஶாசம் : ஏமார்ந்த போதோ, தூங்கும் போதோ, புத்தி ஸரியாக இல்லாதபோதோ, ஏகாந்தத் தில் கூடி விவாஹம் செய்து கொள்வது பைஶாச விவாஹம் எனப்படும். இது மிகவும் நீசமானது.

பெண்களுக்குப் பணமளித்து, மணப்பது ஆஸுர விவாஹம் என்றும், அதனால் உண்டாகும் குழந்தை க்ரூரனாகவும், பாபியாகவும் ஆவான், என்கின்றது தர்ம சாஸ்திரம். தற்சமயம் அதற்குப்பதில் வரனுக்குத் தனம் அளித்து அதாவது. அவர்கள் சொல்கிறபடி தனமாகவும், வரிசைகளாகவும் செய்து, பெண்ணைப் பெற்றவன் இதனால் ஸொத்தை இழந்து கஷ்டப்படும்படியும் விவா ஹம் செய்கிறோம். இது முற்றிலும் ஆஸுர விவாஹம் என்பது சொல்லாமலே விளங்கும். ஆதலால், அதனால் உண்டாகும் குழந்தைகள் பெற்றோருக்கு அடங்காமல் துராசாரம் உள்ளவர்களாயிருப்பதில் ஆச்சர்யமில்லை.

ப்ராம்மம், தெய்வம், ஆர்ஷம், ப்ராஜா பத்யம் என்ற இந்த நான்கில் ஒன்றை ப்ராம்மணன் அனுஷ்டிக்க லாம். க்ஷத்ரியனுக்கு காந்தர்வம், ஆஸுரம் என்ற விவா ஹம் உசிதமானது. வைஶ்யனுக்கும் சூத்ரனுக்கும்

ஆஸுர விவாஹம் உசிதமானது. பைசாச விவாஹம் எவருக்கும் ஏற்றதல்ல, பரம நீசமானது.

பணமே ப்ரதானமான ஆஸுர விவாஹம் இப்போது நம்மால் அனுஷ்டிக்கப்படுகிறது. அதனால் உண்டாகும் ஸந்ததி, எந்த வழியிலாவது பணத்தைத் தேடுவது என்ற கொள்கையைக் கொண்டு. தன் ஜாதிக்குத் தகாததும், மற்றவர்கூட செய்ய அஞ்சுவதுமான நீச வேலைகளைச் செய்கின்றனர். அதனால் ஜாதிச் சண்டை வளர்கிறது. தனமுள்ளவர் பெண்ணை மஹாலக்ஷ்மியாகப் பாவித்து, ஸ்ரீ தனத்தைத் தன் இஷ்டப்படி கொடுப்பதை சாஸ்த்ரம் ஆமோதிக்கின்றது. சிறிதளவாவது கொடுக்க வேண்டுமென்றும் கூறுகிறது. ஆனால் "இவ்வளவு கொடுத்தால் தான் விவாஹம் செய்து கொள்வேன். இதைச் செய்துகொண்டு வந்தால்தான் வீட்டில் சேர்ப்பேன்" என்று கூறுவது மிக பாபமானது. ஸமூஹத்தைக் கெடுக்கக் கூடியது. ஆதலால் ஆதரவுடன் இதைப் படிக்கும் நம் அன்பரேனும் இந்தப் பாபம் செய்யாமல், ஸ்ரீ தனமாகக் கொடுப்பதைப் பெற்று விவாஹம் செய்ய வேண்டும். விவாஹத்திற்கு முன் வேத சாஸ்த்ரம் அறிந்தவரைக் கொண்டு விவாஹ மந்த்ர அர்த்தங்களைக் கூறும்படி சொல்லிக் கேட்க வேண்டும். இந்த கர்மா எதற்காக என உணர்ந்து நன்கு அதை அனுஷ்டிக்க வேண்டும். வீண் செலவை நிறுத்த வேண்டும். ஸௌகர்யப்பட்டவர் கன்யகாதானம் பெற்றவுடன், புருஷன் வீட்டிற்கு வந்து,ப்ரவேஶஹோமம்(ப்ரவிஶ்யஹோமம்) விதிப்படி செய்யவேண்டும். விவாஹமான நாளே ஊர் வலம் நடத்தி பந்துக்களை அனுப்பிவிட்டு, நான்கு நாட்கள் க்ரமமாக ஔபாஸனம் செய்து, விதிப்படி ஶேஷ ஹோமம் செய்யவேண்டும். தவறாமல் ஸ்தாலீபாகமும் ஆரம்பிக்கவேண்டும்.

ஸமாவர்த்தனமான பிறகு வரன் காசிக்குப் புறப்படும்போது பந்துக்களைப் பார்த்து "ப்ரும்மசர்யத்தை முடித்து நான்கு வ்ரதங்களையும் செய்து முடித்தேன். யான் காசிக்குச் செல்லத் தாங்கள் உத்தரவு கொடுங்கள்" என்று கூறி ப்ரார்த்திக்க வேண்டும். இதைக்

கேட்டு கன்யகையின் பிதா, "ஓ ப்ராம்மண, அலங்காரம் செய்து எனது கன்யகையை உமக்குத் தருகிறேன். அவளை மணந்து கொண்டு ஔபாஸன அக்னியுடன் காசி செல்லலாம், நம் வீட்டிற்கு வாரும்" என்று பதில் கூற வேண்டும். விவாஹம் செய்து கொள்ளப்போகும் வரனுக்கும் கன்யகைக்கும் அவர்களது தந்தை இந்த விவாஹத்திற்குப் பூர்வ அங்கமாக அங்குர, ப்ரதிஸரபந்தம் என்ற இரு கர்மாக்களைச் செய்ய வேண்டும். அங்குரம் என்பது பாலிகை என்றும், ப்ரதிஸரம் என்பது கங்கணம் என்றும் கூறப்படும். கங்கண பந்தம் என்பதைக் காப்பு கட்டிக் கொள்வது என்பார்கள். பாலிகை காப்பு என்ற இரண்டும் ஒரே பொருளைக் கூறும் சொற்கள். இந்த விவாஹ கர்மா விக்னமின்றி நடக்க வேண்டும். இதில் பூஜிக்கப்படும் தேவதைகள் இந்த தம்பதிகளைக் காப்பாற்ற வேண்டும் என்பதற்காக இவை செய்யப்படுகின்றன.

### அங்குரார்ப்பணம்

சௌளம், உபநயனம், ஸ்நாநம், விவாஹம் ஆகிய இந்த கர்மாக்களில் அங்குர அர்ப்பணம் என்ற கர்மாவைச் செய்ய வேண்டும். போதாயனர் என்ற மஹர்ஷியால் கூறப்பட்ட கர்மாக்களில் உதக ஶாந்தி, அங்குரார்ப்பணம், ப்ரதிஸர பந்தம் என்ற கர்மாக்களை ஆபஸ்தம்ப ஸூத்ர ரீதியாக ஸ்மார்த்த அல்லது க்ருஹ்ய கர்மாவைச் செய்வோரும் பின்பற்ற வேண்டும்.

வழக்கப்படி அநுக்ஞை, விக்நேஶ்வர பூஜை, ஸங்கல்பம் முதலியவைகளைச் செய்து முடித்து, முதலில் புண்யாஹ வாசநம் செய்ய வேண்டும். (அங்குர ப்திஸரம் போல் புண்யாஹவாசநமும் பல கர்மாக்களில் அங்கமாகக் கூறப்பட்டுள்ளது). 5 பாலிகைகளைக் கொண்டு வந்து அவைகளின் அடியில் அருகம்புல், அரச இலை, வில்வ பத்ரம் முதலியவைகளை வைத்து வெண்மை நிறமுள்ள நூலால் சுற்றி சுத்தமான மண்களால் அவைகளை நிறப்ப வேண்டும்.

புண்யாஹவாசன ஜலத்தால் கூர்ச்சத்தைக் கொண்டு (கூர்ச்சம் என்பது தர்ப்பை முஷ்டியை நுனி

யில் பவித்ரம்போல் ஒருவகை முடிபோட்டுள்ளது) வ்யாஹ்ருதியைக் கூறி 5 பாலிகைகளையும் ப்ரோக்ஷிக்க வேண்டும். நடுவில் ஒரு பாலிகையை வைத்து 4 பக்கங்களில் நான்கு பாலிகைகளை வைக்க வேண்டும். முதலில் நடுவிலுள்ள பாலிகையில் " ஓம் பூ: ப்ரும்மாணம் ஆவாஹயாமி, ஓம் புவ: ப்ரஜாபதிம் ஆவாஹயாமி, ஓம் ஸுவ: சதுர்முகம் ஆவாஹயாமி. ஓம் பூ—வ: ஹிரண்ய கர்ப்பம் ஆவாஹயாமி. ப்ரும்மாதிநாம் இதம் ஆஸநம்" என்று ஆவாஹந ஆஸநாதிகளைச் செய்ய வேண்டும். இதேபோல் கிழக்குப் புறத்திலுள்ள பாலிகையில் தனித் தனியாக 3 வ்யாஹ்ருதிகளைக் கூறியும் சேர்த்துக் கூறியும் " இந்த்ரம் ஆவாஹயாமி, வஜ்ரிணம் ஆவாஹயாமி, ஶதக்ரதும் ஆவாஹயாமி, ஶசீபதிம் ஆவாஹயாமி" என்று இவர்களை ஆவாஹநம் செய்ய வேண்டும். இந்த்ராதீநாம் இதம் ஆஸநம். தெற்குப் புற பாலிகையில் யமன், வைவஸ்வதன், பித்ருபதி, தர்மராஜன் ஆகியவர்களை முன்போல் வ்யாஹ்ருதிகளால் ஆவாஹநம் செய்து யமாதீநாம் இதம் ஆஸநம் என்று ஆஸநம் அளிக்க வேண்டும். மேற்கு பாலிகையில் வருணம், ப்ரசேதஸம், ஸுரூபிணம், அபாம் நிதிம் ஆவாஹயாமி என இவர்களை வரித்து வருணாதீநாம் இதம் ஆஸனம் என ஆஸநமளிக்க வேண்டும். வடபுற பாலிகையில், ஸோம, இந்து, நிஶாகர, ஒஷதீஶ என்றவர்களை ஆவாஹநம் செய்து ஆஸநமும் கொடுக்க வேண்டும்.

பாலிகைகளுக்குப் பரிஸ்த்ரணம் செய்து " ப்ரும்மாதிப்யோநம: இதம் பாத்யம், இதம் அர்க்யம், இதம் ஆசமநீயம்" என பூஜை செய்து ஆபோ ஹிஷ்டா என்று 3 மந்த்ரங்களாலும், ஹிரண்யவர்ணா, என்ற 4 ரிக்குகளாலும், பவமான என்ற அநுவாகத்தாலும் அபிஷேகம்போல் ஜலத்தை ப்ரோக்ஷித்து வஸ்த்ரம் தூபதீப நிவேதந, தாம்பூல மந்த்ர புஷ்ப ஸ்வர்ணபுஷ்பாதிகளைத் தந்து ஷோடஶோபசாரத்தைச் செய்யவேண்டும். பாலிகா திரவ்யங்களை பாலாலும் ஜலத்தாலும் நனைத்துக் கூர்ச்சத்துடன் பாலிகா த்ரவ்ய பாத்ரத்தை எடுத்துக் கொண்டு எழுந்து நின்று உபஸ்தாநம் செய்யவேண்டும்.

உபஸ்தாந மந்த்ரம்: "திஶாம் பதீன் நமஸ்யாமி,ஸர்வகாம பலப்ரதான் குர்வந்து ஸபலம் கர்ம குர்வந்து ஸததம் ஶுபம்" ஸர்வ காமனைகளையும் பூர்த்தி செய்து வைக்கும் திக்பாலர்களை நமஸ்கரிக்கிறேன். அவர்கள் கர்மாவை ஸபலமாகச் செய்யட்டும், கர்மாவை மங்களமாகச் செய்யட்டும்.

பாலிகா தான்யங்கள் : நெல்லு, உளுந்து, எள்ளு, பச்சைப் பயர் கடுகு என்றவை பாலிகா த்ரவ்யங்கள். சிறிது முன்னமே ஊறவைத்து அதன் பிறகு பாலிகையில் இவனும் ஸுமங்கலிகளும் இந்த விதைகளைப் போட்டு 4 நாட்களும் காலை மாலைகளில் ஜலம் விட்டு வைத்திருந்தால் நன்ருக முளைத்து ஓங்கி வளரும். அது தம்பதிகளது வளர்ச்சிக்கும் அவனது ஸந்ததி வளர்ச்சிக்கும் அறிகுறியாகும். சில விடங்களில் நவக்ரஹ த்ரவ்யமான, கோதுமை, நெல்லு. துவரை. பயத்தம்பயர். கடலை, மொச்சைக் கொட்டை, எள்ளு, உளுந்து. கொள்ளு ஆகியவைகளைப் பாலிகா த்ரவ்யங்களாக உபயோகின்றனர். பலவிடங்களில் தான்யக் கடைகளில் சிந்திக் கிடக்கும் ஸகல தான்யங்களையும் (மிளகாய் விதை உள்பட) கடைக்காரன் கொடுத்ததையே பாலிகா த்ரவ்யங்களாக உபயோகிக்கின்றனர். அது நியாயமில்லை.

உபஸ்தானம் ஆனபிறகு ஒஷதி ஸூக்தங்களைப் பாராயணம் செய்ய நான்கு பேருக்குக் குறையாமல் ப்ராம்மணர்களை வரித்து, ஜபம் ஆனபின் அவர்களுக்குத் தக்ஷிணை தரவேண்டும். யா ஜாதா என்ற அனுவாகம் ஒஷதி ஸூக்தமாம்.

மத்யம பாலிகையில் ப்ரும்மஜக்ஞானம், பிதாவிராஜா என்ற மந்த்ரங்களைக் கூறி, ப்ரும்மாதிப்யோ நமঃ, அயம் பீஜாவாப : என்று, மந்த்ரத்தால் ஒரு முறையும், மந்த்ரமில்லாமல் இருமுறையும் பாலிகா த்ரவ்யங்களை அதில் விதைக்க வேண்டும். கிழக்குப் பாலிகையில் யத இந்த்ர-ஸ்வஸ்திதா என்ற மந்த்ரங்களால் இந்த்ராதிப்யோ நமঃ அயம் பீஜாவாப : என முன்போல் மந்த்ரத்தால் ஒரு

முறையும் மந்த்ரமில்லாமல் இருமுறையும் பீஜங்களை விதைக்க வேண்டும். தெற்கில் யோஸ்ய. யமங்காய என்பவைகளால். யமாதிப்யோ நமஃ அயம் பீஜாவாபஃ. மேற்கில் இமம்மே வருண-தத்வாயாமி என்பவைகளால் வருணாதிப்யோ நமஃ அயம் பீஜாவாபஃ. வடக்கில் ஸோமோதேனும்-ஆப்யா யஸ்வ என்பவைகளால் ஸோமாதிப்யோ நமஃ அயம்பீஜாவாபஃ என பீஜாவாபம் செய்து, பஞ்சகவ்யத்தாலும் சுத்தமான மணலாலும் மூடி, கர்மா முடியும் வரை நன்கு அதைக் காப்பாற்ற வேண்டும். காலை மாலைகளில் நிவேதனம் முதலிய பூஜைகளைச் செய்து வரவேண்டும். கர்மா முடிந்த பிறகு ஒற்றைப்பட்ட நாளில் ப்ரணவம், வ்யாஹ்ருதி முதலிய அதே மந்த்ரங்களால் முறையே ப்ரும்மாதி தேவர்களை உத்வாஸனம் செய்து, நதியிலோ, குளத்திலோ அந்த முளைகளை விட்டு, பாலிகை பாத்ரத்துடன் வீட்டிற்குக்கொண்டுவரவேண்டும். புருஷர் விதை விதைத்த பின் கன்யகைகளோ, ஸுமங்கலிகளோ, 3 அல்லது 5 அல்லது 7 பேர் கூர்ச்சத்துடன் அந்த விதைகளையும் அத்துடன் உள்ள தீர்த்தத்தையும் பாலிகையில் மூன்று மூன்று முறை போடவேண்டும். ஸுமங்கலிகளானால், குழந்தை உள்ளவர்களாகவும் பஹிஷ்டை நீங்காதவர்களாகவும் இருக்கவேண்டும். அவர்களுக்குச் சந்தன தாம்பூலமளித்துப் பூஜை செய்யவேண்டும்.

## ப்ரதிஸர பந்தம்

ஒரு கார்யத்தைச் செய்து முடிப்பதாக ஸங்கல்பம் செய்து கொள்பவனை "தீக்ஷை செய்து கொண்டு திறிகிறான். காப்புக்கட்டிக் கொண்டு திறிகிறான்" என்றும் சொல்வர். அந்தக் கர்மா உபநயனமாகவோ, விவாஹமாகவோ இருக்கலாம். ஆலயங்களில் நடக்கும் ப்ரும்மோத்ஸவத்தில் முக்யமாக அதை நடத்துபவர் கங்கணம் கட்டிக்கொள்வர். அந்தக் கங்கண தாரணம் ஆன பிறகு அந்தக் கர்மா முடியும் வரை அவருக்குப் பங்காளிகள் இறந்தது மூலம் அல்லது குழந்தை ப்ரஸவம் ஆனது மூலமாக வரும் ஆசௌசம், வ்ருத்திகள் உண்டாவதில்லை. அவரைப் பலவகைகளிலும் காப்பாற்றுவதால் அதற்கு "காப்பு" எனப் பெயராம். நித்யப்படியே பெண்கள்,

சில தேசங்களில் ஆண்களும், வெள்ளி அல்லது தங்கத்தி ஞல் கங்கணம் தரித்துக் கொள்வர். அது கேவலம் அலங் காரம் மாத்ரமல்ல. ரக்ஷையும் ஆகும். சில விடங்களில் கை கால்களில் ரோகம் வந்தவர் வெள்ளியிஞல் ஒரு காப்பு போல் தரித்து, அதைக் "தடை" என்று கூறுவர். அதாவது அது நோய் வர விட்டாமல் தடுப்பதாகும்.

ஆஞல் நூலால் 9 மடிப்பாகத் திரிக்கப்பட்டு மஞ் சள் பூசிய ப்ரதிஸரம் ஸ்மார்த்த, ஆகம, புராண கர்மாக் களில் அணியப்படுகிறது. த்ராஹ்யாயணர் என்ற ஸாம வேத ஸூத்ரக்காரர் ஸாமவேத ஶ்ராவ்ணத்திலும், இதைத் தரித்துக் கொள்ளும்படி கூறி இருக்கிருர்.

இந்த கர்மாவும் போதாயனர் கூறியபடி ஆபஸ் தம்பிகளால் அனுஷ்டிக்கப்படுகிறது. புருஷர்களுக்கு அன்ன ப்ராஶனம், சௌளம், உபநயனம், ஸ்ஞனம் விவாஹம் ஆகிய வைதிக கர்மாக்களில் ப்ரதிஸரபந்த கர்மாவைச் செய்யவேண்டும். பெண்களுக்கு பும்ஸவன, ஸீமந்தோன் நயன, அன்னப்ராஶன, சூடா கர்ம. விவா ஹங்களில் ப்ரதிஸரபந்தம் செய்ய வேண்டும். புராஞதி களில் கூறப்படும் வரலக்ஷ்மீ வ்ரதம் போன்ற சிற்சில வ்ரதங்களிலும் கங்கண தாரணம் உண்டு.

முன்போல் அனுக்ஞை, விக்னேஶ்வர பூஜை, முத லியவைகளைச் செய்து. இன்ன நக்ஷத்ரம் இந்த ராஶியில் பிறந்த இன்ஞருக்குப் போதாயன உக்த ப்ரகாரமாக ப்ரதிஸர பந்த கர்மா செய்கிறேன் என ஸங்கல்பம் செய்ய வேண்டும். உதக ஶாந்திக்கு வைப்பது போல் சுத்தமான இடத்தில் கலஶத்தை வைத்து அதில் வரு ணனை, இமம்மே வருண என்ற மந்த்ரத்தால் ஆவாஹனம் செய்து, நிவேதனம் வரை பூஜை செய்ய வேண்டும்.

கலஶத்திற்கு வடக்கே வெண்கல பாத்ரத்தில் அரிசி யை வைத்து அதன் மீது பஞ்சிஞல் நூற்ற நூலை 9 மடிப் பாக முறுக்கி மஞ்சள் பூசி, தாம்பூலத்துடன் வைக்க வேண்டும். பிறகு ப்ரதிஸரபந்த ஜபம் செய்ய நான்கு ப்ராம்மணர்கள் மீது அக்ஷதையைப் போட்டு ஜபம் செய்ய வரிக்க வேண்டும், அந்த ரித்விக்குகளுடன் கும்

பத்தைத் தொட்டுக் கொண்டு காயத்ரியைப் பதம் பத மாகவும், பாதமாகவும் கூறி நான்கு வேதங்களின் ஆதி யையும் க்ருணுஷ்வபாஜ என்ற அனுவாகத்தையும், அக்னே யசஸ்வின் என்ற நான்கு ரிக்குகளையும், ததிக்ரா விண்ண, ஆபோ ஹிஷ்டா. ஹிரண்யவர்ணு, பவமான, வருண ஸூக்தம், ருத்ர ஸூக்தம், ப்ரும்ம ஸூக்தம், விஷ்ணு ஸூக்தம், துர்கா ஸூக்தம், ஸ்ரீஸூக்தம் முதலி யவைகளையும் நமோ ப்ரும்மணே என்பதை மூன்று முறையும் ஜபித்து, வருணனை யதாஸ்தானம் செய்ய வேண்டும். ப்ரணவத்தைக் கூறி, கும்பத்தை எடுத்து. ஸுரபிமதி ரிக்கால் ஜலத்தைப் போற்றும் மந்த்ரங்களால் அந்த ப்ரதிஸரத்தை ப்ரோக்ஷிக்க வேண்டும். தேவஸ்யத் வா என்ற மந்த்ரத்தால் மும்முறை கர்த்தாவை ப்ரோ க்ஷிக்க வேண்டும். இந்த மந்த்ரங்கள் நமது பீடையை அகற்றி, நம்மைச் சுத்தமாக்கி நன்மையைத் தரும் அர்த்த முள்ளவை.

ப்ரதிஸர ஸூத்ரத்தை எடுத்து இடது கை கட்ட விரல், மோதிர விரல்களால் அடியைப் பிடித்துக்கொண்டு வாஸுகியை மனதால் நினைக்க வேண்டும். வலது கை கட்டவிரல், மோதிர விரல்களால் விபூதியை அடி முதல் நுனி வரை த்ரயம்பகம் என்ற மந்த்ரத்தைக் கூறி ஒரு முறையும், மந்நரம் இல்லாமல் இருமுறையும் மேல் நோக்கித் தடவ வேண்டும். பிறகு இரு கரங்களிலும் அரிசியை நிறப்பி அதன்மீது பழத்தையும் அதன் மேல் அந்த ஸூத்ரத்தையும் வைத்து, அக்னி ராயுஷ்மான் என்ற 5 பர்யாயங்களால் மந்த்ரித்து, க்ரஹப்ரீதி செய்யவேண் டும். பிறகு. புருஷனுல் வலது, கையிலும் பெண்ணுல் இடது கையிலும் ஸூத்ரத்தைக் கட்டவேண்டும். கட்டும் போது "ப்ருஹத்ஸாம" என்ற மந்த்ரத்தைக் கூற வேண்டும். விபூதியால் "யோ ப்ரும்மா" என்ற க்ருதஸூக் தத்தால் ரக்ஷை செய்யவேண்டும். பிறகு ப்ராம்மணர் களுக்கும் ஆசார்யருக்கும் தக்ஷிணை த்ரவேண்டும்.

எந்த கர்மாவிற்காக இந்த கங்கண தாரணம் செய்து கொண்டோமோ அந்தக் கர்மா பூர்த்தியானபின் ஸாயம்

ஸந்த்யா காலத்தில் வ்யாஹ்ருதியைக் கூறி, ஸூத்ரத்தை அவிழ்த்து நதியிலோ தடாகத்திலோ போடவேண்டும்.

---

இத்துடன் ப்ரதிஸரபந்த கர்மா பூர்த்தியாகின்றது.

பாலிகையை விடுவதுபோல் ஷ்டி ஸூத்ரத்தையும் அவிழ்த்து ஜலத்தில் விடவேண்டும் என்றாலும் சிஷ்டாசாரத்தில் அப்படிச்செய்வதில்லை. கர்மாங்கமான காரியம் ஆய்விட்டாலும். அது நமது கரத்திலேயே இருந்தால் நமக்கு நன்மை. ஜலத்தில் போடுவது என்பது முக்ய தாத்பர்யமல்ல. அங்கமுமல்ல. சுத்தமான விடத்தில், பழய பூணலைப்போல், அசுத்தமாக்காமல் வைக்கவேண்டும் என்றே அதன் பொருள் என்றும், பெரும்பாலும் முன்னவர் எப்போதும் சுத்தராகவே இருந்ததாலும் அதை எறிவதில்லை. விநாயக சதுர்த்தியில் பூஜை ஆனபின் மறுநாள் அதைச் சுத்த ஜலத்தில் போடவேண்டு மென்று புராணம் கூறினாலும், சிஷ்டர் வீட்டிலேயே அதைச் சுத்தமான விடத்தில் வைப்பதுபோல் இதுவும் ஏற்பட்டிருக்கும். வைஶ்யாதி சில வகுப்பார் விவாஹம் ஆனவுடன் அதை அவிழ்த்து விடுவது ஸஹஜமான ஆசாரமாக இருக்கின்றது.

ஜாநுவாஸம் அல்லது மாப்பிள்ளை அழைப்பது, கல்யாணம் சொல்வது இவை முற்றிலும் லௌகிகமானவை. அதாவது, வைதிகமான கர்மாவோ, மந்த்ரமோ இல்லை. நிஶ்சிதார்த்தம், லக்ன பத்ரிகை என்ற கர்மாக்களிலும் விசேஷமான வைதிக கர்மாக்களில்லை. விக்னேஶ்வர பூஜை செய்து. இன்னாருடைய குமாரியை இன்னவருடைய குமாரனுக்குக் கொடுப்பது என்ற நிச்சயத்தையும், இன்ன லக்னத்தில் பாணிக்ரஹணம் என்ற லக்ன பத்ரிகையையும் சிலவிடத்தில் ஸம்ஸ்க்ருதத்தில் கூறுவர். சிலர் தமிழிலேயே கூறுவர். ப்ரஸூக்மந்தா என்ற இரு மந்த்ரங்களை இச்சமயம் கூறுவர்.

வரன் (மாப்பிள்ளை) செய்ய வேண்டியவை:— நித்ய கர்மாவை முடித்துச் சுத்தனாக, தட்டில் தாம்பூலத்துடன் தக்ஷிணையை எடுத்துக்கொண்டு, நமஸ்ஸதஸே-ப்ருதிவ்யை அஶேஷே ஹே பரிஷத், பவத்பாதமூலே மயா ஸமர்ப்

பிதாம் இமாம் ஸௌவர்ணீம் யத்கிஞ்சித் தக்ஷிணாமபி
யதோக்த தக்ஷிணாமிவ தாம்பூலம்ச ஸ்வீக்ருத்ய. ஆவ
யோ: உத்வாஹ கர்ம கர்த்தும் யோக்யதா ஸித்திரஸ்து
இதி அநுக்ரஹாண" என்று இதைக் கூறி, தக்ஷிணை தந்து,
விவாஹம் செய்து கொள்வதற்கு ஏற்ற யோக்யதையைப்
பெற்றுக் கொள்கிறான். இது வேத மந்த்ரமல்ல. ஸகல
கர்மாக்களிலும் முதலில் செய்ய வேண்டிய கார்யம் இது.
இதன் பொருள் "ஓ வித்வான்களது ஸபையே! தங்களது
திருவடியில் ஏதோ கொஞ்சம் ஸுவர்ண தக்ஷிணை ஸமர்ப்
பிக்கிறேன். அதை உயர்ந்த தக்ஷிணையாக, தாம்பூலத்தை
யும், ஏற்றுக்கொண்டு எங்களுக்கு விவாஹம் செய்து
கொள்வதற்கு ஏற்ற யோக்யதை உண்டாக வேண்டு
மென்று அனுக்ரஹம் செய்யுங்கள்." தக்ஷிணையைப்
பெற்றுக்கொண்ட ப்ராம்மணர்கள் "ததாஸ்து. யோக்
யதா ஸித்திரஸ்து" என்று அனுக்ஞை கொடுப்பார்கள்.
அதன் பிறகே கர்மாவைத் துவக்கவேண்டும். ப்ராம்ம
ணர் சொல் தேவவாக்குப் போலாகும். (பெரியோர்களை
தக்ஷிணைதந்து ஆராதித்து அவர்களிடமிருந்து கர்மா
வைச் செய்ய அனுக்ஞை பெறுகிறோம். தற்சமயம் தக்ஷி
ணைக்கே அனுக்ஞை என்று பெயரிட்டு. "எனக்கு அனுக்
ஞை வரவில்லை, எனக்கு அனுக்ஞை கொடு, உமக்கு
அனுக்ஞை சேர்ந்ததா?" என தவறுதலாகச் சொல்
கிறோம். தக்ஷிணை பெற்ற பெரியோர் இந்த கர்மாவைச்
செய்ய உனக்கு யோக்யதை உண்டாகட்டும் என்று
கூறுவதற்கே அனுக்ஞை என்று பெயர்.)

பிறகு எந்த கர்மாவும் நிர்விக்னமாக முடிவதற்காக
விக்னேச்வர பூஜை செய்யவேண்டும். மஞ்சள் பொடி
யால் விக்னேச்வரரைப் பிடித்து, த்யான ஆவாஹனாதி
ஷோடச உபசார பூஜை செய்ய வேண்டும். அதன்
பிறகு, "சுபே சோபனே—பரமேச்வர ப்ரீத்யர்த்தம்,
தர்ம ப்ரஜா ஸம்பத்யர்த்தம் வரான் ப்ரேஷயிஷ்யே"
என்று ஸங்கல்பம் செய்தபின், விக்னேச்வரரை உத்வா
ஸனம் (யதாஸ்தானம்) செய்து, அவருக்குப் பூஜை
செய்த அக்ஷதை புஷ்பங்களை ஆசார்யர் ஆசீர்வாதம்
செய்து அளிப்பர். அதைத் தலையில் தரித்துக்கொண்டு,

மந்த்ரங்களை அறிந்த 4 ப்ராம்மணர்களைத் தக்ஷிணை தாம் பூலங்களால் பூஜித்துப் பெண்ணின் வீட்டிற்குப் போய்த் தனக்கு அந்த கன்யகையைத் தரும்படிக் கேட்க அனுப்ப வேண்டும். அச்சமம் இந்த ப்ராம்மணர்களைப் பார்த்துக் கூறும் மந்த்ரம் இரண்டு.

ப்ரஸூக் மந்தா—புபோததி. அந்ருக்ஷரா—அஸ்துதேவா :

(1) இதன் பொருள்—" ஓ நண்பர்களே, நினைத்த மாத்ரத்தில் நன்கு வேகமாகப் போகின்ற ஸாமர்த்யம் வாய்ந்த நீங்கள் நல்ல வழியாக கன்யகையின் பந்துக் களிருப்பிடம் செல்லுங்கள். இதில் தேவேந்த்ரனும் ஆமோதித்து எங்கள் இருவருக்கும் நன்மை புரிவான். நாங்கள் இருவரும் சேர்ந்து விதிப்படி யாகம் செய்து, ஸோமரஸமெனும் உயர்ந்த அன்னத்தை அவருக்குக் கொடுக்கப் போகிறோம் என்பதை அவர் உணர்வார். (2) எனக்காகக் கன்யகையின் வீட்டிற்குச் செல்கின்ற உங்களுக்கு வழியானது கல்கள், முள்ளுகள் இல்லாமல் நன்றாக இருக்கட்டும். அர்யமா, பகன் எனும் தேவர் களும் எங்களை ஒருவரோடொருவரைச் சேர்க்கட்டும். தேவர்களே! எங்களது தாம்பத்யம் நன்றாகச் சேரட்டும்.!' இப்படிக் கருத்துள்ள இரு மந்த்ரங்களைக் கூறி, வரனால் அனுப்பப்பட்டவர் கன்யகையினது பந்துக்களிடம் போய் இன்ன கோத்ரத்தில் பிறந்த இந்த வரனுக்கு இந்த கோத்ரத்தில் தோன்றிய கன்யகையைப் பத்னியாகத் தரும்படி வேண்டுகிறோம் என்று கூறவேண்டும். கன்யா பிதா அப்படியே ஆகட்டுமென்று கூற, அதை வரனிடம் வந்து பந்துக்கள் தெரிவிக்கவேண்டும். பிறகு கன்யாபிதா நல்ல தினத்திலே கன்யகா தானம் செய்ய ஏற்பாடு செய் வார். இதே விவாஹ முறை (தற்சமயம் மந்த்ரம் மாத் ரம் கூறப்படுகிறது).

கன்யகாதான ஸங்கல்பம் :— கன்யகையின் பிதா சுத்த ராய்ப் பத்னியுடன் ப்ராம்மணர்களை நமஸ்கரித்துத் தாம் பாளத்தில் தாம்பூலத்துடன் தக்ஷிணையை எடுத்துக் கொண்டு, அசேஷே ஹே பரிஷத் — அனுக்ரஹாண, என்று கன்யாதானம் செய்ய அனுக்ஞை கேட்கிறார்.

விக்னேஶ்வர பூஜை செய்து திதி, வார நக்ஷத்ரங்களைக் கூறி "எனக்கு முன்னே என் குலத்தில் பிறந்த 10 பேரும், நானும், பின்னே பிறக்கப் போகும் 10 பேரும்—ஆக 21 பேரை நற்கதி அடைவிப்பதன் மூலமாக, அழிவற்றதும், அளவற்ற ஆனந்தமுள்ளதுமான, ஶாஶ்வதமான ப்ரும்ம லோகத்தை அடைவதற்காக, மஹா விஷ்ணுவின் ப்ரீதியைப் பெறுவதற்காகவும் (ப்ராஹ்ம விவாஹ விதிப் படி) கன்யாதானமெனும் மஹாதானத்தைச் செய்கிறேன்" என்று ஸங்கல்பம் செய்து, க்ரஹப்ரீதியும் செய்த பின்பே வரனை விஷ்ணுவாகக் கருதி பூஜை செய்து கன்யகாதானம் என்னும் மஹாதானத்தைச் செய்யவேண்டும். (இப்போது வரன் இறங்கியுள்ள இடத்திலேயே வேத வ்ரதங்களை முடித்துக்கொண்டு, காசியாத்ரை போவதாக பாவனை நடக்கிறது. பிறகு கன்யகையின் பிதா தன் பத்னியுடன் வரனது பாதத்தை ஜலத்தால் அலம்பி, பூஜித்து கன்யயைத் தருவதாகக் கூறி அழைத்து வந்து, மாலை மாற்றல், ஊஞ்சல் முதலியவைகளைச் செய்கின்றனர். இவை வேதோக்தமான கர்மா அல்ல என்றாலும், ஸ்த்ரீகளின் ஸம்ப்ரதாயத்தைத் தழுவி செய்ய வேண்டியவைகளைச் செய்தல் வேண்டும் என்று சாஸ்த்ரம் கூறுகிறது. பெரியோர் அதை அனுஷ்டித்து வந்தனர். அதில் பலதத்துவங்கள் அமைந்திருப்பதாலும் அவை அலக்ஷ்யம் செய்யத்தக்கவை அல்ல.)

மாலை மாற்றுவது :—கன்யகையின் அம்மான் கன்யகையையும், வரன் அம்மான் வரனையும் தூக்கிக்கொண்டு வருவர். அச்சமயம் தன்னருகே வரும் கன்யகைக்குத் தன் கழுத்திலுள்ள மாலையில் ஒன்றை எடுத்துப் போட்டு அவள் அணிந்து அளிக்கும் மாலையில் ஒன்றை வரன் ஏற்று வருவான். இங்ஙனம் கன்யகை வரனிடம் சென்று, தன் மாலையில் ஒன்றை வரனுக்கு அளித்து, வரனது மாலையில் ஒன்றை ஏற்று வருவாள். இங்ஙனம் மும்முறை நடைபெறும். சிலவிடத்தில் இது முடிந்தபின் அம்மான்களுக்குப் புது வஸ்த்ரமளித்து சந்தனம் பூசி உபசரிப்பர். சிலர் முன்னதாகவே வஸ்த்ர சந்தன மளித்து பிறகு கன்யகையையும் வரனையும் தூக்கும்படி செய்வர். இது

கன்யகைகளாக இருக்கும்போது நடந்த விவாஹத்தில் முன்னர் நடந்தது. [இச்சமயம் வயதான அம்மாமீ போன்ற பெண்டுகளைத் தூக்குவது பலவகையிலும் அனுசிதமானதால், அப்படி தூக்காமலிருப்பது கெடுதலில்லை. ஒரு நல்லது எனலாம். ஆனால் அம்மான்களுக்கு வஸ்த்ரமளிப்பதும், மாலை மாற்றுவதும் மாறவில்லை.]

மாலை மாற்றுவதின் தத்வம் :—மாலையானது வாஸனையுள்ள புஷ்பங்களால் தொடுக்கப்பட்டது. அதைத் தம்பதிகள் மார்பில் தரித்துக் கொள்கின்றனர். கன்யகையின் மாலை வரனுக்கும், வரனது மாலை கன்யகைக்கும் அளிக்கப்படுகிறது. பொதுவாக ஒருவர் அணிந்த மாலையைப் பிறர் அணியலாகாது என சாஸ்த்ரம் கூறுகிறது. ஆனால் தம்பதிகள் மாற்றிக்கொண்டு மாலையை அணிய வேண்டும் என்பதும் சாஸ்த்ரத்தால் தோன்றிய ஶிஷ்டாசார வழக்கம்.

சாஸ்த்ர விரோதமானதை ஶிஷ்டர் கைக்கொள்ள மாட்டார். சாஸ்த்ர விரோதமானதைக் கைக்கொள்பவர் ஶிஷ்டரல்ல. அவர் ஆசாரம் ஶிஷ்டாசாரமல்ல. அது ஏற்கத்தக்கதுமல்ல. அப்படியிருக்க ஏன் தம்பதிகள் விவாஹத்தில் ஒருவர் மாலையை மற்றவர் தரிக்க வேண்டும்? இது பெரியோரால் தொன்றுதொட்டு அனுஷ்டிக்கப்பட்டு வருவதால், சாஸ்த்ர ஸம்மதமானதே. ஸதியும் பதியும், இந்த விவாஹ கர்மாவால், இருவராயினும் ஒன்றாக்கப்படுகின்றனர். இருவரும் ஒன்றாகச் சேர்ந்த பின் அன்யர் அணிந்த மாலை என்ற வ்யவஹார மில்லை. இருவரும் ஒன்று படுத்தப்பட்டாலும், சில கார்யங்களில் வேற்றுமை உண்டு. புருஷர் புஜித்து மிகுந்த அன்னம் ஸ்த்ரீகளுக்குப் பாவனமானது. புஜிக்க வேண்டியது. ஸ்த்ரீ உண்ட மிகுதியைப் புருஷன் புஜிக்கலாகாது. அது அசுத்தமானது. ஸமுத்ரமும் அலையும் ஒன்றே வேறல்ல. ஆயினும், அலை ஸமுத்ரத்தைச் சார்ந்தது. ஸமுத்ரம் அலையைச் சார்ந்ததல்ல அல்லவா? கன்யகை புருஷனிடம் வந்த பின்பும் "அவரை, புருஷனைச் சார்ந்தவள் யான்" என சிறிது காலம் நினைப்பாள். பேசுவாள். சிறிது காலம் சென்றபின் "என்னைச் சார்ந்தவர் அவர்"

என எண்ணுகிருள், கூறுகிருள். அதன்பின் சிறிது காலம் சென்றபின் "நானும் அவரும் ஒன்றே" என்று நினைக்கிருள். சொல்லுகிருள். இந்த முறைதான் ஜீவன் ப்ரும்மத்தை உபாஸித்து, தன்மயமாகும் வழியாகும்.

வாஸனை என்பது வெளிப்படையான புஷ்ப வாஸனை மாத்ரமல்ல. மனிதனது மனத்திலுள்ள வாஸனையுமாம். இப்புருஷன் தன் மனோ வ்ருத்தியையும் வாஸனையையும் பத்னியிடம் இன்னதென்று மாலை வ்யாஜமாகக் காட்டுகிருன். அக் கன்யகையும் எனது மனோ வாஸனை இத்தகையது. இதை இனி தனியாக வளரவிடாமல் உம்மிடம் அர்ப்பணம் செய்து உமது வாஸனையை ஏற்றுக்கொள்றேன் என மாலையிடுவது மூலமாகக் கூறுகிருள். மூன்று முறை ஒன்றைக் கூறினுலும் செய்தாலும் அது ஸ்திரமாகிவிடும். பிறகு அதை மாற்ற முடியாது. அங்ஙனம் இருவரும் ஒன்ருகி, மனோவ்ருத்தியில்கூட வேறுபாடின்றி வாழவேண்டும் என்பதைக் காட்டுகின்றது மாலை மாற்றல் என்ற ஐதிஹ்யம். அங்ஙனம், பதியின் மனதை அனுஸரித்து எண்ணங்களை எண்ணியதாலும் நடந்ததாலும் அருந்ததி என்ற பெயர் அவளுக்குத் தோன்றிற்று. நக்ஷத்ர வடிவமான அவளைத் தர்ஶிப்பது, அவளைப்போல் பத்தினியும், அவள் பதி வஸிஷ்டர் போல் பதியும் இருக்க வேண்டும் என்பதற்காவே, மாலை மாற்றுவதன் மூலம் இருவரும் மனதிலும் ஒன்றுபட்டு இருத்தல் வற்புறுத்தப்படுகிறது.

### ஊஞ்சல்

தம்பதிகளை ஊஞ்சலில் உட்காரவைத்து, ஸுமங்கலிகள் ஊஞ்சல் பாடுவார்கள். லக்ஷ்மீ நாராயணன், மீனுக்ஷீ ஸுந்தரேசர் ஆகியவர்கள் இங்ஙனம் ஊஞ்சலாடியதாக அவர்களைப் புதிய தம்பதிகளும் மற்றவரும் நினைக்கும்படி அந்தப் பாட்டு அமைந்திருக்கும். ஊஞ்சல் ஆடுவது, பிடி சுற்றிப்போடுவது, பாலால் கால் அலம்புவது. தீபம் ஜலம் இவைகளைக் கையிலேந்தி ஸுமங்கலிகள் தம்பதிகளை வலம்வருவது முதலியவை வைதிக கர்மா அல்ல என்ருலும், ஆபஸ்தம்பர் "பெண்கள் கூறிய

லதையும் செய்க" என்று கூறியதால் இவை அனுஷ்டிக்கப் படுகின்றன. இவை ஒவ்வொன்றும் ஒவ்வொரு தத்து வத்தைக் காட்டுவதாகும்.

மேலே இருந்து தொங்கும் சங்கிலிகள் கர்ம பாசத் தால் மேலான பகவானிடமிருந்து பூமியில் இறங்கி இம் மானிடப் பிறவியைப் பெற்றிருக்கிறோம் என்பதைக் காண்பிக்கின்றன. ஊஞ்சல் முன்னும் பின்னும் செல்வது நமது வாழ்க்கை அலைபோல் சஞ்சலமானது. சிறிது முன்னுக்கும் வரும். பிறகு சிறிது பின்னேயும் செல்லும். சஞ்சலமான மனம்போல் வாழ்க்கையில்' இது நல்லதா ? அது நல்லதா ? இதைப்பின்பற்றுவோமா ? வேண்டாமா என சஞ்சலம் உண்டாகும். ஊஞ்சலின் இயற்கையான அசைவற்ற நிலைபோல் ஸ்திரமான ஒன்றை நாம் பின் பற்றவேண்டும்.

பாலின்ல் கால் அலம்பி, பட்டால் துவட்டுவது ஸுவாஸினிகள் வதூவரர்களைப் பூஜிப்பதாம். ஜலத் தாலும் தீபத்தாலும் ஊஞ்சலைச் சுற்றிவருவது அக்னிக்கு பரிஷேசனம் செய்வது போல் பூத, ப்ரேத, ராக்ஷஸ, பிஶாசாதிகள் தம்பதிகளை அருகே அணுகாவண்ணம் செய்யும் ரக்ஷையாம். வர்ணமிட்ட அன்னங்களால் தம்பதிகளைச் சுற்றிப் போடுவது த்ருஷ்டி பரிஹாரத் துடன் பூத ப்ரேதாதிகள் தூரே எறியும் அன்னத்தைப் பலியாக புஜித்து தம்பதிகளை ஹிம்ஸிக்காமல் வெளியே போகும்படி செய்வதாம். வரனது தாய் கன்யகையை யும், கன்யகையின் தாய் வரனையும் பூர்ணபலமான முழுத் தேங்காய் பழம், தாம்பூலம் முதலியவைகளைக் கையி லளித்து உள்ளே அழைத்துச் சென்று வேதியில் பட்டுப் பாயில் அமரும்படி செய்ய வேண்டும். தம்பதிகள் உள்ளே நுழையும் போதும், கன்யகாதான காலத்திலும், மாங்கல்யதாரண ஸமயத்திலும், இது போன்ற முக்ய காலங்களிலும் கெட்டி மேளம் வாசிப்பது. மற்ற அப சகுனமான சொற்கள் காதில் படாமல் தடுப்பதற்காம்.

**கன்யகாதானம் :** பத்னி இல்லாதவர் கர்மா செய்ய அர்ஹரல்லர். கன்யகையின் தந்தை (அல்லது அவரது

ஸஹோதரர், அல்லது அவரால் ப்ரார்த்திக்கப்பட்டவர்) கன்யகாதானத்திற்காக, முன்போல், அசேஷே ஹே பரிஷத்- ஸ்வீக்ருத்ய என்று கூறி தக்ஷிணை தந்து, என் முன்னோர் 10, பின்னவர் 10, நான் ஒருவன், ஆக 21 தலை முறை பாபத்திலிருந்து கறை ஏறி நித்யமாய், ஒப்பற்ற தாய்,ஆனந்தம் நிறைந்ததாயுள்ள ஶாஶ்வதமான ப்ரும்மலோகத்தை அடைய, மஹா விஷ்ணுவின் ப்ரீதியின் பொருட்டு, பிராம்ம விவாஹ விதிப்படி கன்யகாதானம் செய்ய எனக்கு யோக்யதை உண்டாகும்படி அருள் புரியுங்கள் என்று அனுக்ஞை கேட்கவேண்டும். ப்ராம்மணர்கள் "யோக்யதை உண்டாகட்டும்" என்பார்கள். பிறகு விக்னேஶ்வர பூஜை—ஸங்கல்பம். மமோபாத்த-ப்ரீத் யர்த்தம் முன் போல் 21 தலை முறை நற்கதி பெற்று ப்ரும்ம லோகத்தை அடைய கன்யகாதானம் எனும் மஹாதானம் செய்கிறேன் — என்று ஸங்கல்பம் செய்து விக்னேஶ்வரரை யதாஸ்தானம் செய்து, க்ரஹ ப்ரீதி செய்ய வேண்டும். கன்யகாதான காலத்தில் உண்டாகும் தோஷங்களை அகற்ற நவக்ரஹ ப்ரீதிக்காக சிறிது தக்ஷிணையை ப்ராம்மணர்களுக்குக் கொடுப்பதே க்ரஹ ப்ரீதி எனப்படும்.

வரபூஜை: மஹா விஷ்ணு ஸ்வரூபராக எண்ணி, நல்வரவு கூறி, அர்க்யம், பாத்யம், ஆசமனீயம் அளித்து, வரனின் காலை அலம்பி, இருவரும் ஆசமனீயம் செய்ய வேண்டும். கால் அலம்பும் போது. தத்விஷ்ணோ:—பரமம் பதம் என்ற வேத மந்த்ரத்தைக் கூறவேண்டும். அதன் கருத்து:—மஹா விஷ்ணுவினுடைய உயர்ந்த பரமபதமானது உலகெலாம் ப்ரகாசமாக விளங்குகிறது. அதைக் குற்ற மற்ற புண்ய ஶீலர்களான பெரியவர்கள் எப்பொழுதும் பார்த்துப் போற்றுகின்றனர். அத்தகைய மஹா விஷ்ணுவின் பதமாக, வரனை உம்மைக் கருதி பூஜிக்கிறேன்.

வரன், கன்யகை இருவர்களுடைய மூன்று பெரியோர்களை ப்ரவர, ஸூத்ர, கோத்ர, ஶர்மாவோடு கூறி, அவர்கள் மறபில் தோன்றிய இந்த கன்யகையை இந்த வரனுக்கு அளிக்கிறேன் என்று கூறவேண்டும். அதைத்-

தான் மாத்ரமல்லாமல், சில ப்ராம்மணர்களையும் தன்னுடன் கூறும்படி வரித்துக் கூறவேண்டும். உதாஹரணம்: பார்க்கவ ச்யவன ஆப்னவான ஔர்வ ஜாமதக்ன்ய பஞ்சார்ஷேய ப்ரவரான்வித ஸ்ரீவத்ஸ கோத்ரோத்பவஸ்ய, ஸ்ரீ ராம ஶர்மண: நப்த்ரீம் (கொள்ளுப் பேத்தி), பார்க்கவ—கோத்ரோத் பவஸ்ய, ந்ருஸிம்ஹ ஶர்மண: பௌத்ரீம், பார்க்கவ—கோத்ரோத்பவஸ்ய வேங்கடராம ஶர்மண: புத்ரீம், ஸ்ரீவத்ஸ கோத்ரோத்பவாம் லக்ஷ்மீ நாம்னீம் மதீயாம் கன்யாம், ஆங்கீரஸ, 'பார்ஹஸ்பத்ய பாரத்வாஜ த்ரயார்ஷேய ப்ரவரான்வித பாரத்வாஜ கோத்ரோத் பவஸ்ய, ராமசந்த்ர ஶர்மண: நப்த்ரே (கொள்ளுப்பேரன்), ஆங்கீரஸ — கோத்ரோத்பவஸ்ய அர்த்த நாரீஶ்வர ஶர்மண: பௌத்ராய, ஆங்கீரஸ-கோத்ரோத் பவஸ்ய ஸ்ரீக்ருஷ்ண ஶர்மண: புத்ராய, ஸ்ரீராம ஶர்மணே. யஜுஶ் ஶாகாத்யாயினே மஹாவிஷ்ணு ஸ்வரூபிணே வராய துப்யமஹம் ப்ரஜா ஸஹத்வ கர்மப்ய: ப்ரதி பாதயாமி. என்று கன்யகையின் வலதுகையை ஜலதாரையுடன் தாம்பூல தக்ஷிணையுடன் வரனது கையில் அளிக்க வேண்டும். அச்சமயம் சில ஶ்லோகங்களைக் கூறவேண்டும்

1. கன்யாம் கனக ஸம்பன்னும் கனகா பரண பூஷிதாம் । தாஸ்யாமி விஷ்ணவே துப்யம் ப்ரும்மலோக ஜிகீஷயா ॥ கருத்து: கனகத்துடன் (தங்கம்), கனக நகை பூட்டிய கன்யகையை ப்ரும்மலோகம் செல்லவேண்டும் என்ற ஆசையால் விஷ்ணு ரூபமான உமக்கு அளிக்கிறேன். 2. விஶ்வம்பரா ஸர்வபூதா: ஸாக்ஷிண: ஸர்வ தேவதா: । இமாம் கன்யாம் ப்ரதாஸ்யாமி பித்ருணும் தாரணுய ச ॥ கருத்து:—உலகைத் தரிக்கின்ற ஸர்வ தேவர்களும் ஸர்வ பூதங்களும் ஸாக்ஷிகளாக இருக்கட்டும். பித்ருக்கள் நன்மை பெற இந்த கன்யகையைத் தானம் செய்கிறேன். 3. கன்யே மமாக்ரதோ பூயா: கன்யேமே தேவி பார்ஶ்வத: । கன்யே மே ஸர்வதோ பூயா: த்வத்தானுத் மோக்ஷமாப்னுயாம். கருத்து :—ஒ கன்யே தேவி எனக்கு எதிரிலும் பக்கத்திலும் எங்கும் இரு. உன்னைத்தானம் செய்வதால் மோக்ஷம் அடைய வேண்டும். 4. ஹிரண்ய கர்ப்ப கர்ப்பஸ்தம் ஹேமபீஜம் விபாவஸோ: । அநந்த புண்ய பலதம் அதஶ் ஶாந்திம் ப்ரயச்சமே ॥ இது எல்லா

தானங்களிலும் பொதுவாகக் கூறப்படுவது. ப்ரஜை களைப் பெறுவதற்காகவும் புருஷனுடன் கூட இந்த கன்யகை இருந்து ஸகல கர்மாக்களையும் செய்யும் பொருட்டும் தானம் செய்கிறேன் என்றும் கூற வேண்டும்.

வரன் :—தேவஸ்யத்வா - ப்ரதிக்ருஹ்ணாமி என்ற மந்த்ரத்தைக் கூறி கன்யகையை ஏற்கவேண்டும். "ஸவித்ருதேவன் நமக்கு நன்மை தருவதற்காக அச்வினீ தேவர்களுடைய பாஹுக்களாலும் பூஷாவினுடைய கரங்களினாலும் இதை வாங்கிக் கொள்கிறேன். சிறந்த வரான ஆங்கிரஸ் உன்னை ஏற்றுக்கொள்ளட்டும்" என்று அம்மந்த்ரத்தின் கருத்து. நாம் எந்தப் பொருளை தானமாக வாங்கினாலும் இம் மந்த்ரத்தைக் கூறவேண்டும். நமது தோளிலிருந்து முழங்கைவரை பாஹுவாம். அங்கு அதிஷ்டான தேவதையாக வஸிப்பவர் அச்வினீ தேவர்கள். அதற்குக் கீழே உள்ளது கரம் எனப்படும். அதற்கு அதிஷ்டான தேவதையாக உள்ளவர் பூஷா. இந்த இருவர் பெயராலும் வாங்கி ஆங்கிரஸ்ஸிடம் அளிக்கிறேன். இந்த வஸ்து, நேராகவோ, மாறாகவோ, பரமாத்மாவிற்கு அளிக்கப்படுகிறது. அப்படி நாம் தானம் வாங்கிய வஸ்துவை நல் வழியில் பயன் படுத்தினால்தான் தானம் வாங்கிய பாபம் நம்மை விட்டு அகலும். சிலர் மந்திரமில்லாமல் வாங்குவர்.

கன்யகையும் வரனுமாக வேதியினருகே அமர்ந்து ஸங்கல்பம் செய்ய வேண்டும். கால தேசங்களைக் கூறி, எங்கள் இருவர்க்கும் உத்வாஹ கர்மாவைச் செய்கிறோம் என்று ஸங்கல்பித்து, எதிரில் அக்னியை விதிப்படி ப்ரதிஷ்டை செய்ய வேண்டும். கன்யகையைத் தானம் செய்பவன் விதிப்படி வரனுக்கு மதுபர்க்கம் என்ற பூஜையைச் செய்ய வேண்டும். முதலில் கன்யா தாதா—"கூர்ச்ச:" என்று கூறி, தர்ப்பையாலாகிய கூர்ச்சத்தைத் தரவேண்டும். அதை வரன் "ஸுகூர்ச்ச:" என்று கூறி வாங்கி, அதில் அமர வேண்டும். ஓ கூர்ச்சமே, நீ ராஜ்யத்தைத் தரிக்கத் தக்கவன். ஆசார்யனுக்கு ஆஸனமாக இருக்கிறாய், உன்னை விட்டு யான் பிரிய வேண்டாம்—என்பது அம் மந்த்ரத்தின் பொருள்.

கன்யகையைக் கொடுப்பவர், ஆப: பாத்யா:, என்று கூறி ஜலத்தை எடுக்கவேண்டும். வரன்:— ஆப: பாதாவநேஜனீ:—ஸ்யஸானி என்று கூறி வலது காலை நீட்டவேண்டும். மந்த்ரார்த்தம்:— பாதத்தை அலம்பும் ஜலம் எனது சத்ருக்களை நாசம் செய்யட்டும். இந்த குலத்தில் நான் ப்ரும்ம வர்ச்சஸ் உள்ளவனாக வேண்டும். மயி மஹோ-வீர்யம் என்ற மந்த்ரத்தைக் கூறி வரன், காலலம்புவரின் தோளைத்தொட்டு- தன் மார்பைத்தொட்டுக் கொள்ள வேண்டும். என்னிடம் பூஜை, கீர்த்தி, கண் முதலிய இந்த்ரிய சக்தி, வீர்யம் இவை உண்டாகட்டும் என்று அதன் பொருள்.

பெரியவர்கள் நம் காலைத் தொடும்போது நமது சக்தி குறைகின்றது. அப்படி குறையாவண்ணம் இந்த மந்த்ரத்தைக் கூறவேண்டும். இங்ஙனம் ஶ்ராத்த காலத்திலும் அதைச் செய்பவர் வயதிலும் ஆசாராதிகளிலும் உயர்ந்தவராக இருந்து சிறியவரிடம் தனது மூதாதைகளை ஆவாஹனம் செய்து கால் அலம்பும்போது, சிறியவர் தம் பலம் முதலியன குறையா வண்ணம் தர்ப்பையால் அவரைத் தொட்டுக் கொண்டு இம் மந்த்ரத்தைக் கூறுவதுண்டு.

கன்யகாதானம் செய்பவர்:—மஹாவிஷ்ணு ஸ்வரூபஸ்ய வரஸ்ய இதமாஸனம் —மஹாவிஷ்ணுஸ்வரூபரே, உமக்கு ஸ்வாகதம். இதம் பாத்யம் என்று கூறி, மனைவி ஜலம் விட, தான் வரனது காலை அலம்பி வேண்டும். உடனே இருவரும் கை அலம்பி, ஆசமனம் செய்ய வேண்டும்.

கன்யா தாதா—இரு கூர்ச்சங்களால் ஜலத்தை எடுத்து அர்ஹணீயா ஆப: என்று கூறவேண்டும். அந்த ஜலம் தன் அஞ்ஜலியில் ஏகதேசத்தில் படும்போது, வரன் ஆமாகன்-விராஜ என்ற மூன்று மந்த்ரங்களைக் கூறவேண்டும். மந்த்ர அர்த்தம்:— ஒ அர்க்ய ஜலமே, நீ என்னை வந்து அடைந்தாய். நீ யஶஸ், வர்ச்சஸ், பால், தேஜஸ் இவைகள் என்னிடம் இருக்கும்படி செய். இவைகளுடன் கூடிய என்னை ப்ரஜைகளுக்கு ப்ரியமாக இருக்கும்படி செய்.

பசு முதலியவைகளுக்கு அதிபதியாகச் செய். ஓ தீர்த்தமே. நீ அன்னத்தைக் கறப்பவர். உன்னை யான் ஏற்றதால், அன்னம் எனக்கு வ்ருத்தியாக வேண்டும். என் ஸ்தானத்திலுள்ள என் குழந்தைக்கும் அங்ஙனம் நீர் ப்ரகாசமாக இரும். அதாவது. என் ஸந்ததியையும் அன்னம் நிறைய உள்ளதாகச் செய்யும். ஓ தீர்த்தமே, உன்னை ஸமுத்ரத்திற்கு அனுப்புகிறேன். நீர் உம் இருப்பிடமான ஸமுத்ரத்திற்கு அடையும். நானும் உமது தயவினால் ப்ரஜைகளுடன் கூடினவனாக இருக்கவேண்டும். ஜலம் இடைவெளியில்லாமல் சேர்ந்திருப்பதுபோல் என் ஸந்ததி தொடர்ச்சியாக இருத்தல் வேண்டும். மறுபடியும் நீர் எனக்குப் பயன்படும்படி இரும். மிகுதி ஜலத்தைப் பூமியில் விடும்போது இச் சடைசி மந்த்ரத்தைக் கூற வேண்டும்.

தயிர், தேன் இவைகளைக் கலந்து, வெண்கலப் பாத்ரத்தில் இரு கூர்ச்சங்களால் மூடி, தாதா—மதுபர்க்க: என்று கூறவேண்டும். அதை ஏற்றுக் கொண்டு வரன் த்ரய்யை- யசோஸி என்ற இரு மந்த்ரங்களைக் கூறவேண்டும். மந்த்ர அர்த்தம்: ஓ மதுபர்க்கமே, நீ மூன்று வேதங்களுக்கு யசஸ்ஸாக இருக்கிறாய், வேதத்தையே ப்ரகாசப் படுத்துகிறாய் நீ. அத்தகைய நீ என்னை ப்ரஜைகளுக்கு ப்ரியனாகச் செய். பசுக்களுக்கு அதிபதியாகச் செய். ஆமாகன்—யசோஸி என்ற முன் கூறிய மந்த்ரத்தை இங்கு மறுபடி கூறவேண்டும்.

அம்ருதோபஸ்தரணமஸி என்று முதலிலும், அம்ருதாபிதானமஸி என்று முடிவிலும் தீர்த்தத்தை வரன் பருக வேண்டும். (இதே ப்ராணாக்னி ஹோத்ரத்திற்கு முன்பும் பின்பும் ஏற்பட்ட மந்த்ரம்.)

யன்மதுன:— வ்யோஸானி என்ற மந்த்ரத்தைக் கூறி ஒரு முறையும், மந்த்ரமில்லாமல் இரு முறையும் மதுபர்க்கத்தைப் புஜித்து, பிறகு "அம்ருதாபிதானமஸி" என்று ஜலம் அருந்தவேண்டும். இங்கு அம்ருதத்திற்கு ஸமமான மதுபர்க்கத்திற்கு ஓ ஜலமே, நீ கீழே விரிப்பாக இரு, மேலே மூடுதலாகஇரு என்று பொருள். மதுவிலிருக்

கும் மதுரமான வீர்யத்தை அளிப்பதுமான பரமான்னத்தைப் புஜிக்கிறேன். அந்த சிறந்த பரமான்னத்தால் நான் சிறந்த அன்னமுள்ளவனுகவும் வீர்யமுள்ளவனுகவும் மது போன்றவனுகவும், மதுபர்க்கத்திற்கு அர்ஹனுகவும் இருக்கவேண்டும் என்பது மதுபர்க்கத்தை உண்ணும் மந்த்ரத்தின் பொருளாம். ப்ரத்யக்ஷமாக கோ - பசுவை எதிரில் நிறுத்தி தாதா மதுபர்க்க பூஜை செய்யவேண்டும் இப்போது அதன் ப்ரதிநிதியாக ஒரு முழுத்தேங்காய் அளிக்கப்படுகிறது. மந்த்ரமெல்லாம் கோவைப் போற்றும் கருத்துள்ளவை.)

மது பர்க்கம் அளிப்பவர் "கௌ:" என்று கூறி பசுவை அவரெதிரில் நிறுத்தவேண்டும். அதற்குப் பதில் இப்பொழுது ஒரு தேங்காயை அளித்து, கௌ: என்று கூறுகின்றனர். மதுபர்க்கத்தைப் பெறுபவர் 'யக்ஞோ வர்த்தாம்" என மூன்று மந்த்ரங்களை மெதுவாகக் கூறி "ஓம் உத்ஸ்ருஜத" "இதை அங்கீகரித்தேன். விட்டுவிடுங்கள்" என்று உறக்கக் கூறவேண்டும். மந்த்ர அர்த்தம் :— விருந்தினருக்கு மதுபர்க்கம் அளிப்ப தென்ற யக்ஞம், எல்லோராலும் செய்யப்படட்டும். அதைத் தழுவி, ஓ கோவே ! நீயும் வ்ருத்தி அடை. நீ மிகவும் பூஜிக்கத் தக்கவள். உன்னை அப்படியே விடுகின்ற நானும் உலகில் மனிதரால் பூஜிக்கத்தக்கவனுக ஆக வேண்டும்.

இந்தப் பசு நன்ருக கறக்கக் கூடிய காமதேனுவாக ஆகும். ருத்ராதி தேவர்களுக்குத் தாயாகவும், வஸுக்களுக்குப் பெண்ணுகவும், ஆதித்யருக்கு ஸஹோதரியாகவும் ஆவாள். அம்ருதத்தை அளிக்கும யாகத்திற்குத் தொப்புள்போல் கோ, முக்ய அவயவமாவாள். இவ்வளவு பெருமை வாய்ந்த தேனுவை ஹிம்ஸிக்காதீர் என அறிவுள்ள ஜனங்களிடம் கூறுகிறேன். இந்த கோ தன் இஷ்டப்படி ஜலமருந்தட்டும் புல்லைத் தின்னட்டும். இதை விட்டு விடுங்கள். (முன் யுகங்களில் மது பர்க்க பூஜையில் கோவை ப்ரத்யக்ஷமாக விருந்தினருக்கு அளிப்பர். விருந்தாளி அதன் ஈரலை ஹோமம் செய்து மிகுதி மாம்ஸத்தை உண்பர். இப்படிக் கட்டாயம் கோவைக் கொண்டு யாகம் செய்யவேண்டும் என விதியில்லை. இஷ்ட முள்ளவர்

செய்யலாம். மற்றவர் இதை விட்டு விடுங்கள் எனக் கூறுவர். அந்தக் கருத்தையே இந்த மந்த்ரங்கள் கூறு கின்றன.)

பிறகு விருந்தாளிக்கு அன்னமளிக்கவேண்டும். சாப் பிட்டபின் விவாஹ ஹோமம் முதலிய வைதிக கர்மா வைச் செய்யக்கூடாது என அன்னத்திற்குப் பதிலாக வாழைப் பழத்தைத் தற்சமயம் தருவர். அப்போது கூறும் மந்த்ரம். கன்யாபிதா ' பூதம்'' என்று கூற, விருந் தாளி ' தத் ஸுபூதம் ' என்ற மந்த்ரத்தைக் கூறுவார். மந்த்ர அர்த்தம்—அன்னம் தயாராகிவிட்டது என்று முதல்வர் கூற விருந்தாளி, நன்ருகத் தயார் செய்யப் பட்டது. அது மிகவும் நன்ருக இருக்கிறது. அது குறை யாமலிருக்கட்டும், அதை நான் உண்கிறேன். ஓ அன்ன மே! நீ எனக்கு பலத்தை அளி. ஓ பரிசாரகர்களே! அதைப் பரிமாருங்கள். இத்துடன் மது பர்க்க பூஜை முடிந்தது. நமது ஆசார்யன், ரித்விக், மாமஞர், ராஜா ஆகியவர்கள் நம் வீட்டிற்கு வர நேர்ந்தால், இந்த மது பர்க்க பூஜையை அவர்களுக்கும் செய்யவேண்டும்.

வரன் கன்யகையைப் பார்த்துக் கூற வேண்டிய மந் த்ரம்: ''அப்ராத்ருக்நீம்''. அர்த்தம்:— ஒ வருண! ஸஹோதரனுக்குத் தீங்கிழைக்காததான பாக்யத்தை இவளுக்குக் கொடும். ஓ ப்ருஹஸ்பதே! கணவனுக்குத் தீங்கைச் செய்யாத தான பாக்யத்தை அளியும். ஓஇந்த்ர! புத்ரபாக்யத்தை உண்டு பண்ணும் ஓ ஸவிதா! ஸகல விதமான பாக்யத்தையும் நீர் உண்டு பண்ணும். இவளது அல்லது எனது ஸஹோதரனுக்கும் எனக்குப் பிறக்கப் போகும் குழந்தைகளுக்கும் மரணம். வராதபடி நீங்கள் ரக்ஷியுங்கள்.

''அகோரசக்ஷுஃ'' என்ற மந்த்ரத்தைக் கூறி வரன் கன்யகையின் ஒவ்வொரு அங்கத்தையும் பார்க்க வேண் டும். மந்த்ர அர்த்தம் —

ஓ கன்யகையே! நீ நல்ல கண் உள்ளவளாக இரு. பதிக்குத் தீங்கு செய்யாதவளாக இரு. என்னிடமும் எனது ஸஹோத்ரர்களிடமும் மங்களமாக இரு. நல்ல

மனமுள்ளவளாகவும் நல்ல வர்ச்சஸ் உள்ளவளாகவும் இரு. சாகாத புத்ரன் உள்ள வளாகவும், யக்ஞம் செய்ய விருப்பமுள்ள வளாகவும் எங்கும் சிறந்த வளாகவும் இரு. எனக்கும் என்னைச் சார்ந்தவர்களுக்கும், எனது பசுக்களுக்கும் இன்பத்தைச் செய்.

கன்யகையுடன் வேதியினருகே அமர்ந்து வரன். "நாமிருவரும் கர்மாக்களைச் செய்வோம். புத்ரர்களை உண்டு பண்ணுவோம்," என்று ஸங்கல்பம் செய்ய வேண்டும். உடனே கட்டவிரலாலும் ,மோதிர விரலாலும் தர்ப்பத்தை எடுத்து "இதமஹம்" என்ற மந்த்ரத்தால் கன்யகையின் இரு புருவங்களுக்கிடையே துடைத்து மேற்கு புறமாக, எறிந்து கை அலம்பவேண்டும். அர்த்தம் :—ஓ பெண்ணே ! உனது பதியான என்னைக் கெடுக்கும்படியாய் உன்னிடம் உள்ள அலக்ஷ்மியை இந்த தர்ப்பையுடன் கூட தூரே எறிகிறேன்.

இந்த கன்யகை நம்மை விட்டு அன்யர் வீட்டிற்குச் செல்கிறாளே என்று எந்த பந்துவேனும் அல்லது கன்யகையே கண்ணீர் விட்டால் "ஜீவாகும் ருதந்தி" என்ற மந்த்ரத்தை ஜபிக்க வேண்டும். மந்த்ரார்த்தம் :- இந்த கன்யகையை ஹிம்ஸிக்காமல் நன்கு வாழும்படி செய்யும் போது ஸந்தோஷப் படவேண்டுமல்லவா ? இப்போது ஏன் வருந்தவேண்டும் ? இந்த விவாஹத்தை ஏற்பாடு செய்த பந்துக்கள் எங்கள் இருவருக்கும் நீண்டநாள் அன்யோன்ய அன்பு உண்டாகும்படி த்யானம் செய்யட்டும். இந்த விவாஹத்தால் இரண்டு வம்ச பித்ருக்களுக்கும், எனக்கும், இந்த பெண்ணுக்கும் இன்பம் உண்டாகின்றதல்லவா ? ஆதலால் பந்துக்கள் அழாமல் எங்களுக்கு ஆசீர்வாதம் செய்யட்டும்.

கீழ் வரும் மந்த்ரத்தைக் கூறி தீர்த்தம் கொண்டு வர ப்ராம்மணர்களை அனுப்பவேண்டும். தற்சமயம் மந்த்ரத்தை மாத்திரம் கூறுவது வழக்கம். "வ்யுக்ஷத்" என்ற மந்த்ரார்த்தம் :— ஜலத்திலுள்ள க்ரூரமான அம்ஶம் அகலட்டும். சுத்த ஜலம் இங்கு வரட்டும். இந்த வதுவுக்கு- ஸ்நாநம்- ப்ரோக்ஷணம் செய்துவைக்க

ப்ராம்மணர்கள் அந்த ஜலத்தைக் கொண்டு வரட்டும். இந்த ஜலம், பிறக்கும் குழந்தைகளைக் கொல்லாமலிருக்கட்டும்.

மேலே, கன்யகையின் தலை மீது தர்ப்பத்தால் பிரிமணை போல் செய்து வைத்து அதன் மீது நுகத்தடியின் வலது துவாரத்தை வைத்து அதில் ஸுவர்ணத்தை வைத்து ஜலத்தால் நனைக்க வேண்டும். பிரிமணை வைக்கும் " அர்டம்ண " என்ற மந்த்ரத்தின் அர்த்தம் :— இந்த தர்ப்பம் சுற்றி இருப்பது போல் ஆதித்யனது அருளால் விவாஹத்திற்காக அமைக்கப்பட்ட அக்நியைச் சுற்றி மண்டலமாக நின்று எனது தாயும் ஸஹோதரனும் பார்க்கட்டும்.

அதன் மீது நுகத்தடியின் வலது த்வாரத்தை வைக்கும்போது கூறப்படும் "கேனஸ : " என்ற மந்த்ரத்தின் பொருள் :- ஓ இந்த்ர, ரதத்தின் துவாரத்திலும் வண்டியின் துவாரத்திலும் ஜலத்தைவிட்டு மூன்று முறை சுத்தமாக்கி நீ அபாலா என்ற கன்யகையை சூர்யன் போல் ப்ரகாசிக்கும்படி செய்தாய். அப்படியே இவளையும் ப்ரகாசமுள்ளவளாகச்செய். நோயற்றவளாகச் செய்.

இந்த அபாலா என்பவளைப்பற்றி ரிக் வேதத்தில் ஒரு கதை காணப்படுகிறது. அதாவது அபாலா என்ற பெண் குஷ்டரோகமுள்ளவள். அவளை எவரும் மணக்க வில்லை. அவளுக்கு யாகம் செய்து இந்த்ரனைப் பூஜிக்க வேண்டுமென்று ஆசை இருந்தது. கல்யாணமாகாததால் அந்த ஆசை பூர்த்தியாகவில்லை. ஒரு ஸமயம் நதியின் வெள்ளம். இவளை இழுத்துச் சென்றது. தற்செயலாக அங்கு ஸோமலதையும் அவளிடம் வந்தது. அதைப் பல்லால் கடித்து அந்த ஸோமரஸத்தை மனதினுல் இந்த்ரனுக்கு அளித்தாள். அதை அருந்தி இந்த்ரன் தேர், வண்டி, நுகத்தடி, ஆகிய இம் மூன்றின் த்வாரம் வழியாக ஜலத்தை விட்டு அதனுல் அபாலா என்பவளை மூன்று முறை பாவநமாக்கி நோயை அகற்றி மிக அழகுள்ளவளாகச் செய்தார்.

நுகத்தடி த்வாரத்தில் ஸுவர்ணத்தை வைக்கும் போது கூறப்படும் " ஶந்தே " என்ற மந்த்ர அர்த்தம் — இந்த நுகத்தடி த்வாரத்தில் வைக்கப்படும் ஸுவர்ணம், பெண்ணே உனக்கு ஸுகத்தைத் தரட்டும். அதன் மீது விடப்படும் ஜலமும் ஸுகந்தரட்டும். நுகத்தடியும் அதன் த்வாரமும் ஸுகத்தைத் தரட்டும். பலரைப் பாவநமாகச் செய்யும் ஜலமும் ஸுகந்தரட்டும். பிறகு ருது வாகி நிஷேக முகூர்த்தம் நடக்கும் காலத்தில்- சுத்த மான உனது உடல் என்னுடன் சேரட்டும்.

" ஹிரண்ய வர்ணு: " முதலிய ஐந்து மந்த்ரங்களால் பெண்ணை ப்ரோக்ஷிக்கவேண்டும். மந்த்ர அர்த்தம் "சுத்த வர்ணமுள்ளதும் ஸ்வயம் சுத்தமானதும், நம்மைச் சுத்த மாக்கக் கூடியதும், பாபங்களை அகற்றக் கூடியதுமான இந்த ஜலத்தால் ஸவிதா எனும் தேவன் உன்னைப் பாவன மாகச் செய்யட்டும். எந்த ஜலத்திலிருந்து கஶ்யபரும், அக்கினியும் உண்டானுர்களோ, எது அக்கினியைத் தன் வயிற்றில் வைத்திருக்கிறதோ, அத்தகைய சுத்தமான தீர்த்தம் உன்னைப் பாவனமாக்கி, இஹலோக பரலோக ஸுகத்தைத் தரட்டும் எந்த ஜலத்திற்கு அரசஞன வருணன் ஜனங்களுடைய புண்ய பாப கர்மாக்களைப் பார்த்துக்கொண்டு ஜலத்தின் இடையே ஸஞ்சரிக்கி ருனே அந்த சுத்தமான ஜலம் உனக்கு இஹபர ஸுகத் தைத் தரட்டும். ஆகாயத்திலுள்ள தேவர்கள் எந்த ஜலத் திற்கு உணவைக் கொடுக்கின்றுர்களோ. எது ஆகாயத் தில் பலவாறுகை இருக்கின்றதோ, எது அக்னியைக் கரு வில் வைத்திருக்கிறதோ அத்தகைய சுத்த ஜலம் உனக்கு இஹபர ஸுகத்தைத் தரட்டும். ஓ கன்யகையே, ஜலம் உன்னை மங்களமான கண்ணுல் பார்க்கட்டும். மங்கள மான சரீரத்தால் உன் தோலைத் தொடட்டும். நெய்யின் ஸாரத்தைத் தருகின்ற சுத்தமானதீர்த்தம் உனக்கு இஹ பர ஸுகத்தை தரட்டும்."

இவைகளால் ஸ்னனம் செய்து வைக்கவேண்டியது முறை ப்ரோக்ஷிப்பது அல்லது ஜலத்தை மேலே பெருக்கு வது ஸ்னனத்திற்கு ஸமமானதால் நுகத்தடியின் துவா ரத்திலுள்ள ஸ்வர்ணத்தின்மேல் பட்டு, கன்யகையின்

த்லேமீது விழும்படி ஜலத்தை விடுகின்றனர். கூறப் புடவையை - முகூர்த்தப் புடவையை - வேதம் சொல்லி ஆசீர்வாதம் செய்வார்கள். அந்தப் புடவையையும் திருமாங்கல்யத்தையும் அங்குள்ள பெரியோர்களும் ஸுமங்கலிகளும் கண்ணால் பார்த்து, கையால் தொட்டு ஆசீர்வாதம் செய்யும்படி எல்லோருக்கும் காண்பிக்க வேண்டும். ஆசீர்வாதம் செய்வதோடு, எந்த மாதிரி வஸ்த்ரம் வாங்கி இருக்கின்னறர் என்பதைப் பலரும் அறியக்கூடும் அல்லவா ?

அந்த வஸ்த்ரத்தை அளித்து, கட்டிக்கொள்ளும்படி செய்ய "பரித்வா" என்ற மந்த்ரத்தைக் கூறவேண்டும். அதன் அர்த்தம் :— "ஓ தேவேந்த்ர, யாகம் முதலிய வைதிக கர்மாக்களில் கூறப்படும் ஸ்துதிரூபமான வாக்கு கள் உம்மைச் சூழ்ந்திருக்கின்றன. அதனால் உமக்குப் பெருமை உண்டாகிறதல்லவா ? அதுபோல், உன் அருளால் இந்தக் கன்யகையைச் சுற்றிக் கட்டப்பட்ட புடவை அவளுக்கு ஸுகத்தையும், பெருமையையும் தரட்டும். உம்மைவிடச் சிறந்த தேவர்களை நீர் உபாஸிக் கின்றீர். ஆதலால், நாங்கள் கூறும் இந்த வாக்கும் வ்ருத்தி அடைந்து உம்மை ஸேவிக்கட்டும். நீர் இவளுக் குப் பரம ஸௌபாக்யத்தைத் தாரும்."

வரனின் ஸஹோதரி அல்லது அவனைச் சார்ந்த ஸ்த்ரீகளே இந்தப் புடவையைக் கட்டி. பெண்ணை அழைத்து வரவேண்டும். இதில் சில லௌகிக அம்சம் உண்டு. பெண்ணை முன்பே வரனைச் சார்ந்தவர்கள் பார்த்திருந்தாலும், பெரும்பாலும் முகம், கை, கால் களைத்தான் பார்த்திருக்கமுடியும். இச்சமயம் புடவை கட்டும் வ்யாஜமாக துடை முதலிய இடங்களில் ஏதாவது நோய்கள் இருக்கின்றனவா என கவனிக்கலாமல்லவா?

புதிய வஸ்த்ரம் தரித்தபின் கன்யகைக்குக் கால் அலம்பி, இரு முறை ஆசமனம் செய்விக்கவேண்டும். விரைக்கோட்டைமீது கிழக்கு முகமாகக் கன்யகையை உட்காரவைத்து, வரன் மேற்கு முகமாக நின்றுகொண்டு "மாங்கல்ய தந்துனானேன மமஜீவன ஹேதுனா। கண்டே பத்னாமி

ஸுபகே த்வம் ஜீவ ஶரதஶ் ஶதம்" || என்ற மந்த்ரத்தைச் சொல்லி தாலியைக் கட்டவேண்டும். எவ்வளவு நல்ல லக்னம் பார்த்திருந்தாலும், அதே ஸமயத்தில் மாங்கல்ய தாரணம் நடந்தாலும், நவக்ரஹங்களுடைய தயவை ஸம்பாதிப்பதற்காக க்ரஹ ப்ரீதி செய்யவேண்டும். அப சப்தம் காதில் கேட்காதபடி கெட்டி மேளம் அல்லது முகூர்த்த மேளம் வாசிக்கச் சொல்லி, ஸுமங்கலிகள் கௌரீ கல்யாணம் பாட, பந்துக்கள் புஷ்பம், சந்தனம், பன்னீர் வீச, வரன் தாலிகட்ட வேண்டும். மந்த்ர அர்த்தம் :—"நான் சிரஞ்ஜீவியாக இருப்பதற்குக் காரணமான இந்த மாங்கல்யக் கயிற்றை உன் கழுத்தில் கட்டுறேன் ஓ பாக்யவதி, நீயும நூறாண்டு ஜீவித்திரு" என்று வரன் ஒரு முடிபோட, வரனது ஸஹோதரி மற்றும் இரண்டு முடிபோட வேண்டும். உடனே அவளுக்குச் சந்தன தாம்பூலம், லௌகிக ஆசீர்வாதம் செய்யவேண்டும். மாங்கல்ல ஸூத்ரம் தரித்த முகூர்த்தம் நல்ல முகூர்த்தமாக வேண்டுமென அருள் புரியுங்கள் என வரன் கேட்க, நல்ல முகூர்த்தமாகட்டும் என கூறுவார்கள். உடனே எல்லோர் மனமும் களிக்க, வாய் ருசிக்க, பானகம் அளித்து, முகூர்த்த சந்தன தாம்பூலம், கற்கண்டு, சர்க்கரை, ப்ராம்மணர்களுக்குப் பூரி தக்ஷிணை தரவேண்டும்.

இதன்பின், "ஆஶாஸானா" என்ற மந்த்ரத்தால் புடவைமீது கன்யகையின் இடுப்பில் வரன் முஞ்ஜிப் பில்லாலாகிய கயிற்றைக் கட்டவேண்டும். "ஓ அக்னியே, இனி யான் செய்யப்போகின்ற ஸகல வ்ரத ஹோமங்களுக்கும் இவள் துணையாக இருக்கப்போகிறாள். இவள் நல்ல மனது, ஸந்ததி சரீர ஆரோக்யம், ஸம்பத் முதலியவைகளை விரும்புகிறாள். அவைகளை நீர் தருவதற்காகவும், விவாஹம் செய்துகொள்வதற்கேற்ற யோக்யதை உண்டாவதற்காகவும் இந்த யோக்த்ரத்தை கட்டுகிறேன்." இங்ஙனம் இஷ்டியிலும், வேள்வியிலும் பெண்களுக்குக் கட்டப்படுகிறது. உபநயனத்தில் ப்ருஹ்மசாரிக்கும் கட்டப்படுகிறது. இது வைதிக யோக்யதையைத் தருவதுடன், புதிதாகப் பெரிய புடவையைக் கச்சத்துடன் - மடிசார்கட்டு கட்டும்போது, அதன் மேல்

இந்த யோக்த்ரம் - பில்ட்- கச்சை கட்டுவது போலாகும். அடிக்கடி எழுந்து நடந்து உட்காரும் போது, புதுப் புடவை அவிழ்ந்து விழாமல் இருக்கவும் பயன்படுகிற தல்லவா.

கன்யகையின் நாபிக்கு வடக்கில் முடிந்து ப்ரதக்ஷிண மாகச் சுற்றி தென்புறத்தில் முடிச்சு வரும்படி கட்ட வேண்டும். "பூஷா" என்ற மந்த்ரத்தைக்கூறி பெண் ணின் வலது கையை வரன் வலது கையால் பிடித்துக் கொண்டு அக்னிக்கு அருகில்வந்து. அதன் மேற்கு புரத் தில். வடக்கு நுனியாகப் போடப்பட்டிருக்கும் புதுப் பாயில் தம்பதிகள். வடக்கே வரன், தெற்கே பெண்ணு மாக உட்காரவேண்டும். "பூஷா" என்ற மந்த்ரத்தின் அர்த்தம் :—"பெண்ணே, நான் உனது கையைப் பிடித் தாலும், பூஷா என்ற தேவனே என் மூலமாக உனது கரத்தைப் பிடித்து அக்னியினருகே அழைத்துச் செல் லட்டும். அங்கு நடக்கவேண்டிய ஹோமங்கள் முடிந்த பின், அஶ்வினீ தேவர்கள் தக்கவாஹனத்துடன் உன்னை என் வீட்டிற்கு அனுப்பட்டும். " அங்கு வந்தவுடன் வீடு உன்னுடையது. அதற்கு யஜமானி நீயே. அந்த பாக் யத்தைப் பெற. ஸகல வைதிக கர்மாக்களையும் நீ என்னு டன் இருந்து செய்வாயாக"

பிறகு முறைப்படி அக்னி ப்ரதிஷ்டை, பரிஸ்தரணாதி ஆஜ்யபாகம் வரை செய்து "ஸோம:" "ஸோமோததத்" என்ற இரு மந்த்ரங்களை, பெண்ணைப் பார்த்து ஜபிக்க வேண்டும். (அனுக்ஞை, ஸங்கல்பம், ஸ்தண்டிலம் அக்னி ப்ரதிஷ்டை, ப்ராக்தோயம், அக்னி ஜ்வாலை. அக்னி பரிஸ் தரணம் பாத்ர ஸாதனம், பாத்ர ப்ரோக்ஷணம், ஆஜ்ய ஸம்ஸ்காரம், தர்வீ ஸம்ஸ்காரம், அக்னி பரிஷேசனம், அக்னி ஸித்திக்காக ஹோமம், அக்னயே ஸ்வாஹா ஸோமாய ஸ்வாஹா, வரை "முகாந்தம்" அல்லது "ஆஜ்ய பாகம் வரை" என்று கூறப்படும். இது பெரும் பாலும் ஸகல ஹோம கர்மாவிலும் செய்யவேண்டிய கர்மா.)

கன்யகையைப் பார்த்து வரன் ஜபிக்க வேண்டிய மந்த்ர அர்த்தம் :-" இந்தக் கன்யகையை ஒரு குறித்த

காலம்வரை ஸோமன் என்ற தேவதை காக்கிறார், பிறகு ஒரு காலம் வரை கந்தர்வனும் பிறகு அக்னியும் ரக்ஷிக்கின்றார்கள். இவளை மணக்கும் மனிதன் நான்காவதாக இவளை ரக்ஷிக்கிறான். ஆதலால், முன் கூறிய மூவரும் தம் கடமை முடிந்ததால் அடுத்தபடி பொருப்பை ஏற்கும்படி என்னை ஆமோதிக்கட்டும்.''

பாணி க்ரஹணம்:— விவாஹத்திற்கு பாணிக்ரஹணம் என்ற ஒரு பெயருண்டு. ஆதலால் விவாஹத்தில் இதுவும் ஒரு முக்யமான கர்மா. ஸ்ரீஸீதா கல்யாணத்தில் ஜனக மஹா ராஜன் ஸ்ரீ ராமரை நோக்கி "பாணிம் க்ருஹ்ணீஷ்வ பாணினா" என்று கூறினார். அப்படிக் கையைப் பிடிக்கும்போது சில நியமங்கள் கூறப்படுகின்றன. விவாஹம் தர்மத்திற்காகவும், ஸந்ததிக்காகவுமல்லவா? புத்ரியே பிறக்கவேண்டும் என்று வரன் விரும்பினால், பெண்ணின் கட்டைவிரலை நீக்கி, உள்ளங்கையை - 4 விரல்களை - தன் உள்ளங்கரத்தால் பிடிக்க வேண்டும். பிள்ளை மாத்ரம் பிறக்கவேண்டும் என்று விரும்பினால் கன்யகையின் கட்டைவிரலை மாத்ரம் பிடிக்கவேண்டும்.

பாணி க்ரஹண மந்த்ர அர்த்தம்:— "ஓ பெண்ணே, பகன் அர்யமா, சூர்யன், இந்த்ரன், மற்ற தேவர்களும், நான் க்ரஹஸ்தாச்ரமத்தை நடத்த உன்னை எனக்கு அளித்தார்கள். அதாவது, அவர்கள் அருள் பெற்று, அவர்கள் ஸாக்ஷியாக உன்னை நான் மணந்து கொள்ளுகிறேன். நீயும் நானும் கிழமானால் கூட, ஒருவரை விட்டு ஒருவர் பிரியாதபடி உன் கையை யான் பிடிக்கின்றேன்."

பெண்ணே, பகன் முதலிய அந்தப் பழைய காலத்து தேவர்களும் கூட நம்மைப்போல் விவாஹம் செய்து கொண்டார்கள். அங்ஙனம் மணம் புரிந்து கொண்ட க்ருஹஸ்தாச்ரமிகளுக்குள் அக்னியே முதல்வராக ப்ரகாசிக்கிறார். அத்தகைய தேவர்கள் நமது க்ருஹஸ்தாச்ரமத்திற்கு உரிய விவாஹத்தை ஆமோதித்து உன்னை எனக்கு அளிக்கட்டும்.

ஓ, ஸௌபாக்யவதியான ஸரஸ்வதியே! ஸகல தேவர்க்கும், ப்ராணிகளுக்கும் எதிரில் உம்மை நாங்கள் நன்கு துதிக்கின்றோம். இந்த பாணிக்ரஹணத்தை நன்ருகக் காப்பாற்று. எங்களுக்கு உன்னைப்போல் ஸகல பாக்யமும் உண்டாகும்படி அருள் புரி.

பெண்ணே. எங்கும் தங்கு தடையின்றி செல்லும் சக்தி உள்ளவர் வாயு. எல்லாப் பொருள்களையும் பவித்ர மாகச் செய்கிறவர். நமது உணவைப் பக்வம் செய்து தருபவரான அக்னிக்குத் தோழன். அத்தகைய வாயு, யார் எதைக் கேட்டாலும் கொடுக்க, கையில் ஸன்னத்த மாக ஸ்வர்ணத்தை வைத்திருக்கிருர். அவர் உனது மனதில் புகுந்து என்னிடம் உன்னை ஸதா அன்புள்ளவளாகச் செய்யட்டும்."

இந்த பாணிக்ரஹணமும், அடுத்தாற்போல் செய்யும் "ஸாப்த பதீனம்" என்பதும் விவாஹத்தில் கன்யகா தானம் போல் மிக முக்யமானது. இது முடிந்தால் தான் விவாஹம் முடிந்தது போலாகும்.

"ஏகமிஷே" முதல் ஏழு மந்த்ரங்களைக் கூறி, வரன் கன்யகையின் வலது காலை இடது கையால் பிடித்து ஏழு அடி எடுத்து வைக்கும்படி செய்ய வேண்டும்.

"பெண்ணே, முதல் அடி எடுத்து வைக்கும்போது ஜகத்தைப் பரிபாலனம் செய்கிற விஷ்ணு எனக்கு நிறைய அன்னம் கிடைக்க உன்னுடன் வரட்டும். உனக்குப் பலத்தை அளிக்க இரண்டாவது அடியிலும் பின் தொடர்ந்து வரட்டும். நல்ல கர்மாக்களை நடத்திவைக்க மூன்றுவது அடியிலும் அவர் பின் வரட்டும். ஸுகத்தை அளிக்க நான்காவது அடியிலும், பசுவையும் செல்வத்தையுமளிக்க ஐந்தாவது அடியிலும் விஷ்ணு பின் தொடரட்டும். ஆறு ருதுக்களிலும் நன்மை உண்டாக அருவது அடியிலும் அவர் பின்தொடரட்டும். ஹோதா, ப்ரஶாஸ்தா, ப்ராம்மணுச்சம்ஸீ, போதா, நேஷ்டா, அச்சாவாகன், ஆக்னீத்ரன் என்ற ரித்விக்குகளை அதைச் செய்யும்படியான பாக்யத்தை உனக்குச் செய்யஏழாவது அடியிலும் விஷ்ணு உன்னைத் தொடர்ந்து வரட்டும்.

இங்ஙனம் ஏழு அடிகளிலும் ஏழு வகையான பாக்யத்தை ஸ்ரீ மஹா விஷ்ணு தொடர்ந்து வந்து அளிக்கட்டும்.''

ஏழாவது அடியில் ஜபிக்கும் ''ஸகா'' என்ற மந்த்ரத்தின் பொருள்: ''ஓ பெண்ணே, ஏழு அடி தூரம் என்னுடன் வந்த நீ எனக்கு ஸகாவாவாய். ஏழு அடி நடந்த நாம் இருவரும் ஸ்நேஹிதர்களாக வேண்டும். உன்னிடத்தில் யான் ஸ்நேஹத்தை வைத்தேன். உன்னை விட்டு யான் பிரியமாட்டேன். நீ என்னை விட்டுப் பிரியக் கூடாது. நாம் இருவரும் சேர்ந்து ஒவ்வொரு கர்மாவையும் ஸங்கல்பம் செய்து கொள்வோம். பரஸ்பரம் ருசி உள்ளவர்களாகவும், நல்ல மனம் உடையவர்களாகவும் இருப்போம். அன்னம், ரஸம் இவைகளைச் சேர்ந்து அனுபவிப்போம். இருவர் மனமும் ஒத்திருக்கட்டும். வ்ரதங்களைச் சேர்ந்தே அனுஷ்டிப்போம். மனம் மாத்ரமல்ல, வெளி இந்த்ரிய வ்யாபாரங்களிலும் இருவரும் ஒத்திருப்போம்.

நீ ரிக், நான் ஸாமம். நான் ஸாமம், நீ ரிக். ரிக்கும் ஸாமமும் ஒன்றை விட்டு ஒன்று பிரியாததுபோல் நாம் இருவரும் இருக்கவேண்டும். நான் த்யுலோகம் நீ பூமி, நான் ரேதஸ், நீ ரேதஸ்ஸைத் தரிப்பவள். நான் மனஸ், நீ வாக்கு. நான் ஸாமம், நீ ரிக். இவைகள் இணை பிரியாமலும் ஒன்றுக் கொன்று உதவியாகவும் இருப்பதுபோல், நாம் இருவரும் ஒத்திருக்கவேண்டும். ஸத்புத்ரனும், ஸம்பத்தும் உண்டாவதற்காக, முன் கூறியவைகளைப் போல். நீ என்னை அனுஸரித்து நட. என்னுடன் வா. எப்போதும் ப்ரியமாகப் பேசு.''

இதுவே ''ஸப்தபதீ'' எனப்படுகிறது. இதை ஜபித்து விட்டு, கையை விடாமல் இருவருமாக அக்னியை வலம் வந்து பாயில் தம்பதிகளாக அமரவேண்டும். தெற்கு புரத்தில் ப்ரும்மாவுக்கு இடம். அக்னியை வலம் வரும்போது ப்ரும்மாவைச் சுற்றுமல், ப்ரும்மாவுக்கும் அக்னிக்கும் நடுவில் வரவேண்டும். தென் திசை யமனது இருப்பிடமானதால், தம்பதிகள் ப்ரும்மாவைத் தென் புரத்தில் வைத்து வலம் வரவேண்டும். பத்னி தன்னைத் தொட்டுக்

கொண்டே இருக்க, வரன் "ஸோமாய" என்ற 16 ஹோமங்களைச் செய்யவேண்டும். இருவருக்கும் கர்மா பொதுவானதால், அவனைத் தொட்டுக்கொண்டிருந்தால் பத்னியும் ஹோமம் செய்வது போலாகும்.

1. இப் பெண்ணிடம் தங்கி இருந்த, ஓ ஸோம, உமக்கு ஹவிஸ்ஸைத் தருகிறேன். இது ஜனித்தான ஸோமனுடையதே. என்னுடையதல்ல—என்று இங்ஙனம் ஒவ்வொரு ஹோமத்தையும் செய்து, உத்தேசத்யாகம் சொல்ல வேண்டும். (உத்தேசித்தவரை நாடி த்யாகம் செய்து-ஹோமம் செய்து-அந்தப் பொருள் என்னுடையதல்ல என்று கூறுவதே உத்தேசத்யாகம்).

2, 3. இக்கன்யகையிடம் முன்னிருந்த கந்தர்வர் 3. அக்னி ஆகிய இவர்களுக்கும் அப்படியே ஹோமம். இம் மூவரும் கன்யகையிடம் முன் இருந்ததாக பாணிக்ரஹண மந்த்ரத்தில் கூறப்பட்டது. அவர்கள் இவளைக் காப்பாற்றி, வரனிடம் அளித்ததால் நன்றி கூறும் வகையிலும் தேவர்கள் என்ற வகையிலும் அவர்களுக்கு விவாஹத்தில் முதலில் ஹோமம் செய்யப்படுகிறது.

4. இவள் பிறந்த வீட்டை விட்டு பதியின் வீட்டிற்கு வருகிறாள். கன்யகைக்கு உரிய நியமங்களை விட்டு விட்டாள். அதனால் யாதொரு தோஷமும் இல்லாமல் இருக்கும்படி ஆத்ம ஸ்வரூபத்திற்கு ஆஜ்யத்தைத் தருகிறேன். ஆத்மனே இதன் நமம.

5. இஷ்டங்களைப் பூர்த்தி செய்யும் ஓ தேவேந்த்ர, இந்த கன்யகையை, அவளது குலத்தை விட்டு, என் குலத்தில் சேரும்படி செய்யும். இவள் என் குலத்தில் சேர்ந்து கலந்து, நல்ல புத்ரர்களையும் பாக்யத்தையும் அடையும்படி அருள் புரியும். இந்த்ராய மீடுஷே இதம் நமம.

6. இஷ்டத்தை அளிக்கும் இந்த்ர, இவளை ஸத்ஸந்ததி, ஸம்பத் முதலியன உள்ளவளாகச் செய்யும். இவளிடம் 10 புத்ரர் உண்டாகட்டும். பதி, பதினோராவது புத்ரனைப்போல் அவளது அன்புக்கு பாத்ரமாகட்டும். இந்த்ராய மீடுஷே இதம் நமம.

7. ஓ அக்னே வருண, இவளிடம் உண்டாகும் புத்ரர்களுக்கு அபம்ருத்யு தோஷம் தோன்றாமலும், இவள் புத்ரசோகத்தால் கண்ணீர் விடாமலும் இருக்கும்படி அருள் புரியுங்கள். அக்னீ வருணாப்யாம் இதம் நமம.

8. வீட்டிற்குப் பதியாயுள்ள அக்னி, இவளை ஸகல விதமான ஆபத்துக்களிலிருந்தும் காக்கட்டும். இவள் குழந்தை தீர்க்காயுஸ்ஸாக இருக்கவேண்டும். இவள் மடியில் குழந்தையை வைத்து ஸந்தோஷமாக அதை வளர்க்கட்டும். இவள் பெற்ற குழந்தைகள் எல்லாம் ஜீவனுடன் இருக்கட்டும். இவள் காலையில் எழுந்தவுடன் புத்ரன் முகத்தில் விழித்து குழந்தையால் உண்டாகும் இன்பத்தை அனுபவிக்கட்டும். அக்னயே கார்ஹபத்யாய இதம் நமம.

9. இரவில் வீட்டில் நுழைந்து, தானும் அழுது, வீட்டிலுள்ளவர்களையும் அழவைக்கும்படியான துர்தேவதைகள் இவள் வீட்டை விட்டு வேறிடம் செல்லட்டும். இங்கு தலைமயிரை விரித்துக் கொண்டு, மார்பில் அடித்துக் கொள்ளும் நிலை வரவேண்டாம். நீண்ட காலம் ஜீவித்திருக்கும் பதியுடன் அவள் வீட்டில் அவருக்கு அனுகூலமாயிருந்து நல்ல குழந்தைகளைக் கண்ணால் பார்த்துக் கொண்டு விளங்க அருள்புரியும். க்ருஹ பதியான அக்னே உமக்கு ஹோமம் செய்கிறேன். அக்னய இதம் நமம.

10. பெண்ணே, உனது பின்புறத்தை த்யுலோக தேவதையும், துடைகளை வாயுவும் ஸ்தனத்தை அச்வினீ தேவர்களும், உன் புத்ரனை ஸவிதாவும், "ஆவாஸஸ:" என்று கூறி யாக தீக்ஷை செய்து வஸ்த்ரம் உடுக்கும் வரை ப்ருஹஸ்பதியும், பிறகு விச்வேதேவர்களும் ரக்ஷிக்கட்டும். இது ஒரு கவசம் போன்ற மந்த்ரம். த்யு வாயு அச்வி ஸவித்ரு ப்ருஹஸ்பதிப்யோ விச்வேப்யோ தேவேப்ய இதம் நமம.

11. அக்னியின் அருளால், புத்ரன் உண்டாவதற்கு ப்ரதிபந்தகமான தோஷத்தையும், பிறந்தகுழந்தை இறப்பதற்கு உரிய பாபத்தையும், மற்ற பாப தோஷங்களை

யும். நம் தலையில் வைத்து வாடிய புஷ்பத்தை எடுத்துத் தூரே எறிவதுபோல், உன்னிடமிருந்து உன் சத்ருக்களிடம் எறிகிறேன். அக்நயே இதம் நமம.

12. ஓ வருண, உமது அருளைநாடி நான் உம்மைத் துதிக்கிறேன். இதைக் கேட்டு, களித்து, ஸுகத்தைத் தாரும். வருணாய இதம் நமம.

13. யாகத்தில் யஜமானன் தன்னைக் காப்பாற்ற வேண்டும் என்று பல த்ரவ்யங்களைக் கொண்டு உமக்கு ஹோமம் செய்கிறார். அங்ஙனமே நான் வேத மந்த்ரங்களால் உம்மை ஸ்துதி செய்து வேண்டுகிறேன். 'செய்' என வேதம் கூறியதைச் செய்யாமலும், 'செய்யாதே' என்று கூறியதைச் செய்தும் என் ஆயுளை இழக்கிறேன். ஆதலின் என்மீது கோபமின்றி அருள் புரிந்து ஆயுளை வ்ருத்தி செய்யும். வருணாய இதம் நமம.

14. ஓ அக்னே, நீ எல்லாம் அறிந்தவர். நான் நற்கர்மா செய்யாததால், என்மீது வருணனுக்கு ஏற்பட்ட கோபத்தை அகற்றி,ஸமாதானம் செய்யும். நீர் பூஜிக்கத் தக்க தேவர்களில் மிகச் சிறந்தவர். மற்ற தேவர்களுக்கு நரர் அளிக்கும் உணவை அப்படியே அவர்களுக்கு அளிப்பவர். மிக ப்ரகாசமுள்ளவரே என் எல்லா பாபங்களையும் அகற்றும். அக்னீ வருணாப்யாம் இதம் நமம.

15. ஓ அக்னே, தேவர்களில் முதல்வர் நீர். எங்களைக் காக்க எப்போதும் எங்கள் அருகில் இருக்க வேண்டும். வருண பாஶம் எம்மீது விழாமல் காப்பாற்றும். உமக்கு இன்பமளிக்கும்படி நாங்கள் கொடுக்கும் பொருளை ஏற்றுக் கொள்ளும். என் ப்ரார்த்தனைக்குச் செவி கொடும். அக்னீ வருணாப்யாம் இதம் நமம.

16. அக்னே, நீரே பக்தர்களால் கிட்டே நெருங்கி பூஜிக்கத்தக்க ப்ரத்யக்ஷ தேவராக இருக்கிறீர். உம்மை மனதால் த்யானம் செய்கிறேன். அந்தந்த தேவர்களை நாடி நான் அளிக்கும் உணவை அவரவர்களிடம் சேர்த்து என் பாபத்தை அகற்றும். அக்னயே அயஸே இதம் நமம.

இத்துடன் முக்யமான விவாஹ ஹோமம் முடிந்தது. அக்னி ஸந்தானத்திற்கு முதல் நாள் உண்ணுமல் இருக்க வேண்டும். அப்படி இல்லாத பாபம் அகல அயாஸ்ச ஹோமம் விதிக்கப்பட்டுள்ளது.

---

அம்மி மிதித்தல் : முக்ய ஹோமம் ஆனபின், அக்னிக்கு வடபுறத்தில் கோலம்போட்டு வைக்கப்பட்டிருக்கும் அம்மிமீது "ஆதிஷ்ட" என்ற மந்த்ரத்தைக் கூறி வரன் கன்யகையின் வலது காலைத்தூக்கி வைக்க வேண்டும். "ஓ பெண்ணே, நீ இந்தக் கல்லில் ஏறு. ஸம்ஸாரத்தில், பகைவனைப்போல் துன்பமளிக்கும்படியான நிலை ஏற்பட்டால் இக் கல்போல் அசையாமல் இரு. துன்பங்கள் நேரிட்டால் ஸஹித்துக் கொள்"

லாஜ ஹோமம் : பிறகு தம்பதிகள் அக்னிக்கு மேற்புறத்தில் அமர்ந்து, பத்னியின் அஞ்ஜலியில் அபிகாரம் செய்து, அவளது ஸஹோதரன் நெல் பொரியைக் கையில் போட, புருஷன் அதைப் பிடித்து நுனி விரலால் 'இயம் நாரீ' என்ற மந்த்ரத்தைக் கூறி ஹோமம் செய்யவேண்டும் அர்த்தம்:—ஓ அக்னே, இந்த எனது பத்னீ தன் பதியான நான் நூறுண்டு ஜீவித்திருக்க வேண்டும் என ப்ரார்த்தித்து இந்தப் பொரியை ஹோமம் செய்கிறுள். தாங்கள் அங்ஙனமே அருள் புரியவேண்டும். அக்னய தம் இநமம. பிறகு அக்னியை இருவர்களுமாக ப்ரதக்ஷிணம் செயது, முன்போல் அம்மி மீது மனைவியின் காலை ஏற்றி வைக்கவேண்டும். ப்ரதக்ஷிண மந்த்ரங்களின் பொருள்: 'ஓ அக்னே, ஸூர்யை என்ற பெண்ணை - ஸ்வாஹா - நீர் மணந்திருக்கிறீர். அவள் விவாஹம் கின்ற பெண்களுக்கெல்லாம் அபிமான தேவதை. அவர்கள் அனைவரும் உமது மனைவி மூலமாக உமக்கு வசமாவார்கள். ஸந்ததி உண்டாகாமல் இருக்க சில ப்ரதிபந்தகங்கள் உண்டு. அதை அகற்றி, நல்ல ஸந்தானம் உண்டுபண்ணக்கூடிய மனைவியை எனக்கு அளியும். நீண்ட ஆயுளையும் நல்ல அழகையும் பெற்ற மனைவியை எனக்குத் தாரும். அத்தகையவளின் பதியான நான் நூறுண்டு ஜீவித்திருக்க வேண்டும். ஓ

அக்னே, நாங்கள் இருவரும் ப்ரவாஹத்தைப்போல் வரும் சத்ருக்களை உமது ஸஹாயத்தால் தாண்ட வேண்டும்.

பிறகு இரண்டாவது முறையாக "ஆதிஷ்ட" என்ற மந்த்ரத்தைக் குறி, அம்மி மிதிக்க வேண்டும். மறுபடியும் இடத்தில் அமர்ந்து. முன்போல் லாஜ ஹோமம் செய்யவேண்டும். இரண்டாவது லாஜஹோம மந்த்ரம் "அர்யமணம்" என்பதாம், அதன் பொருள்:, "ஓ அக்னே கன்யகைகள் பலர் பூஜிக்கத் தக்க உம்மை லாஜ ஹோமத்தால் பூஜித்தனர். ஒருவராலும் ஹிம்ஸிக்க முடியாத நீர் இந்தப் பெண்ணை அவள் தந்தை வீட்டைவிட்டு என் வீட்டில் அன்புள்ளவளாகச் செய்யும். அர்யம்ணே அக்னய இதம் நமம. இருவரும் எழுந்து மறுபடியும் அக்னியை "துப்யம்" என்ற மூன்று மந்த்ரங்களால் வலம் வர வேண்டும். இதன் பொருள் முன்பேயே கூறப்பட்டது.

மறுபடியும் "ஆதிஷ்டேமம்" என்ற மந்த்ரத்தைக் கூறி, மூன்ருவது முறையாக அம்மி மிதிக்கும்படி செய்ய வேண்டும். பிறகு இருவரும் அக்னியில் மேற்புறத்தில் முன்போல் அமர்ந்து, "த்வமர்யமா" என்ற மந்த்ரத்தைக் கூறி, பொரியால் ஹோமம் செய்யவேண்டும். அர்த்தம் : ஓ அக்னே, இந்த விவாஹம் என்பது தேவர்களுக்கு அன்னம் அளிக்கவல்லது. அதனுல் தம்பதிகளுக்கு ஸ்வர்க்கமுண்டாகும். நீரே கன்யகாதானம் செய்தவர். தம்பதிகள் மனம் ஒத்து இருக்கும்படி செய்வதால் மரத்திற்கு ஜலம்விட்டு வளர்ப்பதுபோல் உம்மை நெய்யால் வளர்க்கிருேம். அர்யம்ண இதம் நமம. முன்போல் "துப்யம்" முதலிய 3 மந்த்ரங்களைக் கூறி, அக்னியை ப்ரதக்ஷிணம் செய்யவேண்டும். பொரி ஹோமம், அம்மி மிதித்தல், அக்னியை வலம் வருதல் என்ற இம் மூன்றையும் மூன்று முறை செய்யவேண்டும். பின்னர், பொரி எடுத்துக் கொடுத்த கன்யகையின் ஸஹோதரனுக்கு அவரவர் சக்திக்கேற்றபடி மோதிரமோ, வஸ்த்ரமோ, ரூபாயோ மரியாதை செய்யவேண்டும். தாலி முடிவதில் புருஷனின் ஸஹோதரியும், லாஜ ஹோமத்திலும் நான்

காவது நாள் தாம்பூலம் மடித்து அளிப்பதிலும், கன்யகையின் ஸஹோதரனும் ஈடுபடுவதால், பெண் வீடு, பிள்ளை விடு என்ற இருசாராரும் அவரவர் குழந்தைகளுடன் சேர்ந்து இதை நடத்தவேண்டும். குடும்பத்தில் ஏதேனும் மனஸ்தாபம் இருந்தால்கூட அதை விட்டு, விவாஹத்தில் கட்டாயம் ஒன்று சேரவேண்டும் என்பதை எண்பிக்கின்றது.

அதன் பின், இந்தக் கர்மாவை மிகச் சிறப்பு உள்ளதாகச் செய்ய "ஜயாதி" என்ற ஹோமத்தைச் செய்ய வேண்டும். அக்னியைச் சுற்றியுள்ள ஸமித்தை அகற்றி பரிஷேசனம் வரை உத்தர அங்கத்தைச் செய்ய வேண்டும். ப்ரும்மாவுக்குத் தக்ஷிணை தந்து, அவரை உத்வாஸனம் செய்து, "ப்ரத்வா" என்ற இரு மந்த்ரங்களால் கன்யகை இடுப்பில் கட்டியுள்ள தர்ப்பைக் கயிற்றை அவிழ்க்க வேண்டும். அதன் கருத்து: "ஒ பெண்ணே, இந்த தர்ப்பைக் கயிற்றின் மூலமாக ஸவிதா உன்னை வருண பாசத்தால் கட்டினார். இதை அவிழ்ப்பதன் மூலமாக அந்த வருண பாசத்திலிருந்து உன்னை விடுவிக்கிறேன். இருவரும் இவ்வுலகில் சுகமாக வாழ்ந்து நல்ல புண்ய கர்மாக்களைச் செய்து ப்ரும்ம லோகம் செல்வோம். ஸுகத்தைத் தரும் ஸவிதா கட்டிய வருண பாசத்தை நான் அவிழ்த்து விடுகிறேன். புண்யம் செய்தோர் அடையக்கூடிய ப்ரும்ம லோகத்தில் நாம் இருவரும் வருண பாசம் இல்லாமல் ஸுகமாக இருக்க இதை அவிழ்க்கிறேன்". அவிழ்த்த தர்ப்பைக் கயிற்றை மேற்கு திக்கில் வைத்து, கை அலம்பி, அக்னே - நமः என்ற மந்த்ரத்தைக் கூறி, அக்னி உபஸ்தானம் செய்யவேண்டும். அதன் கருத்து: "அக்னி பகவானே, நல்வழியில் எனக்குச் செல்வம் வரும்படி செய்யும். உனக்கு எல்லா வழியும் தெரியுமல்லவா? எனது கடும் பாபமெனும் பகைவரை அகற்றும். உமக்கு எண்ணிறந்த நமஸ்காரத்தைக் கூறுகிறேன்."

பிறகு அக்ஷதை ஆசீர்வாதம் பெற்று, காலை விவாஹ கர்மாவைப் பூர்த்தி செய்யவேண்டும். இந்த விவாஹ அக்னியைத் தம்பதிகள் ஜீவித்திருக்கும் வரை

காப்பாற்றி ப்ரதி தினம் ஔபாஸனமும், ப்ரதமைகளில் ஸ்தாலீ பாகங்களையும் செய்து வரவேண்டும். இதை எடுத்துச் செல்லும்போது மனைவிக்கும் அக்னிக்கும் இடையில் யாரும் எதுவும் குறுக்கே போகக்கூடாது. விவாஹ அக்னி அணைந்துவிட்டால், அரணிக் கட்டை யைக் கடைந்து அல்லது வேதம் ஓதி ஸத்கர்மாவைச் செய்பவரது வீட்டிலிருந்தாவது அக்னி கொண்டுவந்து, ப்ராயஶ்சித்த ஹோமம் செய்து ஔபாஸனம் செய்துவர வேண்டும். தம்பதிகளில் ஒருவர் ஒரு வேளை உபவாஸம் இருப்பதே ப்ராயஶ்சித்தமாகும். உபவாஸம் இருக்க முடியாவிடில் "அயாஶ்சாக்னே" என்ற மந்த்ரத்தைக் கூறி, ஒரு ஆஜ்யாஹுதி செய்யவேண்டும். அதன் கருத்து: ஓ அக்னே, நீர் ஸுலபமாக அடையதக்கவர். தோஷமற்றவர். உண்மையான பக்தருக்கு எளிதில் கிட்டாதவர். தங்களை மனதுடன் த்யானம் செய்கிறேன். பக்தரிடம் அன்பு கொண்ட நீர். நாங்கள் அளிக்கும் ஹவிஸ்ஸை தேவர்களுக்கு அளிக்கிறீர், எங்களுக்கு, ஆரோக்கியத்தை அளியும்."

இரவு ஔபாஸனம் ஆரம்பிக்கப் போவதால் தம்பதிகள் இருவரும் ஆஹாரம் உட்கொள்ளாமல். பலாஹாரம் செய்யவேண்டும். மஹாதானம் எனப்படும் கன்யகாதானத்தைச் செய்தவரும் அது பூர்ணமாக பலனை அளிக்க, நித்யமான ஔபாஸனம், ஆஹார நியமம் இவைகளை அன்றேனும் கைக்கொள்ளவேண்டும். வரன் கன்யகாதானத்தைப் பெற்று, அந்த கன்யகை யுடன் தன் வீட்டிற்கு சென்று மாலை முதல் மற்ற கர் மாக்களைச் செய்யவேண்டும். போகும்போதும், வண்டி யைத் தூக்கி மாட்டைக் கட்டி அதில் ஏறும்போதும், இடையில் வண்டியில் ஏதேனும் ஒரு பாகம் உடைந் தாலும், மற்ற பாண்டங்கள் உடைந்தாலும் அச்சமயம் கூறவேண்டும் என சில மந்த்ரங்கள் கூறப்படுகின்றன. தற்சமயம் அங்ஙனம் வண்டியில் போகாததால், அத் தகைய மந்த்ரங்களைக் கூறவேண்டியதில்லையே என எண் ணலாகாது. அந்த நிமித்தம் இல்லாவிடினும், மந்த்ரத் தை ஜபித்தால் தான் விவாஹம் பூர்த்தியாகும். அந்த

ஜபத்தால் ஓர் வகை அத்ருஷ்டம் எனும் புண்யமுண்டா கும். ஆதலால் அவைகளை ஜபிக்கவேண்டும்.

1. ஸத்யேந—பூமி ஸத்யத்தால் தரிக்கப்படுகிறது. ஸூர்யனால் ஆகாசம் தரிக்கப்படுகிறது. 12 ஆதித்யர் களும் யாகத்தினால் வஸிக்கின்றார்கள். ஸோமன் ஆகாசத்தில் இருக்கிறார். அங்ஙனமே, வண்டியை யான் தரிக்கிறேன். மாடு அல்லது குதிரையை வண்டியில் கட்டும்போது கூறவேண்டியது. 2. யுஞ்ஜந்தி— நன்கு ஓடுவதும், ஸ்தாவர வஸ்துக்களை வேறிடத்திற்குக் கொண்டு செல்வதுமான வாஹனத்தை ஆகாயத்தில் நக்ஷத்ரம் தெரியும்வரை வண்டியில் கட்டுவார்கள். நானும் அப்படி மனைவியை என் வீட்டிற்கு அழைத்துச் செல்ல வண்டியில் மாட்டைக் கட்டுகிறேன். 3. யோகே— தேவர்களுக்கு நண்பனான நான் ஒவ்வொரு கார்யத் திலும் விரைவாகப் பயனைத் தரும் இந்த்ரனை அழைக்கி றேன். ஆதலின், இதிலும் எங்களைக் காப்பதற்கு அவரை அழைக்கிறேன்.

வண்டியில் ஏறும்போது கீழ்வரும் மந்த்ரங்களை ஜபிக்கவேண்டும்.

1. ஸுகிம் சுகம்—ஓ பெண்ணே, நல்ல இலவ மரத் தால் செய்யப்பட்டதும், பலவகை வர்ணமுள்ளதும், ஸ்வர்ணம்போல் ப்ரகாசிப்பதும், நல்ல சக்ரமுடையதும், நன்கு ஓடுவதுமான இந்த வண்டியில் ஏறு. நீண்ட ஆயுள் உள்ளவனான என் வீட்டிற்கும் எனக்கும் இன்பத்தைத் தருவதான உன் பிதா கொடுத்த ஸ்ரீதனத்தை இதில் ஏற்று.

2. உதுத்தரம்—இதில் ஏறி, உன் பகைவர்களை எல் லாம் சிதற அடித்து, எனக்கு மிக ப்ரியமானவளாக இரு. பத்து புத்ரர்களைப் பெற்று, ப்ரகாசமாக இரு.

3. ஸம்ராக்ஞீ— மாமனாரிடமும், மாமியாரிடமும், நாத்தனாரிடமும், மைத்துனரிடமும் ப்ரியமாகவும் செல் வாக்குள்ளவளாகவும் இரு.

4. ஸ்நுஷாஞும்— என் வீட்டிலுள்ள மற்ற நாட்டுப் பெண்களிடமும். மாமஞர், சின்ன மாமஞர் பெரிய மாமஞர்களிடமும், குழந்தைகளிடமும், செல்வத்தினிடமும். என்னைப்போன்றவர்களிடமும் என் ஸஹோதர, ஸஹோதரிகளிடமும் செல்வாக்குள்ள யஜமானிபோல் இரு. அன்பாக நடந்து, அவர்கள் உன்னைக் கொண்டாடும்படி இரு. புதிய இடமல்லவா ? எப்படியோ என்று அஞ்சாதே.

ப்ரவேஶ ஹோமம்

காலையில் கன்யாதானத்தைப் பெற்று. விவாஹ ஹோமம் ஆனவுடன். புருஷன் அந்தப் பெண்ணுடன் தன் வீட்டிற்கு வந்து நுழைந்து செய்யும் ஹோமம் ப்ரவேஶ ஹோமம். வழியில் வண்டிப்பாதையில் வலது சக்ரத்தின் கீழ் நீலமான நூல்களையும், இடது சக்ரத்தின் கீழ் சிவப்பு நூல்களையும் போடவேண்டும். அப்பொழுது கூறவேண்டிய மந்த்ரம் இது. முன்கூறியபடி நூலைப் போடாவிடினும் மந்த்ரத்தைப் படிக்கவேண்டும். அதன் கருத்து :—" ஓ பெண்ணே, என்ஞல் வழியில் போடப் பட்ட கறுப்பு, சிவப்பு நூல்கள் நமக்கு அன்யோன்ய ப்ரீதி வளராதபடி வழியில் நமக்குத் தீங்கு உண்டாகும்படி நமது சத்ரு ஏதேனும் சூன்யம் முதலியன செய்திருந்தால் அவைகளை நாசம்செய்யட்டும். குழந்தைகளுக்கு தோஷம் பட்டிருந்தாலோ, அல்லது ஆபிசாரம் செயயப்பட்டிருந்தாலோ நூல்களால் தடை அல்லது முடிகயிற் கட்டுவதைக் காணலாம். வண்டிச் சக்ரம் அந்த நூல்மீது போகும்போது சொல்ல வேண்டிய மந்த்ரங்களின் கருத்து — இப்பெண் எனக்கு இன்பமூட்டுகிறுள். இவள் ஸ்ரீதனமாகக் கொண்டுவந்த பொருளை யக்ஷ்மரோகம் போல் சில திருடர் கொள்ளை கொள்வர். அவர்கள் இங்கு வராதபடி தேவர்கள் தம் இடத்திற்கு அழைத்துச் செல்லட்டும். வழியை மறித்துத் திருடுபவர் எங்களிடம் வரவேண்டாம். நாங்கள் செல்லும் வழியை அவர் அறிய வேண்டாம். நல்வழியே சென்று நாங்கள் அபாயத்தைக் கடக்கவேண்டும். பகைவர் எங்களை விட்டு அகல வேண்டும். என்னைச்

சார்ந்தவர் திருடரிடம் அகப்படாவண்ணம் திருடர் பொருளைக்கூட கவரும்படி நாங்கள் நல்வழியாகச் செல்லவேண்டும். என்னைச் சார்ந்த எந்த வஸ்துவுக்கும் துன்பம் நேரிடக்கூடாது. இங்கு திருடர், பகைவர் என்பதெல்லாம் நமது பாபமாகும். ஊர் போகும் வழி என்பது தம்பதிகள் செய்யும் கர்ம மார்க்கம் என்று பொருள்.

வழியில் புண்ய தீர்த்தங்கள், பசு சொறிந்துகொள்ளும் கல் அல்லது மரம், நாற்சந்து இவைகளைத் தாண்டிச் செல்லும்போது கூறவேண்டிய மந்த்ரத்தின் கருத்து :— அஶ்வினீ தேவர்களை அனைவரும் துதிக்கின்றனர். நானும் அவர்களைத் துதிக்கிறேன். இதனால் அவர்கள் எனக்குச் செல்வத்தையும், குழந்தைகளையும் கொடுக்கட்டும். வழி தாகத்தை அகற்றவும் ஆரோக்ய மளிக்கவும் நல்ல தீர்த்தங்களைத் தரட்டும். வழியில் தடை செய்யும் கட்டை, திருடர் முதலியவைகளை அகற்றட்டும். நதிகளைத் தாண்ட ஓடத்தில் ஏறும்போது ஜபிக்கும் மந்த்ரத்தின் கருத்து :—மரத்தாலாகிய இந்த ஓடம் எங்களை ஆபத்தில்லாமல் அக்கரையில் கொண்டு சேர்க்கட்டும். நீ நீண்ட ஆயுளும் கீர்த்தியும் உள்ளவளாக வேண்டும்.

நதியைத் தாண்டிய பின் கூறும் மந்த்ரத்தின் கருத்து :—உயிருடன் நதியைத்தாண்டி அக்கரை வந்தோம். பயமில்லாத இடத்திற்கு வந்து விட்டோம். இந்த்ரன் எங்களைக் காக்கட்டும். ஸ்மஶானத்தைக் கடக்க நேர்ந்தாலோ, பெண் நகை கெட்டுப் போனாலோ வண்டி முறிந்தாலோ, அக்னி ப்ரதிஷ்டை செய்து சில ஹோமங்களைச் செய்யவேண்டும். அதன் கருத்து—(1) பிசின் முதலியன இல்லாமலே இந்த்ரன் இரு வஸ்துக்களை ஒன்றாகச் சேர்க்கிறார். உருகிய அரக்கு கெட்டியாவதற்குள் உடைந்த வஸ்துக்களை அவர் ஒன்று சேர்க்கிறார். அவருக்கு ஹோமம் செய்கிறேன் (2) ஓ அக்னே, அன்னம் பசு முதலியவைகளை எனக்கு அளியும். அவை ஸ்திரமாக என்னிடம் இருக்கும்படி செய்யும். இமம்மே-தத்வாயாமி - த்வன்னோ அக்னே - ஸத்வன்னோ அக்னே - த்வமக்னே - இந்த மந்த்ரங்களாலும் ஹோமம் செய்ய

வேண்டும். இவைகளின் கருத்து முன் கூறப்பட்டது. ஆல் அரசு, அத்தி முதலிய மரங்களையும், ஆறுகளையும், ஜல மில்லாத இடங்களையும்கடக்கநேர்ந்தால்ஜபிக்கவேண்டிய மந்த்ரங்களின் கருத்து :—இந்த மந்த்ரங்களில் வஸிக்கும் கந்தர்வர்களும் அப்ஸரஸ்ஸுகளும் இந்தப் பெண்ணுக்கு க்ஷேமத்தைத்தரட்டும். இவளையும் இவள் கொண்டுவரும் ஸ்த்ரீ தனத்தையும் கெடுக்காமல் இருக்கட்டும். ஒஷதி களும், ஆறுகளும், ஜலமில்லாத தேசமும் காடுகளும், இந்த பெண்ணைத் துன்பத்திலிருந்து விடுவித்து புத்ர பாக்யத்தைத் தரட்டும்.

கணவனது வீட்டைக் காட்டும்போது கூறும் மந்த்ரத்தின் கருத்து :—" பெண்ணே, உனது ஸ்ரீ தனத்துடன் இந்த வீட்டில் நுழைந்து, இதை நல்ல கண்ணால் பார். பந்துக்களால் உனக்கு பூட்டப்பட்ட ஆபரணங்களை ஸவிதா என்னும் தேவதை உனக்கு இன்பம் தரும்படி செய்யட்டும். வண்டியிலிருந்து காளைகளை அவிழ்த்து விடும்போது கூறும் மந்த்ரத்தின் கருத்து :— ஹவிஸ்ஸா லும், துதிகளாலும் பூஜிக்கப்படும் அஶ்வினீ தேவர்களே, உங்களது அருளால் எங்கள் இஷ்டம் பூர்த்தியாகி விட்டது. உங்களைப்போல் நாங்கள் இருவரும் ஒருவரை விட்டு ஒருவர் பிரியாது இருக்கவேண்டும். ஒ காளைகளே, எங்களுக்கு வேண்டியபோது வாருங்கள். ஸவிதா, ப்ருஹஸ்பதி, இந்திராக்னீ, மித்ரா வருணர், த்வஷ்டா, விஷ்ணு என்ற தேவர்கள் உங்களை உங்கள் இஷ்டப்படி ஸஞ்சரிக்கும்படி விடட்டும்.

வீட்டில் தோலைப்பறப்பி, பெண், தன் புருஷனது வீட்டில் நுழையும்போது வலது காலை முன்வைக்க வேண் டும். அச்சமயம் கூறும் மந்த்ரத்தின் கருத்து :—" இந்த தோல் மயமான விரிப்பு இப்பெண்ணுக்கு இன்பத்தைத் தரட்டும். ஸிநீவாலீ எனும் தேவதை இவளுக்குச் சக்தியை அளிக்கட்டும். பகன் இவளைக் காக்கட்டும்.

புத்ரர்களைச் சாகக் கொடுக்காதவளும், ஸந்தோஷ முள்ள பந்துக்கள் உள்ளவளும், மனோஹரமானவளும், ஸஹோதரர்களுக்கும் புத்ர பாக்யமுள்ளவளும், அன்னம்

நிறைந்தவளும் விருந்தினருக்கு நெய்யை நிறைய அளிப்பவளும், களங்க மற்றவளாகவும் வீட்டில் நுழைகிறேன். வண்டி, காளை, நதி, ஶ்மஶானம் இவைகளை எல்லாம் பற்றி மந்த்ரம் கூறுகிறது. நாம் மாட்டு வண்டியில் அங்கு செல்வதில்லையே. வேத மந்த்ரங்கள் அரிய பெரிய விஷயங்களை விட்டு, சிறிய இவ்விஷயங்களில் ஈடுபட்டதே. பண்டைய காலத்தில் வண்டி ஏறிச் சென்றதால் அந்த மந்த்ரங்கள் அக்காலத்திற்கு ஏற்றதாக இருக்கலாம். இப்பொழுது அது ஏன் என நினைக்கலாகாது. பொதுவாக இப்படி கருத்து இருந்தாலும், அவ்வண்டியில் ஏறுவிடினும். ஒருவகை அத்ருஷ்டத்தைத் தருகின்ற அந்த மந்த்ரங்களைக் கூறவேண்டும் என பாஷ்யம் எழுதிய மஹர்ஷிகள் முடிவு கட்டியதால் தம்பதிகளின் நன்மையை நாடி அவைகளை ஜபிக்கவேண்டும்.

வீட்டின் ஈஶான திக்கில் அந்த அக்னியை ப்ரதிஷ்டை செய்து, பத்னியுடன் அமர்ந்து 13 ஹோமம் செய்ய வேண்டும். அதன் கருத்து :—(1) ஓ அக்னே, என் மனைவி தன் தந்தை அளித்த செல்வத்துடன் இங்கு வந்தாள். அவள் தீர்க்க ஸுமங்கலியாகவும், ஸந்ததி ஸம்பத் உள்ளவளாகவும், ஔபாஸனம் முதலிய அக்னியை ஆராதிப்பவளாகவும் இருக்க வேண்டும். (2) அக்னிதேவரே நமது வீட்டிற்குப்பதி. தனதான்யம் அளிப்பவர். அவரை ஆராதித்த பகன் முதலியவர்க்கு அளித்ததுபோல் எங்களுக்கும் ஸந்ததி ஸம்பத் முதலியவைகளை அளிக்கட்டும். (3) ஓ, ப்ரஜாபதே ! இந்த்ராக்னீ ! எங்களுக்குக் குழந்தை பிறந்து. அது எங்களுக்கு முன் இறக்காதபடி காப்பாற்றும் (4) ஓ இந்த்ராக்னீ, நாங்கள் அளிக்கும் ஹவிஸ்ஸால் ஸந்தோஷமடைந்து, எங்களை வ்ருத்தி செய்யுங்கள். என் மனைவியையும் வ்ருத்தி செய்யும். (5) அக்னே, ஆஜ்ய ஆஹுதியைப் பெற்று, இவளைப் பாலுள்ளவளாகவும், வீடு. செல்வம் முதலிய பாக்யம் உள்ளவளாகவும் செய்யும். பலரை ரக்ஷிக்கும்படியான செல்வம் எங்களுக்கு நிறைய வேண்டும். பிறரிடம் சென்று கேளாதபடி அதை அளியும். (6) நாங்கள் இந்த வீட்டில் பிரியாமல் சேர்ந்திருக்கவேண்டும்.

நீண்ட ஆயுளைப் பெற வேண்டும். அப்படி ஸர்வ க்ஷேமத்தையும் அளியும். (7) பெண்ணே, ப்ருஹஸ்பதி உன்னை எனக்கு அளித்தார். நான் உன்னை ரக்ஷிக்கிறேன். நீ குழந்தைகளைப் பெற்று நூறாண்டு ஜீவித்திரு. (8) த்வஷ்டா இந்த மனைவியை எனக்குத் தந்தார். அவரே பத்னிக்கு என்னைப் பதியாகத் தந்தார். நம் இருவருக்கும் காரணமான த்வஷ்டா ஆயிரக்கணக்காகச் செல்வத்தையும் ஆயுளையும் நமக்குத் தரட்டும். (9) இமம் மே வருண (10) தத்வாயாமி, (11) த்வன்னோ அக்னே, (12) ஸத்வன்னோ அக்னே, (13) த்வமக்னே அயாஸி இவைகளாலும் தனித்தனி ஹோமம் செய்ய வேண்டும். இதன் கருத்து முன்பு கூறப்பட்டது.

பிறகு தோல் ஆஸனத்தில் உட்காரும்போது கூறும் மந்த்ரத்தின் கருத்து —ஓ பசுக்களே, என் வீட்டில் நீங்கள் வ்ருத்தியாக வேண்டும். குதிரைகளும் வேலைக்காரர்களும் வ்ருத்தியாகட்டும். பிறகு புருஷக்குழந்தைகளை மாத்ரம் பெற்றவளும் தீர்க்காயுஸ் உள்ள புத்ரனைப் பெற்றவளுமான ஒருவளுக்குப் பிறந்த ஆண்பிள்ளையை மடிமீது உட்கார வைத்து ஒரு மந்த்ரத்தை ஜபித்து வாழைப்பழத்தை அதற்குத் தரவேண்டும். ஆண் குழந்தையை மடி மீது உட்காரவைக்கும் போது கூறும் மந்த்ரத்தின் கருத்து : தேவர்களுக்குச் சந்த்ரனால் பலம் ஏற்படுகிறது. சந்த்ரனால் பூமி த்ருடமாக இருக்கிறது. நக்ஷத்திரங்களின் நடுவில் சந்த்ரன் ஸ்தாபிக்கப்பட்டிருக்கிறான். அதைப் போல் இந்தக் குழந்தை இவள் மடியில் அமர்ந்திருக்கிறான். குழந்தைக்குப் பழம் அளிக்கும் போது கூறும் மந்த்ர அர்த்தம்:—பழங்கள் மரத்தின் ஸந்ததியை வளர்ப்பது போல் இவள் நல்ல ஸந்ததிகளை உண்டு பண்ணட்டும்.

பிறகு இரு மந்த்ரங்களை ஜபித்து, தம்பதிகள் நக்ஷத்ரம் உதயமாகும்வரை மௌனமாக இருக்கவேண்டும். ஜபிக்கும் மந்த்ரத்தின் கருத்து :—இந்த வீட்டில் உனக்கு ஸந்ததி, ஸம்பத்துக்களால் ஆனந்தம் உண்டாகும்படி தேவர்கள் அருள் புரியட்டும். வீட்டிற்கு யஜமானியாக இரு. ஜாக்ரதையாக இருந்து உடலை ரக்ஷித்து ஸுகத்தை அனுபவி. வயதானபின் அனுஷ்டான முறையை உன்

ஸந்ததிக்கும் உபதேசம் செய். பெரியோர்கள் இங்கு வந்து இவளுக்கு ஸந்ததி, ஸம்பத், மாங்கல்யம் முதலிய பாக்யங்களை ஆசீர்வதித்துச் செல்லட்டும்.

த்ருவனையும் அருந்ததியையும் பெண்ணுக்குக் காட்டும்போது கூறும் மந்த்ரத்தின் கருத்து:—ஓ த்ருவ, நீர் அழிவில்லா பதவி பெற்றவர். ஸத்யத்திற்குக் காரண மானவர். ஸ்திரமாக இருப்பதற்கு நீரே காரணம். த்ருவம் என்ற பெயரைப் பெற்றீர். சுற்றுகின்ற நக்ஷத் திரங்களுக்கு நீர் கட்டுத் தறிபோல் இருக்கிறீர். அத் தகைய நீர் சத்ருக்கள் பாதை இல்லாமல் இவளை ஸ்திர மாக இருக்கச் செய்யும்.

ஸப்த ரிஷிகள் பத்னிகளுக்கு க்ருத்திகா என்று பெயர். அவர்களுள் சிறந்தவளான அருந்ததியை மற்ற ஷட் க்ருத்திகைகள் "இவளே எங்களில் மிக உத்தமி" என ஏற்றுக் கொண்டனர். அத்தகைய அருந்ததியின் தர்சனத்தால், இவள் எட்டாவது க்ருத்திகைபோல் கற்பினாலும் பாக்யத்தினாலும் வ்ருத்தி யடையட்டும்.

[ நான்கு நாட்களில் செய்ய வேண்டிய விவாஹம் தற்சமயம் ஒரே நாளில் வந்து முடிந்திருக்கிறது. அதி லும், ஒரு வேளையிலேயே — அதாவது பகலுக்குள்ளேயே முடிக்கின்றனர் சிலர். இனி ஒரு மணி அல்லது ஒரு நிமி ஷத்தில் வந்து முடியுமோ என அஞ்ச வேண்டியிருக்கி றது. ஒரு வேளையில் முடிப்போர். இரவிலே மாத்ரம் காணக் கூடிய த்ருவனைத் தர்சித்து த்ருவமாக வாழ முடியுமா ? பகலில் அருந்ததியைத் தர்சிக்க முடியுமா ? அவளைப் போல் உத்தமியாக வாழவேண்டும் என அவளைக் காணாமல் ப்ரார்த்திக்க முடியுமா ?

ஆகையால் ஆஸ்திக அன்பர்கள் விவாஹ தினத்தில் இரவு த்ருவ அருந்ததி தர்சனம், ஆக்னேய ஸ்தாலீ பாகம், ஔபாஸனம் இவைகள் ஆனபின் ஊர்வலமும் நடத்தி, பலதானம் செய்து, விவாஹம் முடிந்ததாக ஸம்பந்திகளையும் மற்றவரையும் அனுப்பிவிட்டு, தம்பதி களை, கன்யகை அல்லது புருஷன் வீட்டில் 4 நாட்கள்

ஔபாஸனம் செய்வித்து, பாலிகைக்கு ஜலம் விட்டு வளரச் செய்து, விதிப்படி 4-வது நாள் இரவு சேஷ ஹோமம் செய்யவேண்டும். இதே உத்தமம். பல காரணங்களால் அப்படி முடியாவிடில் (ஶ்ரத்தை இருந்தால் முடியாத துண்டோ?) பகலோடு விவாஹத்தை முடிக்காமல், இரவில் ப்ரவேச ஹோமம் த்ருவ அருந்ததீ தர்சனம் ஆக்னேய ஸ்தாலீபாகம் ஔபாஸனாரம்பங்களைச் செய்து, முடித்து லௌகிகமான ஊர்வலம் முதலியவைகளைச் செய்து, மறு நாள் காலை 4 மணிக்கெழுந்து சேஷ ஹோமம் முதலியவற்றைச் செய்யலாம். இது மத்யம பக்ஷம். இப்படிச் செய்யும்போது 3 நாள் நடுவில் விட்டுப்போன ஔபாஸனங்களைச் சேர்த்து 6 ஔபாஸன ஹோமங்களைச் செய்வது நலம். இது பழக்கமில்லை என்பர் சிலர். அக்னி ஹோத்ரம் போல் ஆகர்ஷித்துச் செய்யலாம் என ப்ரயோகங்களை எழுதின வித்வான் மணக்கால் முத்து ஶ்ரௌதிகளும், அபிநவ வ்யாஸரான என் குரு ஶ்வேதாரண்யம் நாராயண யஜ்வா அவர்களும் தீர்மானித்து, ஒரு விவாஹத்தில் அப்படிச் செய்து வைத்தனர். ஆதலால் முக்யமான ஔபாஸனத்தை அதற்கேற்ற முக்ய காலமான இரவில் ஆரம்பித்து, மத்யம பக்ஷத்தில்—3 இரவு வேளை 3 காலை வேளை ஹோமங்களுக்காக—என ஸங்கல்பம் செய்து அக்ஷதைகளை எடுத்து ஒரே ஹோமமாகச் செய்யவேண்டும். சேஷ ஹோமத்தை மறுநாள் காலையில் செய்யவும். நான்கு நாட்கள் ஔபாஸனம் செய்வதே தர்மம். உத்தமம். ஆசாரம் ].

கந்தர்வ பூஜை : அரச ஸமித் அல்லது அத்தி ஸமித் அல்லது ஆல ஸமித்து ஒன்றில் சந்தந புஷ்ப அலங்காரம் செய்து கன்யகையின் உடலில் தங்கி இருந்த விஶ்வாவஸு என்ற கந்தர்வனை ஆவாஹநம் செய்து தம்பதிகளிடையே வைக்கவேண்டும். விவாஹ திநம் முதல் நாலாவது நாள்வரை தம்பதிகளுக்குத் தீக்ஷை விதிக்கப்பட்டது. யாக தீக்ஷைபோல் முதல் நாள் உடுத்திய புது வஸ்த்ரத்தையே உடுத்தி பூமியில் படுத்து வெளில் செல்லாமல் ஔபாஸநம் உள்ள வீட்டில் தம்பதிகள் வஸிக்க வேண்டும். இந்த தீக்ஷா காலத்தில் ஏதேனும் தீட்டு

நேர்ந்தால் தம்பதிகளுக்கு ஸூதகத் தீட்டோ சாவுத் தீட்டோ கிடையாது. பெற்றோருக்கும் மற்றோருக்குமே தீட்டாம்.

**ஆக்நேய ஸ்தாலீபாகம் :** முதல் நாள் காலை விவாஹ ஹோமம் செய்த அக்நியைக் குண்டத்தில் வைத்திருக்கிற தல்லவா ? வரன் ஸாயம் ஸந்த்யா வந்தநம் செய்து முடித்து அந்த அக்நியை வேதியில் எடுத்து வைத்து மூட்டி ஸங்கல்பம் செய்யவேண்டும். விவாஹம் செய்து கொண்ட இந்த கன்யகையுடன்கூட ஆக்நேய ஸ்தாலீ பாகம் செய்கிறேன் என்பது ஸங்கல்பத்தின் பொருள். கன்யகை அரிசி குத்துவதுபோல் பாவனை செய்து 3 முறை களைந்து அந்த அக்னியில் வைத்துப் பாகம் செய்யவேண்டும். பக்வமானவுடன் அபிகாரம் செய்து வடக்கு அல்லது கிழக்கு முகமாக இறக்கி வைக்கவேண்டும். கீழே வைத்த பின் ஒருமுறை அபிகாரம் செய்யவேண்டும். முகாந்தம் செய்து பத்நீ தொட்டுக்கொண்டே இருக்க பலாச இலையில் அபிகாரம் செய்து அந்த அன்னத்தை இரு முறை எடுத்து அவ்விலையில் வைக்க வேண்டும். அதன் மீதும் பாத்ரத்தில் உள்ள அன்னத்தின் மீதும் ஒவ்வோர் முறை அபிகாரம் செய்யவேண்டும். ஸ்ரீவத்ஸ கோத்ரக் காரர் மாத்ரம் 3 முறை ஹோமத்திற்கு அன்ன மெடுத்து வைத்துக்கொள்ள வேண்டும். இதற்கு அவதாநம் என்று பெயர். நடுவிலிருந்து முதல் முறையும் கிழக்கிலிரண்டாம் முறையும் மேற்கிலிருந்து மூன்றாம் முறையும் அவதாநம் செய்யவேண்டும். ஒவ்வொரு முறையிலும் நம் கட்டை விரல் முதல் கோடு அளவு அன்னமெடுக்க வேண்டும். இது எல்லா அன்ன ஹோமங்களுக்கும் பொதுவானது. அதிகமாகவோ குறைவாகவோ எடுக்கலாகாது. அன்ன பாத்ரத்தை இடது கையால் பிடித்துக்கொண்டு, அக்நயே ஸ்வாஹா என்று முதல் ஹோமம் செய்து, அக்நயே இதம் நமம என்று கூறவேண்டும். பிறகு பலாச இலையில் அபிகாரம் செய்து அன்ன பாத்ரத்தின் வடக்குப் புறத்திலிருந்து முன் ஹோம அளவைவிட சிறிது அதிகமாக ஒருமுறை- ஸ்ரீவத்ஸ கோத்ரிகள் இருமுறை-அன்னத்தை எடுத்து வைத்து அபிகாரம் இண்டு முறை செய்து முன்

போல் அன்னபாத்ரத்தை இடது கரத்தால் தொட்டுக் கொண்டே உறக்க அக்நயே ஸ்விஷ்டக்ருதே ஸ்வாஹா என்று அக்நியின் வடகிழக்கில் ஹோமம் செய்யவேண் டும். மற்ற ஹோமத்துடன் சேராமல் தனியாக இதைச் செய்ய வேண்டும். உத்தேச த்யாகம், பரிதி அபிகாரம், லேபகார்யம் பரிதியை அக்நியில் போடுவது ஸக்குஸ்ராவ ஹோமம், அநாக்ஞாதாதி ஹோமம் பரிஷேசநம் முதலியன செய்ய வேண்டும். இத்துடன் ஆக்நேய ஸ்தாலீ பாகம் முடிந்தது.

ஔபாஸன ஆரம்பம் :— இதுவரை ப்ரும்மசாரியாக இருந்து ஸமிதாதாந அக்நியை உபாஸித்து இது முதல் ஔபாஸந அக்நியை உபாஸிக்க ஆரம்பித்ததால் அஹோ ஷே ஹேபரிஷத் என்று ப்ராம்மணர்களுக்குத் தக்ஷிணை தந்து அநுக்ஞைபெற்று ஸங்கல்பம் செய்யவேண்டும். தம்பதிகள் ஜீவித்திருக்கும் வரை ப்ரதிதிநம் ஔ பாஸனம் செய்கிறோம் என்று ஸங்கல்பத்தின் கருத்து. க்ரஹப்ரீதி செய்து ஸாயம் ஔபாஸநத்தை அரிசியால் செய்கிறேன் என ஸங்கல்பம் செய்து "சத்வாரி ஶ்ருங் கா" என்ற மந்த்ரம் கூறி அக்நி த்யாநம் செய்ய வேண்டும்.

"யக்ஞ ரூபமான ஓ அக்நியே ! உமக்கு 4 வேதங்கள் கொம்புபோல் இருக்கின்றன. ப்ராதஸ் ஸவனம் மாத்யந்தின ஸவனம் த்ருதீய ஸவனம் என்ற 3 பாதங் களிருக்கின்றன. ப்ராயணீயம் உதயணீயம் என்ற இருதலைகளும் 7 சந்தஸ்ஸுகள் என்ற 7 கரங்களும் இருக்கின்றன. மந்த்ரம் ப்ராம்மணம் கல்பம் என்ற முப்பிறி ஏற்றிய கயிற்றால் கட்டப்பட்டிருக்கிறீர். 3 வேதங்களாலும் துதிக்கப்பட்டு காளைபோல் கர்ஜிக்கிறீர். மஹாதேவரான நீர் மனிதர்களிடம் வந்து நுழைந்திருக் கிறீர். வித்வான்களால் அனுபவிக்கப்படுகிறீர். ஸ்வப் ரகாசமாக இருக்கிறீர். நீர் முதலில் உண்டானவர். ப்ரும்மாண்டத்தின் உள்ளேயும் இருக்கிறீர். இப்போ திருக்கும் ப்ராணிகளாகவும் இனி உண்டாகப்போகும் ப்ராணிகளாகவும் இருக்கிறீர். கிழக்குமுகமாக இருக்

கின்ற ஒ அக்நே! வாரும், எனக்கு அபிமுகமாக இரும்.''
இது அக்னி த்யான மந்த்ரத்தின் கருத்து.

அக்நிகுண்டத்திற்கு 8 திக்குகளிலும் திக்தேவதை களைப் பரிவார தேவதைகளாகக் கருதி ஆங்காங்கு அக்ஷதையை வைக்கவேண்டும். 1. அக்நயே நம: 2. ஜாத வேதஸே நம: 3. ஸஹோஜஸே நம: 4. அஜிராப் ரபவே நம: 5. வைஶ்வாநராய நம: 6. நர்யாபஸே நம: 7. பங்திராதஸே நம: 8. விஸர்ப்பிணே நம: மஞ்சள் அல்லது குங்குமம் கலந்த அக்ஷதைகளால் இவைகளைச் செய்து அக்நயே நம: என்று சுத்தாக்ஷதையை அக்நியில் போடவேண்டும். பிறகு ஆத்மநே நம: என்று தன் தலை மீதும் ஸர்வேப்யோ ப்ராம்மணப்யோ நம: என்று ப்ராம் மணர் மீதும் அக்ஷதையைப் போடவேண்டும். பிறகு அதி தேநுமன்யஸ்வ [தென்புறத்திலும்] அநுமதேனுமன் யஸ்வ [மேற்கிலும்] ஸரஸ்வதேநுமன்யஸ்வ [வடக்கி லும்] பரிஷேசநம் செய்து தேவஸவித: ப்ரஸுவ என்று 4 புறத்திலும் ஜலத்தால் பரிஷேசநம் செய்யவேண்டும். இந்த பரிஷேசநத்தை ஆதியிலேயே செய்வர் சிலர்.

ஒரு ஸமித்தை அக்னியில் வைத்து ஹோஷ்யாமி என உத்திரவு கேட்கவேண்டும். அருகிலுள்ளவர் ஜுஹுதி, ஹோமம் செய் என உத்திரவளிப்பர். நித்யம் செய்யும் ஔபாஸநத்தில் ஒருவருமருகே இல்லாவிடில் நாமே ஜுஹுதி என கூறவேண்டும். நன்கு களைந்து ஈர மில்லாத அக்ஷதையை வ்யாஹ்ருதியைக் கூறி கையில் எடுத்துக் கொண்டு அதை இரண்டாகப் பிரித்து இடது கரத்தில் ஸ்விஷ்டக்ருத்திற்காகச் சிறிது அதிகமெடுத்துக் கொண்டு வலது கையில் நுனியால் அக்நயே ஸ்வாஹா என்று ஹோமம் செய்யவேண்டும். அக்நய இதம் நமம என்று உத்தேசத்யாகம் கூறி இடது கரத்திலுள்ளதை வலது கரத்தில் மாற்றிக்கொண்டு அக்நயே ஸ்விஷ்டக்ரு தே ஸ்வாஹா என்று உறக்கக்கூறி வடகிழக்கில் ஹோமம் செய்யவேண்டும். அக்நயே ஸ்விஷ்டருக்தே இதம் நமம என்பது உத்தேசத்யாகம். ஹோமம் ஆனவுடன் அதை விரட்டியால் உடனே மூடவேண்டும். இவ்விரண்டு

ஹோமங்களும் ஒன்று சேருதபடி கவனிக்க வேண்டும். பின்னர் அதிதேன்வமக்குஸ்தா:, அநுமதேன்வ மக்குஸ்தா:, ஸரஸ்வதேன்வ மக்குஸ்தா:, தேவஸவித: ப்ராஸாவீ: என்று பரிஷேசநம் செய்ய வேண்டும்.

இந்த ஔபாஸந கர்மா நன்கு அநுஷ்டிக்கப்பட்டதாக ஆவதற்காக " அநாக்ஞாதாதி மந்த்ர த்ரய ஜபம் கரிஷ்யே " என ஸங்கல்பம் செய்து ஜபிக்கவேண்டும். கருத்து :—ஒ அக்நே ! உமது பூஜையான யக்ஞத்திற்கு எவ்வளவு அங்கம் என அறியோம். தெரிந்தோ தெரியாமலோ தவறுதலாகவோ ஏதோ செய்கிறோம். அதை எல்லாம் ஒழுங்காக்கி பூர்ணபலனைத் தரும்படி செய்யும். உமக்குக் கர்ம தத்வம் நன்கு தெரியுமல்லவா ? ஒ அக்நே ! யக்ஞம் புருஷனைப் போலிருக்கிறது. புருஷன் நன்றாக அனுஷ்டிப்பதற்காக நிர்ணயிக்கப்பட்டிருக்கிறது. நான் செய்த யக்ஞத்தை ஒழுங்குபடுத்தி பலனுள்ளதாகச் செய்யும். குழந்தைகளைப் பெரியவர் ரக்ஷிப்பதுபோல் நீர் எங்களை ரக்ஷிக்கவேண்டும். நாங்கள் அறியாமையால் எதை விட்டோமோ அதையும் யக்ஞ ஸ்வரூபத்தையும் நீர் நன்கு அறிவீர். யாகம் செய்யும் ஸாமர்த்யமும் வாய்ந்தவர். அந்தந்த தேவர்களை அழைத்து அந்தந்த காலத்தில் அவரவர்க்கேற்றபடி நீர் தான் பூஜை செய்து எங்களுக்குப் பலனைத் தரவேண்டும். இதம் விஷ்ணு: என்ற மந்த்ரத்தையும் ஜபிக்கவேண்டும். அதன் பொருள்: மஹா விஷ்ணு த்ரிவிக்ரம அவதாரம் செய்து தன் திருவடிகளால் உலகை அளந்தார். ஒரடியில் இவ்வுலகம் அடங்கிற்று. அவர் பாதத்தால் கர்மபூமி புண்யமாகி கர்மாவிற்கேற்ற விடமாகவும் ஆனது. என அவரது திருவடி ஸ்மரணத்தால் ஸர்வ தோஷமும் அகன்று புண்யம் உண்டாகும். ஆதலால் ஒவ்வொரு வைதிக் கர்மாவிலும் ஹோமத்திலும் ஜபத்திலும் இந்த மந்த்ரம் பயன்படுத்தப்படுகிறது. காலை ஔபாஸனத்தில் முதல் ஹோமம் ஸூர்யாய ஸ்வாஹா என்று ஒரே மாறுதல் தான். மற்றதெல்லாம் முன்போலவேயாம். ஸ்வாஹா என்று ஒரு ஸமித்தை ஹோமம் செய்து, அக்னி உபஸ்தாநம் கரிஷ்யே என்று எழுந்து " அக்நே நய " என்று

மந்த்ரம் கூறவேண்டும். கருத்து :—ஓ அக்நே ! நீர் எல்லா மார்க்கங்களையும் அறிவீர். நல்ல மார்க்கத்தால் செல்வம் உண்டாகும்படி செய்யும். மிக குடிலமான ப்ரதிபந்தக மெனும் பாபத்தை அகற்றும். உமக்குப் பல நமஸ்காரம் கூறுகிறோம். அபிவாதயே கூறி பஸ்மாவை இட்டுக் கொள்ளவேண்டும.

சேஷ ஹோமம்

நான்காவது நாள் அபர (பின்) ராத்ரியில் எழுந் திருந்து செய்ய வேண்டிய ஹோமம் சேஷ ஹோமம் எனப்படும். தம்பதிகள் கைகால்களை அலம்பி சரீர சுத்தி செய்து கொண்டு முன்போல் அநுக்ஞை பெற்று விக்நேஶ பூஜை ஸங்கல்பம் முதலியவைகளைச் செய்யவேண்டும். ஏற்கனவே ஸமித்தில் சந்தனமிட்டுப் பூவைச் சுற்றி தம்பதிகளுக்கு இடையே வைத்திருந்த விஶ்வாவஸு எனும் கந்தர்வனை, உதீர்ஷ்வாத: என்ற இரு மந்த்ரங்க ளால் எழுப்பவேண்டும்.

ஓ விஶ்வாவஸோ எழுந்திரும். இளம் பருவத்தி லிருந்து இதுவரை இவளிடம் வஸித்தீர். இப்பொழுது இவளுக்கு நான் பதியாகிவிட்டேன். விவாஹமாகாமல் பித்ருக்களுடைய வீட்டில் இருப்பவளும் உமக்குப் பங்காக அளிக்கப்பட்டவளுமான கன்யகையை அடைந்து நாங்கள் ஸதிபதிகளாக இருக்கும்படி அருள் புரியும்.

[கந்தர்வர் காமம் அதிக முள்ளவர். பெண்கள் பிறந்தவுடன் அவர்களது உடலில் வந்து தங்குகின்றனர். ருதுவாவதற்கு முன் விவாஹத்தைச் செய்து விதிப்படி அவர்களைப் பூஜித்து அவரிடம் உத்திரவு பெற்றால் அந்தப் பெண்ணை விட்டு விடுகின்றன. காலத்தில் விவாஹம் நடவாமல் பெண்கள் யுவதிகளாக ஆகிவிட் டால் அவள் உடலிலிருந்து கந்தர்வர் சிற்றின்பத்தை அனுபவிக்கின்றனர். பெண்கள் நல்ல பலமுள்ளவர்க ளானால் அது உடலில் தெரிவதில்லை. பலஹீனமானவர் கள், கந்தர்வர் காம சுகத்தை அனுபவிக்கும்போது ஒன்றும் அறியாமல் கட்டையாக விழுந்து விடுகின்றனர்.

பிறகு எழுந்ததும் கைகால் ஓச்சல் பலஹீனம் முதலியன உடலில் காணப்படுகின்றன. பேய் பிடிப்பதைச் சிலர் பார்த்திருக்கலாம். அதுபோல் கந்தர்வ சேஷ்டை இது. இதை நோய் எனக் கருதி சிகித்ஸை செய்வர். சிகித்ஸை யால் உடலுக்கு வலிவு ஏற்பட்டால் இந்த கந்தர்வ சேஷ் டையால் உண்டாகும் அதிர்ச்சி சிலருக்குத் தெரிவதில்லே. இவைகளே அறிந்தே மஹர்ஷிகள் ருது ஆவதற்குள் விவாஹம் என்ற முறையை அனுஷ்டித்து நமக்கும் உப தேசித்தனர்.

நான்கு நாளேய விவாஹத்திலே கூட சில ஆண்டு களாக வைதிக கார்யத்தில் ச்ரத்தை குறைந்து லௌகி கத்தில் " நன்ருக நடத்திஞர் " என்ற பெயரைப் பெறு வதற்கேற்றபடி மற்றவைகளில் ஊக்கமும் உத்ஸாஹமும் காட்டப்படுகிறது. ஆதலால் விவாஹ மந்த்ர அர்த் தத்தை விசாரிப்பதில்லே. இது எதற்காக, யாரை நாடி செய்யப்படுகிறது என்று ஸ்தூலமாகக்கூட அறிவதில்லே. ஒரு நாளே விவாஹத்தில், ஒரு வேளே விவாஹத்தில இது பற்றி பேசவே வேண்டாம். 4 நாள் விவாஹத்தில் அந்த கந்தர்வரை ஆவாஹநம் செய்த ஸமித்தை பாலி கைக்கு பக்கத்தில் மிக ஜாக்ரதையாக வைப்பர்.

வாத்தியார் ேஶஷ ஹோமத்திற்கு முன் கந்தர் வரை ஆவாஹனம் செய்த ஸமித்தை எடுத்து எறிந்து விடுவார். ஶ்ரத்தை உள்ள, பாபத்திற்கும் பயந்த லௌகிகர் கோபத்திற்கு அஞ்சாத சிலர் விதிப்படி அதைப்பார்த்து வரனே மந்த்ரம் கூறும்படி சொல்வர். பலர் யதோக்தமாக விவாஹத்தை நடத்தி வருவதால் அதிக ஶ்ரமமும் செலவும் இல்லாத இத்தகைய கர்மாக் களில் அக்கரை கொண்டு மற்றவரும் அனுஷ்டிக்கட்டும் என்பதற்காக சிறிது விரிவாக எழுத நேர்ந்தது.

இரு மந்த்ரங்களேக் கூறி கந்தர்வனே எழுப்பி அந்த ஸமித்தை அலம்பி வேறிடத்தில் வைத்து விட்டுக் குண்டத்திலுள்ள அக்னியை எதிரில் வைத்துக்கொண்டு பூர்வாங்கங்களேச் செய்து ப்ரதானமான எழு ஹோமங் களேச் செய்யவேண்டும்.

மந்த்ரார்த்தம்- ஓ ! அக்னே! நான் மணந்துகொண்ட இப் பெண்ணிடம் நானறியாமல் சில தோஷங்கள் இருக்கலாம். அவை எனக்கும், என் ஸந்ததிக்கும்,என் செல்வத்திற்கும் நாசத்தைத் தருபவைகள். அவைகள் இவளை விட்டு கற்புக்குக் கேடுவிளைவிக்கக் கருதும் துஷ்டர்களிடம் செல்லட்டும். இங்ஙனம் வாயுவும் ஆதித்யனும் ப்ரஜாபதியும இப் பெண்ணின் தோஷத்தை அகற்றி துஷ்டரிடம் கொண்டு சேர்க்கட்டும். அநுக்ஞை, பூமி, ஜலமுள்ள இடம், ஏரி, வீடு, பொருள், செல்வம், அந்தரிக்ஷம். ஆறு, கடல் முதலியவற்றிற்கு அபிமானிகளான தேவதைகளிடமும், ஸ்ரஸ்வான், இந்த்ரன் முதலிய தேவர்களிடத்திலும், என்னை எவன் வெறுக்கிருனே யாரை நான் வெறுக்கிறேனே அவர்களை அனுப்புகிறேன். அவர்கள் இவனைச் சாப்பிடட்டும். ஆறு ருது தேவர்களும், 12 மாஸ தேவதைகளும் என் சத்ருக்களை அழிக்கட்டும். மனஸ், மநோவ்ருத்தி, விரும்பிய பொருள், விருப்பம், அத்யயநம் ஓதி வைத்தல், அத்யயநம் செய்தல், அறியப்பட்ட பொருள்,அறிதல் முதலியவைகளுக்கு அதிஷ்டான தேவதையாக உள்ளவர் நமது சத்ருக்களை அழிக்கட்டும்.

இந்த ஹோமங்கள் ஆனபிறகு இந்த கர்மாவை ஸம்ருத்தி உள்ளதாகச் செய்ய ஜயாதி ஹோமம் செய்து, அக்நிக்கு மேற்கு புறத்தில் கன்யகையை உட்காரவைத்து ஹோமம் செய்த மிகுதி நெய்யைக்கொண்டு பெண் தலையில் பூஸ்வாஹா, புவஸ்வாஹா, ஸுவஸ்வாஹா, ஒரு ஸ்வாஹா என்று 4 பொட்டு நெய்யை விட வேண்டும். இதனுல் 3 லோகத்திற்கும் அதிஷ்டான தேவதைகள் ஸந்தோஷமடைந்து கன்யகையைப் பதியுடன் காப்பாற்றுவார்கள்.

பிறகு கன்யகை கணவனை " அபஶ்யந்த்வா " என்ற மந்த்ரத்தைக்கூறி பார்க்கவேண்டும்.- தவத்தினுல் ப்ராம்மணன் ஆனவரும் தவத்தினுல் ஸம்பத்தைப் பெற்றவருமான உம்மை மனதால் பார்க்கிறேன். இவ்வீட்டில் என்னுடன் ஸந்ததி ஸம்பத் முதலியவைகளை அனுபவித்துக் கொண்டு நீரே புத்ர ரூபமாக என்னிடம் பிறப்பீராக.

வரன் வதுவைப் பார்த்துக் கூறும் மந்த்ர அர்த்தம்:—" ருது காலத்தில் புத்ர உற்பத்தியை நாடி கர்ப்பாதானத்தை நாடுகின்றவளாக நினைக்கிறேன். நன்கு இல்லற இன்பத்தை அனுபவி. நீயே குழந்தை ரூபமாக இரு" ஹோமத்தில் மிகுந்த ஆஜ்யத்தைத் தன் விரலால் தொட்டுத் தன் மார்பிலும். கன்யகையின் மார்பிலும் தடவ வேண்டும். அப்போது கூறும் மந்த்ரத்தின் கருத்து: " எங்கள் இருவர்களுடைய ஹ்ருதயத்தையும் விச்வே தேவர், ஜலதேவதை, வாயு, தாதா ஆகியவர் பரஸ்பரம் ஸ்நேஹம் உள்ளதாகச் செய்யட்டும். ஸரஸ்வதி தேவி நாங்கள் அன்யோன்யம் அன்புடன் பேசிக் கொண்டிருக்கும்படி அருள் புரியட்டும், ஸந்தானத்தை உண்டு பண்ணும் ப்ரஜாபதி என் உடலில் வந்திருக்கட்டும். ரூபத்தை அளிக்கும் த்வஷ்டா, விஷ்ணு முதலிய தேவர்களுடன் என் சரீரத்தில் தங்கட்டும். இந்த்ரன் தன் நண்பர்களான ஸமஸ்த தேவர்களுடன்கூட என்னிஷ்டத்தைப் பூர்த்தி செய்துகொண்டு இவளிடம் இருக்கட்டும். தேவர்களுடைய அருளால் நான் குழந்தைகளுக்குத் தந்தையாக வேண்டும். ப்ரஜாபதி ப்ரஜைகளைத் தரட்டும். கிழத்தனம் வரும்வரை யாதொரு அவலக்ஷணமும் இல்லாமல் பத்நி என் வீட்டில் வஸிக்கட்டும். இங்ஙனம் மனிதர்க்கும் பசுக்களுக்கும் அவள் ஸுகத்தை அளிக்கட்டும். பூஷா என்ற தேவன் ஸந்ததி வ்ருத்தியாகும்படியான ஶக்தி எங்கள் இருவர்க்கும் உண்டாகும்படி செய்யட்டும். எங்கள் இருவர்க்கும் சிற்றின்பத்திலும் யாதொரு கஷ்டமுமில்லாதபடி ரக்ஷிக்கட்டும்.

[சில மந்த்ர அர்த்தத்தைப் பார்த்தால் ருதுவானவள் விஷயமாக சொல்லப்படுவதுபோல் தோன்றும். அது பினனர், ருதுவானபின் பயனைத் தரட்டும் என ப்ரார்த்திப்பதாகும். சில மந்த்ர அர்த்தம் கேவல வாழ்க்கையையும் அதற்கேற்ற ஸாதநங்களையும் பற்றியே வேண்டுவதாகத் தோன்றும். ஶுத்த, ஸுகமான வாழ்க்கையால் பேரின்பம் பெறலாமென்பதே அதன் கருத்தாம்.]

பிறகு விவாஹத்திற்கு அங்கமாக நாந்தீ ச்ராத்தம் ஹிரண்ய ரூபமாகச் செய்து, அதற்கு அங்கமாக புண்யாஹ வாசனம் செய்யவேண்டும். அக்னி உபஸ்தானம் செய்து " எங்களுக்குத் தக்க காலத்தில் தீர்க்காயுஸ்ஸான புத்ரன் பிறப்பதற்காக பலதான தாம்பூலதானம் செய்கின்றேன் " என்று ஸங்கல்பித்து உமாமஹேச்வர. லக்ஷ்மீநாராயண வடிவமாகக் கருதி, ஆஸனம் முதலிய உபசாரங்களைச் செய்து, மனைவி தீர்த்தம்போட, தக்ஷிணையுடன், அனைவர்க்கும் பலதானம் செய்யவேண்டும். அந்த மந்த்ரத்தின் கருத்து: "பலமானது ஸதா தானம் செய்பவருக்கு இஷ்டத்தைப் பூர்த்தி செய்கிறது. அது புத்ர பௌத்ர வ்ருத்தி, செல்வம், நன்மை, புஷ்டி, முதலியவைகளை எனக்குத் தரட்டும்".

அதன் பின் தாம்பூலந்தரித்துக் கொள்வதற்கு ஸங்கல்பம், க்ரஹப்ரீதி செய்துகொண்டு, மைத்துனன் தாம்பூலந்தர தம்பதிகள் முதல்முதல் வெற்றிலை பாக்குப் போட்டுக்கொள்ளவேண்டும். பிறகு மஹத் ஆசீர்வாதம். வேத மந்த்ரங்களைக் கூறி ப்ராம்மணர்கள் மங்களாக்ஷதையை அளிக்க தம்பதிகள் அதை வஸ்த்ரத்தால் வாங்கி நமஸ்காரம் செய்து பெரியோரிடம் அக்ஷதையை வாங்கிக் கொள்ளவேண்டும். அம்மான் பாட்டனுர், நண்பர்கள் நன்கொண்டயளிப்பது, லௌகிக ஆசீர்வாதங்கள், தம்பதிகளுக்கு த்ருஷ்டி தோஷம் அகல ஹார்த்தி, ஸம்பந்திகளை வழியனுப்ப கட்டுசாதம் முதலியன லௌகிக காரியங்களாகும்.

விவாஹம் முற்றிற்று.

---

## ப்ராம்மண போஜனம்

குறிப்பு:— ஸீமந்தம், பும்ஸவனம், நாமகரணம் இவைகளில் அநேகம் ப்ராம்மணர்களுக்கும், சௌளத்தில் 50, உபநயனத்தில் 100, விவாஹத்தில் தம் சக்திக்குத் தகுந்தபடியும், ஆதானத்தில் 100 ப்ராம்மணர்களுக்கும் போஜனம் செய்விக்க வேண்டும் என்பது சாஸ்த்ரம்.

## பாக - ஹவிர் - யக்ஞங்கள்

ஸம்ஸ்காரங்கள் நமது ஜீவனிடம் உள்ள மலங்களை அகற்றி, நம்மை ப்ரும்மலோகம் அல்லது ப்ரும்மத்துடன் சேர்க்கின்றன. இவைகளில் சில நம் பெற்றோர்களால் செய்யத் தக்கவை. சில நாமே செய்யத் தக்கவை.

கர்ப்பாதானம், பும்ஸவனம், ஸீமந்தம், ஜாத கர்ம, நாம கரணம், அன்ன ப்ராஶனம், சௌளம் உபநயனம், ப்ரஜாபத்ய — ஸௌம்ய — ஆக்னேய - வைஶ்வதேவ வ்ரதங்கள் ஸ்னானம், விவாஹம், தேவ—பித்ரு—பூத—மனுஷ்ய—ப்ரும்ம—எனும் பஞ்ச மஹா யக்ஞங்கள் அல்லது வைஶ்வதேவம். இவை 19. இவைகளைக் கூறினோம்.

பாக யக்ஞங்கள் 7. அஷ்டகா, ஸ்தாலீபாகம், பார்வணம், ஆக்ர ஹாயணீ, ஶ்ராவணீ, சைத்ரீ, ஆஶ்வயுஜீ.

அஷ்டகா— மாக மாஸத்தில் அஷ்டகாதி ஶ்ராத்தம் செய்ய வேண்டும். முதல் நாள் இரவு ஔபாஸனம் செய்து, ஒரு வகையான அடைபோல் செய்து, அஷ்டகா தேவதைக்கு ஒரு ஹோமமும், ஸ்விஷ்டக்ருத்திற்கு ஒரு ஹோமமும் செய்யவேண்டும். அதன் மிகுதியை, மறு நாள் ப்ராம்மணர்களாக வரிக்கும் எட்டுபேர்களுக்கும் அளிக்க வேண்டும். அஷ்டகா ஶ்ராத்தத்தில் விஶ்வே தேவர் இருவர். பித்ரு வர்க்கம் மூவர், மாத்ரு வர்க்கம் மூவர், ஆக எட்டு ப்ராம்மணர்களை வரித்து, பார்வண ஶ்ராத்தம் போல் சில மாறுதல்களுடன் ஶ்ராத்தம் செய்ய வேண்டும்.

அஷ்டமி இரவு ஔபாஸனம் செய்து, விஶ்வேதேவர்களுக்காக ஒருவர், பித்ரு-பிதாமஹ-பிரபிதாமஹருக்காக ஒருவர், மாத்ரு-பிதாமஹி ப்ரபிதாமஹிக்காக ஒருவர், மாதாமஹ வர்க்கத்திற்காக ஒருவர், ஶ்ராத்தத்தை ரக்ஷிக்கும் விஷ்ணுவுக்காக ஒருவர், ஆக ஐந்து ப்ராம்மணர்களை வரித்து, நவமியன்று சில மாறுதலுடன் பார்வண ஶ்ராத்தம் போல் செய்ய வேண்டும்.

அஷ்டகைக்கு ப்ரதிநிதியாக தத்யஞ்ஜலி (दध्यञ्जलि) ஹோமம் ஒன்றைச் செய்ய வேண்டும். அதில் இரு கரங்களாலும் தயிரை எடுத்து. அஷ்டகா தேவதைக்கு ஒரு ஹோமம், ஸ்விஷ்டக்ருத்துக்கு ஒரு ஹோமம் ஆக இரு ஹோமங்களைச் செய்ய வேண்டும். மறுதினம் அன் வஷ்டகை செய்யவேண்டும்.

ஸ்தாலீபாகம்—இது பௌர்ணமிக்கு அடுத்த ப்ரதமை யிலும் அமாவாஸ்யைக்கு அடுத்த ப்ரதமையிலும் மாதா மாதம் செய்ய வேண்டியது. ஆக்ராயண, ஸர்ப்ப பலி முதலியவைகளுக்கு இதுவே ப்ரக்ருதியாகும். ஔபாஸன அக்னியிலேயே ஸ்தாலியில் சருவை வைத்து அக்னிக்கும் ஸ்விஷ்டக்ருத்துக்கும் ஒவ்வொரு ஹோமமும் செய்ய வேண்டும்.

பார்வணம்— இதை மாஸி ஶ்ராத்தம் என்றும் கூறு வார்கள். இதுதான் எல்லா ஶ்ராத்தங்களுக்கும் ப்ரக்ருதி யானது. ப்ரக்ருதி என்றால் பூர்ணம் என்று பொருள். இதைப் போலவே மற்றவைகளைச் செய்ய மேற்கோளாக இருக்கின்றது. இதற்கு மாறானது விக்ருதி எனப்படும். சில மாறுதல்களுடன், மாறுதல்கள் இல்லாத விடத்தில் ப்ரக்ருதியைப் போல் செய்வது என்று பொருள்.

ஶ்ராவணீ—ஆவணி மாதம் பௌர்ணமியில் செய்ய வேண்டிய கர்மா இது. இதை ஸர்ப்ப பலி என்றும் கூறுவர். ஆவணி பௌர்ணமி இரவில் சரு ஆஜ்ய ஹோமம் செய்து பலாஶ புஷ்பங்களை இரு கரங்களாலும் ஹோமம் செய்து, ஸர்ப்பங்களுக்கு புற்று அல்லது சுத்த மான விடத்தில் பச்சை அரிசி மாவினால் கோலம் போல் போட்டு, ஸர்ப்ப மந்த்ரங்களைக் கூறி, உபஸ்தானம் செய் வது ஸர்ப்ப பலியாம். இங்ஙனம் ப்ரதிதினமும் மார்கழி மாத பௌர்ணமி வரை செய்து உத்ஸர்ஜனம் செய்ய வேண்டும்.

ஆக்ரஹாயணீ—ஶ்ராவண பௌர்ணமியில் ஆரம்பித்த ஸர்ப்ப பலியை மார்கழிமாத பௌர்ணமியில்; ஆவணி மாதத்தில் செய்தது போல் ஹோமங்களைச் செய்து பூர்த்தி செய்யவேண்டும். இது ஆவணி அவிட்டத்தில்

ஆரம்பித்த வேதத்தை தை மாத பௌர்ணமியில் விஸர்ஜ னம் செய்வது போல் அமைந்துளது.

அன்றியும், ஸர்ப்பங்களே அடித்து அதனுல் ஸர்ப்ப சாபத்தைப் பெற்று ஸந்ததியில்லாதவர்கள் ஸர்ப்ப ஶாந்தி செய்வதுபோல் ஸர்ப்ப பலி செய்தால், ஸர்ப்ப சாபமாயிருந்தால் அது அகன்று உடனே ஸந்தானம் உண்டாகும். அதனுல், இது ஸம்ஸ்காரமான நித்ய கர்மாவானுலும், காம்ய கர்மாவைப் போல் காமத்தை யும் பூர்த்தி செய்யும்.

சைத்ரீ—சித்ரை மாதத்தில் செய்யவேண்டிய இதை ஈஶான பலி என்றும் கூறுவார்கள், நான்கு வீதிகள் கூடுமிடத்தில் ஈஶான தேவதையை ஆராதிப்பதால் இதை ஈஶான பலி என்பார்கள்.

ஆஶ்வயுஜீ—கார்த்திகை மாஸத்தில் பௌர்ணமியில் செய்யவேண்டிய கர்மா இது. இதை ஆக்ரயண ஸ்தாலீ பாகம் என்றும் கூறுவார்கள். இதில் ஶ்யாமாகம் என்ற தான்யத்தைக்கொண்டு பாகம் செய்து ஹோமம் செய்ய வேண்டும்.

இந்த ஏழு யக்ஞங்களேயும் ஸுலபமாகச் செய்ய லாம். இவை ஹவிர்யக்ஞம் போலவோ, ஏழு ஸோம ஸம்ஸ்தை போலவோ கடினமானவை அல்ல. இந்த ப்ரயோகங்களே பூர்ணமாய் அச்சிட ஒரு பண்டிதரை ஸ்ரீ ஜகத்குரு ஸ்ரீ காம கோடி பீடாபதி ஸ்வாமிகள் அவர்கள் தூண்ட, அச்சிட்டவர் அதை வெளியிடுவதற்குள் மறைந்ததால் இவைகளேப் பூர்ணமாக எழுத முடிய வில்லே. இதில் ஶ்ரத்தை கொண்டு, கர்மானுஷ்டானம் செய்ய அக்கரை யுள்ளவர் தெரிவித்தால், ப்ரயோகம் அனுப்பப்படும்.

ஹவிர்யக்ஞங்கள் 7. அக்னி ஆதானம், அக்னி ஹோத் ரம், தர்ஶ பூர்ணமாஸம், ஆக்ரயணம், சாதுர்மாஸ்யம், நிரூட பஶுபந்தம், ஸௌத்ராமணி.

ஸோம ஸம்ஸ்தைகள் 7. அக்னிஷ்டோமம், அத்யக்னி ஷ்டோமம், உக்த்யம், ஷோடஶி, வாஜபேயம், அதி ராத் ரம், அப்தோர் யாமம்.

ஆக இவைகளே 40 ஸம்ஸ்காரங்கள். ஔபாஸனம், அக்னி ஹோத்ரம், வைஶ்வ தேவம், இவை நித்யம் செய்ய வேண்டியவைகள்.

கார்ஹ பத்யம், ஆஹவனீயம், தக்ஷிணாக்னி என்ற மூன்று அக்னிகளை ஆரம்பிப்பது அக்னி ஆதானம். நித் யம் காலை மாலைகளில் ஔபாஸனம் போல் அவைகளில் ஹோமம் செய்வது அக்னி ஹோத்ரம். அமாவாஸ்யை பூர்ணிமா இவ்விரண்டுகளுக்கு அடுத்த நாள் ப்ரதமையில் செய்யும இஷ்டி தர்ஶ பூர்ண மாஸம் என்றே கூறப்படு கிறது. அது தர்ஶ பூர்ண மாஸ ஸ்தாலீ பாகம் போன் றது. ஶ்யாமை தான்யத்தைக் கொண்டு செய்யும் இஷ்டி ஆக்ரயணம். சாதுர் மாஸ்யம் என்பது பல இஷ்டிகள் சேர்ந்த ஒரு கர்மா. நிரூட பஶுபந்தம், ஸௌத்ராமணி இவை ஆண்டுக் கோர்முறை செய்யும் கர்மா. இவ்வேழு ஹவிர்யக்ஞங்களையும் யாகம் செய்தவர்களே செய்கின் றனர். ஏழு ஸோம யக்ஞங்களை வெகு வெகு சிலரே செய்கின்றனர். கர்ப்பாதானம் போல் ஒவ்வொரு ப்ராம்மணனும் அவஶ்யம் செய்ய வேண்டிய முக்ய ஸம்ஸ்காரங்கள் இவை. நம்மை உயர்ந்த ப்ராம்மணனாகச் செய்து உலகிற்கும் நல்ல மழை தந்து, முடிவில் நம்மை முக்திக்குத் தயாராக்குகின்றன. இந்த ஸம்ஸ்காரங்களை ஜாதகாதிகளைப் போல் விவரிப்பதானால் பல பக்கங்கள் ஆகும். ஆதலின் அவைகளைப் பற்றி அதிகம் எழுதவில்லை.

ஒரே பிறவியில் இந்த நாற்பது ஸம்ஸ்காரங்களும் ஒருவ ரால் செய்யப்பட்டால் அவர் மனம் நிர்மலமாகி எட்டு ஆத்ம குணங்கள் தோன்றும்.

---

## எட்டு ஆத்ம குணங்கள்

1. தயை—எட்டு ஆத்ம குணங்களில் இது முதலாவது. முக்யமானது. ஸர்வ ப்ராணிகளிடமும் அன்பு காட்டுவது. பிறருக்குத் துன்பம் வந்தபோது இரக்கம் கொண்டு "ஐயோ, பாவம்" என வருந்தி தன்னைப் போல் கருதி முடிந்தவரை உதவி செய்வது. அவர்களுக்கு ஹிதமாய்ப் பேசுவது. அவர்கள் க்ஷேமத்தை நாடுவது. அவர்களுக்குத் துன்பம் நீங்கியபோது ஸந்தோஷப்படுவது. இவைகளும், இவை போன்ற செயலும் தயை என்பதாம்.

2. க்ஷாந்தி அல்லது க்ஷமா— நமக்கு, நம்மைச் சார்ந்தவரோ, அன்யரோ தீங்கு செய்தால், நம்மைத் திட்டினுல், அடித்தால் அல்லது வேறு எந்த வகையில் கெடுதல் செய்தால் அவர்கள் மீது கோபம் கொள்ளாமலும், அவர்களைத் திட்டாமலும், அடிக்காமலும், மனதினுலும், வாக்கினுலும், உடலினுலும் பொறுப்பது க்ஷமா எனப்படும் தீங்கு செய்தவருக்கு உடனே பதில் தீங்கு செய்ய நினைப்பதும், செய்வதும் மனித குணம். நமது கையே நம் கண்ணைக் குத்திவிட்டால், நாம் யார் மீது கோபம் கொள்கிறோம்? ஒருவன் நம்மீது கல்லைவிட்டு எறிந்தால், அந்தக் கல்லை நாம் சிக்ஷிப்பதில்லை, கல்லை எறிந்தவனையே சிக்ஷிக்கிறோம். அதேபோல் நாம் செய்த வினையே நமக்குத் தீங்கை பிறர் மூலமாகத் தருகிறது என்று எண்ணி, பதில் செய்யாமல் இருக்கவேண்டும்.

3. அநஸூயா—அஸூயை இல்லாமல் இருப்பது அநஸூயா. ஒருவர் பூர்வ ஜன்ம கர்மாவினுல் சிறந்த தனிகராகவோ, தர்ம ஶீலராகவோ, நல்ல போகத்தை அனுபவிப்பவராகவோ, அல்லது சிறந்த வேதாந்தியாகவோ இருந்தால், அதைக் கண்டு சிலர் மனம் ஸஹிக்காது. அவரிடம் த்வேஷம் உண்டாகும். அவரிடமுள்ள நற்குணங்கள் மீது குற்றங் கூறுவர். ஒருவர் கோவில் கட்டினுல் "ஊர் பணத்தைக் கொள்ளை அடித்தான். அந்த கெட்ட பெயர் மறைவதற்காக இதைச் செய்கிறுன்"

என்பர் அஸூயை உள்ளவர். அப்படி இல்லாமல் நல்ல வாஸனையால் நற்கர்மா செய்கிருன் என்று அதை ஆமோதிக்க வேண்டும்.

4. ஶௌசம்—ஶுசியாக இருத்தல் என்பது இதன் பொருள். உடல், வாக்கு, மனம் என்ற மூன்றும் ஶுத்தமாக இருக்கவேண்டும். அக்ரமமாகவோ, பிறரை ஏமாற்றியோ பணம் ஸம்பாதிக்கக்கூடாது. வாங்கிய பொருளை குறித்த காலத்தில் தவருமல் திருப்பித் தரவேண்டும். தர்மத்திற்காக வஸூலான பணத்தை ஸொந்த கார்யத்திற்கு உபயோகிக்கக்கூடாது. மனதால் கூட பிறர் பொருளைத் தான் அனுபவிக்கவேண்டும் என எண்ணக் கூடாது. இது மனஶ் ஶௌசம். பிறரை நிந்திக்காமல், பொய் சொல்லாமல், எல்லோருக்கும் ப்ரியமாகவும், ஹிதமாகவும் பேசுவது வாக் ஶௌசம். எச்சில் தீட்டு, விழுப்பில்லாதிருத்தல், அநாசார இடத்திற்குப் போகாமை, அஶுத்த உணவை உண்ணுமை முதலியன ஶரீர ஶௌசம்.

5. அநாயாஸம் — ஆயாஸப்படாமை அநாயாஸம் எனப்படும். உடலுக்கும் பொருளுக்கும், பிறருக்கும் அளவு கடந்த ஆயாஸத்தை (ஶ்ரமத்தை) கொடுக்க கூடிய எந்தக் கார்யத்தையும் செய்யக்கூடாது. பசி துடிக்கத் துடிக்க, தீர்த்தம்கூட அருந்தாமல் உபவாஸம் இருத்தல், வியர்வை சொட்ட கைகால் தளர்ந்து போகும்படி கடுமையான வேலை செய்வது வழி நடப்பது. ஒரு கார்யத்தைச் செய்ய தன் சக்திக்கு மீறிய பொருளைச் செலவு செய்வது போன்ற ஆயாஸகரமான கார்யங்களைச் செய்யக்கூடாது.

6. மங்களம் — அழுக்கில்லாத, ஆடம்பரமில்லாத அவஶ்யம் வேண்டிய ஆடை, ஆபரணங்களை அணிவது, நெற்றிக்குத் திலகமிட்டு சிறித்த முகமாகவே இருப்பது, ஶுபமான சொற்களையே கூறுவது சிறந்த ஆசாரங்களைக் கைகொள்வது முதலியன மங்களமாம் துன்பம் வந்தபோது, ' ஐயோ ", "எழவு" இது போன்ற சொற்களைக் கூருமல், " ராம, ராம , " சிவ, சிவ ". " க்ருஷ்ண, க்ருஷ்ண " என பகவன் நாமாக்களைக் கூறவேண்டும்.

புருஷர் அநாவஶ்யமாக கேஶத்தை வளர்க்கக்கூடாது. ஒரு க்ஷணங்கூட நெற்றிக்கிடாமலோ, கச்சம் இல்லாமலோ இருக்கக்கூடாது. வெகு நேரம் ஈற வேஷ்டியைத் தரித்திருக்கக்கூடாது.

7. அகார்ப்பண்யம் — கார்ப்பணயம் இல்லாமை. என்ன கஷ்டம் வந்தாலும், தைர்யமாக இருப்பது. ஏழ்மையிலும், ஶக்திக்கு ஏற்ற அளவு ஸத்பாத்ரத்தில் தானம் செய்வது, ஜன்மாவைப் பாழாக்காமல் ஜீவனுக்குப் பல வழிகளிலும் நன்மை தேடுவது—இவைகள் போன்றவை அகார்ப்பண்யமாகும்.

8. அஸ்ப்ருஹா — ஸ்ப்ருஹை (பற்று) இல்லாமல் இருத்தல். தன் பொருளிலும். பிறர் பொருளிலும், உடலிலும், மற்றவைகளிடமும் ஆசை வைக்கக்கூடாது. கிடைத்ததைக் கொண்டு ஸந்தோஷப்படவேண்டும். பணக்குறைவாலோ, தனக்கோ அல்லது தன்னைச் சார்ந்தவர்களுக்கோ ஏற்படும் துன்பத்தினாலோ, குறையாலோ, துன்பப்படாமலிருத்தல் வேண்டும். அன்யரிடம் உள்ள அழகிய ஒரு பொருளைப் பார்த்தவுடன், அது போல் நமக்கு ஒன்று வேண்டும் என்று விரும்பக்கூடாது.

இத்தகைய எட்டு குணங்களையும் தேவகுணம் என்று கூறாமல், ஆத்ம குணம் என்பதால், இவை ஆத்ம ஸ்வரூபத்தை அடைவதற்கேற்ற குணம் என்றும், இவை ஆத்மாவிற்கு இயற்கையானது என்றும் தெரிகிறது.

நாற்பது ஸம்ஸ்காரககள் பூர்த்தி.

---

# அனுபந்தம்

## (1) புண்யாஹ வாசனம்

இடத்தை அல்லது ஒரு பொருளைச் சுத்தம் செய்வதற்காக ஏற்பட்ட வேதோக்த கர்மா இது. காயத்ரியைக் கூறி ப்ரோக்ஷிப்பதும், "அபவித்ர: பவித்ரோவா ஸர்வா வஸ்தாம் கதோபிவா — யஸ்மரேத் புண்டரீகாக்ஷம் ஸபாஹ்யாப் யந்தரஸ் "ஶுசி:" — என்பதைக் கூறி ப்ரோக்ஷிப்பதும் ஸாமான்யமானது. சிறிது அதிகமாக ஶுத்தியை விரும்பினால் புண்யாஹ வாசனம் செய்யவேண்டும். ஶுத்திக்காக மாத்ரம் அல்லாமல் சில கர்மாக்களுக்கு அங்கமாகவும் கூறப்படுகிறது.

ஶுத்தமாகவும் ஸமமாகவும் உள்ள இடத்தில் பசுஞ் சாணியால் நான்கு மூலை சதுரமாக மெழுகி, கோலமிட்டு, அதன் மீது நெல்லைப் பறப்பி, அதன்மேல் நுனி வாழை இலையை வடக்கு முகமாக அமைத்து, அதன்மீது அரிசியைப் பறப்பி, அதில் தாமரை புஷ்பம்போல் எழுதி, கிழக்கு நுனியாக தர்ப்பையை போடவேண்டும். அதன் மேல் தீர்த்தத்துடன் கலசத்தை வைத்து, அதற்குமேல் கூர்ச்சம், மாவிலை, தேங்காய் முதலியவைகளை வைத்து, கிழக்கு அல்லது வடக்கு முகமாக அமர்ந்து, ஸங்கல்பம் செய்யவேண்டும்.

பவித்ரம் அணிந்து, தர்ப்பத்தின்மேல் அமர்ந்து, (இப்பொழுது உட்கார்ந்தபின் ஆஸனத்திற்காக தர்ப்பத்தைக் காலின் கீழ் போடுவது வழக்கம்) ஶுக்லாம் பரதரம்— ஶாந்தயே என குட்டிக்கொண்டு, ப்ராணாயாமம் செய்து, ஸங்கல்பம் செய்யவேண்டும். ஶுபே ஶோபனே-ஶுபதிதௌ ஆத்ம ஶுத்யர்த்தம், ஸர்வ உபகரண ஶுத்யர்த்தம் ஶுத்தி புண்யாஹம் வாசயிஷ்யே என்று கூறி, கலசத்தில் வருணனை. இமம்மே வருண, தத்வா யாமி என்ற இரு மந்த்ரங்களால் ஆவாஹனம் செய்து ஷோடஶ உபசார பூஜை செய்யவேண்டும்.

நான்கு திக்குகளிலும் நான்கு ப்ராம்மணர்களைப் புண்யாஹ ஜபம் செய்வதற்காக அமர்த்த வேண்டும்.

"உங்கள் உத்திரவு பெற்று. மந்த்ரங்களைக் கூறும்படி வேண்டுகிறேன்." இப்படி பல உத்திரவுகள் கேட்க அவர்கள் தக்க பதில் கூறுவர். பிறகு, "ததிக்ராவிண்ண: ஹிரண்யவர்ணா :- புனாது" வரையும், "தச்சம்யோ" என்ற ஶாந்தியையும் ஜபிக்க வேண்டும். வருணனை யதாஸ்தானம் செய்து. ப்ராம்மணர்கள் "தேவஸ்யத்வா" என்ற மந்த்ரங்களால் யஜமானன், பத்னி, புத்ரன். புத்ரி, பூஜா த்ரவ்யங்கள், வீடு முதலியவைகளை ப்ரோக்ஷிப்பர். பிறகு அந்த தீர்த்தத்தைச் சாப்பிடவேண்டும். சாப்பிடுவதற்காக, ப்ரோக்ஷிப்பதற்கு முன்பேயே, தீர்த்தத்தை எடுத்து வைக்கவேண்டும். ப்ராம்மண தக்ஷிணை தந்து. பவித்ரத்தை அவிழ்த்து, ஆசமனம் செய்யவேண்டும்.

இந்த மந்த்ரங்கள் ஸகல தேவதைகளும் ஜலத்தின் மூலமாக நம்மையும் பூஜாத்ரவ்யங்களையும் ஶுத்தமாகச் செய்யட்டும் என்று பொருள் கொண்டவை.

### (2) முகாந்தம் அல்லது ஆஜ்ய பாகாந்தம்

தேவர்களுக்கு அக்னியே முகம். அவர் மூலமாக மந்த்ரங்களைக் கூறி ஹோமம் செய்தால்தான் அது தேவர்களிடம் செல்லும். அந்த அக்னியும் ஸாதாரண தீயாக இல்லாமல். விதிப்படி ப்ரதிஷ்டை செய்தால்தான் தேவர்களிடம் ஹவிஸ்ஸைச் சேர்க்க முடியும். அதனால், முதலில் யாக பூமியை உழுவதுபோல் "ப்ராசீ: பூர்வம் உதக் ஸக்குஸ்தம் தக்ஷிணாரம்பம் ஆலிகேத். அத உதீசீ: புரஸ் ஸக்குஸ்தம் பஶ்சிமாரம்பம் ஆலிகேத்" என ஸ்மித்தால் கிழக்காக மூன்று கோடுகளும், வடக்காக மூன்று கோடுகளும் போடவேண்டும். இது குறுக்கு நெடுக்காக உழுவது போலாம். இதை உபாத்யாயர் கூறும்போது. மந்த்ரம் என நினைத்துச் சிலர் இதையும் கூறுவர். அது அவஶ்யமில்லை. பிறகு. மூன்று வ்யாஹ்ருதிகளைக் கூறி, அக்னியை ப்ரதிஷ்டை செய்யவேண்டும். அக்னி கொண்டு வந்த பாத்ரத்தில் அக்ஷதையுடன் தீர்த்தத்தை விடவேண்டும். கிழக்கே ஒரு பாத்ரத்தில் தீர்த்தத்தை வைக்கவேண்டும். அது அஸுரர் வராமல் தடுத்து தேவர் மாத்ரம் வர வழி அளிக்கும். மற்ற மூன்று பக்கங்களிலும்

யரிதி என்ற ஸமித்தும், பரிஸ்தரணம் என்பவைகளும் நாம் செய்யும் ஹோமத்தை அஸுரர் கொண்டுபோகா வண்ணம் ரக்ஷிக்கும் வேலி போலாம்.

அக்னியை குழாயினால் ஊதி, ஜ்வலிக்கும்படி செய்து கிழக்கு நுனியாகவும், வடக்கு நுனியாகவும் தர்ப்பங்களைப் போடவேண்டும். இதே பரிஸ்தரணம் எனப்படும். தெற்கிலிருந்து வடக்கே போடும் தர்ப்பமானது, தென் புரமாகப் போடும் கிழக்கு நுனியாக தர்ப்பத்தின் மேலும் வடக்கு புரமுள்ளது கீழாகவும் இருக்கவேண்டும். அக்னிக்கு வடபுரத்தில் பாத்ரங்களை வைப்பதற்காக கிழக்கு நுனியாக தர்ப்பங்களைப் போட்டு, அதன்மீது ப்ரதான தர்வீ, ஆஜ்ய ஸ்தாலீ. இதர தர்வீ, ப்ரோக்ஷணீ என்ற நான்கு பாத்ரங்களை இரண்டு இரண்டாகச் சேர்த்து கவிழ்த்து வைக்கவேண்டும்.

ஸ்தாலீ பாகம் முதலியவைகளில், ப்ரதான தர்வீ, ஆஜ்யஸ்தாலீ, ப்ரோக்ஷணீ பாத்ரம், ப்ரணீதா பாத்ரம், இதர தர்வீ, இத்மம் இவைகளை மேற்கிலிருந்து கிழக்கு வரை வைக்கவேண்டும். ஶ்ராத்தம், ஸீமந்தம் முதலியவைகளில், அதில் உபயோகமாகும் சரு பாத்ரம், பன்னிமுள் முதலியவைகளையும் அங்கு வைக்க வேண்டும். அதில் வைத்து. ஸம்ஸ்காரம் செய்யாததை ஹோமத்தில் உபயோகிக்கக் கூடாது.

ப்ரோக்ஷணீ பாத்ரத்தை எடுத்து, நமக்கும் அக்னிக்கும் நடுவில் வடக்கு நுனியாகப் போட்டிருக்கும் தர்ப்பத்தில் வைக்கவேண்டும். ஹோமத்திற்குரிய பாத்ரங்களைப் பூமியில் வைக்காமல் ஆஸனத்தில் வைக்கவேண்டும். ப்ரோக்ஷணீ பாத்ரத்தில் அக்ஷதையைப் போட்டு, அதில் தீர்த்தத்தை விட்டு, பவித்ரத்தினால் கிழக்கு முகமாக மூன்று முறை அறைப்பதுபோல் தீர்த்தத்தைச் சுத்தம் செய்ய வேண்டும். கவிழ்த்திருந்த பாத்ரங்களை நிமிர்த்தி. இந்த தீர்த்தத்தைக் கொண்டு பவித்ரத்துடன் மூன்று முறை எல்லா ஜலத்தாலும் ப்ரோக்ஷிக்க வேண்டும். இது பாத்ர ஶுத்தியாம். அந்த ப்ரோக்ஷணீ பரத்ரத்தை வலது புரம் வைத்து, ஆஜ்ய ஸம்ஸ்காரம்

செய்யவேண்டும். நமக்கும் அக்னிக்கும் நடுவில் உள்ள தர்ப்பத்தில் ஆஜ்ய பாத்ரத்தை வைத்து அதனுள் பவித்ரத்தை வைத்து உருகிய நெய்யை அதில் விட வேண்டும்.

அக்னிக்கு வடக்கு புரத்தில் ஒரு விரட்டியில் (வரளி யில்) அக்னியை எடுத்து வைத்து. அதன்மேல் இந்த ஆஜ்ய பாத்ரத்தை வைத்து. ஒரு தர்ப்பத்தைக் கொளு த்தி அதன்மீது காட்டி, வடக்கு பக்கமாய் எறிய வேண் டும் இரண்டு தர்ப்ப நுனிகளை அறுத்து. நனைத்து, ஆஜ்ய பாத்ரத்தில் போட்டு; மறுபடி ஒரு தர்ப்பத்தைக் கொளு த்தி மூன்று முறை அதைச்சுற்றி எறிய வேண்டும். ஆஜ்ய பாத்ரத்தை வட புரமாய் இறக்கி, தணலை அக்னியுடன் சேர்த்து, ஆஜ்ய பாத்ரத்தை நம் எதிரில் வைத்து, வடக்கு நுனியான அந்த பவித்ரத்தால் முன்னும் பின்னுமாக மூன்று முறை அறைக்க வேண்டும். அந்த பவித்ர முடிச்சை அவிழ்த்து, ஜலத்தைத் தொட்டு அதை அக்னி யில் போடவேண்டும். இது ஆஜ்ய ஸம்ஸ்காரம். இப்படிச் செய்த நெய்யால்தான் ஹோமம் செய்யவேண்டும். இதைப் பாக்கி வைத்துக்கொண்டு, அதிக நெய் வேண்டு மானால் இதில் கலந்துகொள்ளலாம்.

ஹோமம் செய்யும் இரு தர்விகளையும் அக்னியில் காய்ச்சி, தர்ப்பைகளால் துடைத்து மறுபடியும் ஒரு முறை காய்ச்சி. ஜலத்தால் ப்ரோக்ஷித்து ஆஜ்ய பாத்ரத் திற்கு இடது புரத்தில் வைத்து. அந்த தர்ப்பைகளை ஜலத் தால் தொட்டு, அக்னியில் போடவேண்டும். "அதி தேநு மன்யஸ்வ" முதலிய மந்த்ரங்களால் பரிஷேசனம் செய்து, அக்னியை அலங்கரித்து, இதர தர்வியால் நான்கு முறை ப்ரதான தர்வியில் நெய்யை எடுத்துவிட்டு, "அக்னி ஸித்யர்த்தம் வ்யாஹ்ருதி ஹோமம் கரிஷ்யே" என ஸங்கல்பம் செய்து. "ஓம் பூர்ப்புவஸ்ஸுவ ஸ்வாஹா" என ஹோமம் செய்து, "ப்ரஜாபதயே இதம் நமம" என உத்தேச த்யாகம் சொல்ல வேண்டும்.

உபவாஸம் இருப்பதற்கு பதிலாகச் சொல்லப்பட்ட அயாஸ்ச ஹோமம் கரிஷ்யே" என ஸங்கல்பித்து,

முன் போல் நான்கு முறை நெய் எடுத்து, அந்த மத்ரத்தைக் கூறி ஹோமம் செய்யவேண்டும். ''அக்னயே அயஸ இதம் நமம'' எனக்கூறி, அக்னி ஸித்தித்தபின் அக்னி ஸந்தானமானால், இதுவரை ஔபாஸனம் செய்யாதிருந்த தோஷம் அகல முன் போல் நான்குமுறை நெய்யை எடுத்து வ்யாஹ்ருதிகளைக் கூறி, ஸர்வ ப்ராயஶ்சித்தம் செய்ய வேண்டும். ஔபாஸனமில்லாமல் நவக்ரஹ ஹோமம் முதலியவைகளில் அந்த ஹோமம் இல்லை.

பிறகு இந்த அக்னிமுக அல்லது முகாந்த கர்மாவில் ஆரம்பித்தது முதல் இதுவரை ஏற்பட்ட தோஷம் அகல "அனுக்ஞாதம்" முதலிய ஹோமங்களைச் செய்யவேண்டும். அனுக்ஞாதம் முதலியன 3. தனித்தனியாக வ்யாஹ்ருதி 3, சேர்த்து 1, மந்த்ர தந்த்ராதி லோப ப்ராயச்சித்தம் 1, விஷ்ணு 1, ருத்ரன் 1 ஆகிய இந்த ஹோமங்களைச் செய்து, இரண்டு தர்விகளையும் ஒரு கையிலும், ஆஜ்ய பாத்ரத்தை ஒரு கரத்திலும் வைத்துக்கொண்டு, "ஸப்ததே அக்னே" என்ற மந்த்ரம் கூறி, எல்லா நெய்யையும் ஹோமம் செய்து நெய் பாத்ரத்தை இடது புரத்தில் வைத்துப் பரிஷேசனம் செய்யவேண்டும்.

இத்ம தந்த்ரம் ஆனால் ப்ரணீதா பாத்ரத்தில் அக்ஷதையுடன் தீர்த்தம் விட்டு, கிழக்கு முகமாக மூன்று முறை அறைத்து, மார்பிற்கு நேராகத் தூக்கி, அக்னிக்கும் பாத்ர ஸாதனத்திற்காகப் போட்டிருக்கும் தர்ப்பைக்கு நடுவில் தர்ப்பம் போட்டு, அதன்மீது வைத்து, தர்ப்பைகளால் மூடி, "வருணாய நம, ஸகல ஆராதனை: ஸு அர்ச்சிதம்" என அக்ஷதையைப் போடவேண்டும். (ப்ரதான ஹோமங்கள் ஆனபின் இதை எடுத்து, கூடக் கொஞ்சம் ஜலத்தைச் சேர்த்து, நான்கு புறமும் மேலும் கீழும் ஜல அர்க்யம் அளித்து, மிகுதி ஜலத்தைத் தரையில் கவிழ்த்து, அதைத் தலையில் ப்ரோக்ஷித்துக் கொள்ள வேண்டும். இது அவப்ருத ஸ்னானம் எனப்படும்.)

ப்ரணீதைக்குப் பிறகு ப்ரும்மவரணம், ஆஜ்ய ஸம்ஸ்காரம், தர்வீ ஸம்ஸ்காரம் செய்து, இத்மத்திலுள்ள

நீண்ட ஸமித்து மூன்றுகளில் பெருமனுக இருப்பதை வடக்கு நுனியாக அக்னிக்கு மேற்கு புரத்திலும், கொஞ்சம் மெல்லியதும், தீர்க்கமுமானதைத் தென்புரத்திலும். அதை விட மெல்லியதும், சிறியதுமானதை வட புரத்திலும் வைக்கவேண்டும். இவைகளை விடச் சிறியதும் மற்ற ஸமித்துக்களைவிட கொஞ்சம் பெரியதுமான இரண்டு ஸமித்துக்களை எடுத்து, நடு பரிதியைத்தொட்டு நிற்பது போல் அக்னியில் தென்புரம் முதலில், வடபுரம் பின்னர் வைக்கவேண்டும். பரிஷேசனம் செய்து, அக்னியை அலங்கரித்து. இத்மத்தை ஆஜ்யத்தால் நனைத்து, ப்ரும்மாவிடம் உத்திரவு பெற்று அக்னியில் வைக்க வேண்டும். அது ஜ்வலிக்கும்போது, இதர தர்வியைக் கொண்டு ப்ரும்மாவை மனதால் த்யானம் செய்து, "ஸ்வாஹா" என்று கூறி, வடக்கே உள்ள இரு ஸமித்துக்களும் சேருமிடத்திலிருந்து ஆரம்பித்து, எல்லா ஸமித்துகளிலும் நெய் படும்படி, குறுக்காக ஆக்நேய மூலைவரை ஆஜ்யதாரை விடவேண்டும் "ப்ரஜாபதயே இதம் நமம" என்று கூறவேண்டும். ப்ரதான தர்வியைக் கொண்டு, தென் புரத்திலுள்ள பரிதிகளின் அடியிலிருந்து, நிருருதியிலிருந்து ஈசான திக்கு வரை முன்போல் "ஸ்வாஹா" என்று ஆஜ்யதாரையைக் குறுக்காக விடவேண்டும். "இந்த்ராய இதம் நமம."

இதன் பிறகு, ஆஜ்ய பாகம். ப்ரதான தர்வியால் "அக்னயே ஸ்வாஹா" என்று வட கிழக்கிலும். "ஸோமாய ஸ்வாஹா" என்று தென் கிழக்கிலும் இரு ஹோமங்களைச் செய்து, "அக்னய இதம் நமம," "ஸோமாய இதம் நமம" எனக் கூறவேண்டும். இவ்விரண்டும் அக்னிக்கு இரு கண்கள். நடுவில் "அக்னயே ஸ்வாஹா" என்று ஒரு ஹோமம் செய்யவேண்டும்.

இதுவே அக்னிக்கு முகமாகும். இதனுல்தான் முகாந்தம் என்றும், அக்னிஸோம ஹோமங்களால் "ஆஜ்ய பாகாந்தம்" என்றும் பெயர் உண்டானது. இதுவரை எல்லா கர்மாக்களும் பொதுவாம். இதற்கு ஆரம்பம் முதல் இதுவரை நேர்ந்த தோஷங்களுக்கு ப்ராயச்சித்தமாக "ஸர்வ ப்ராயஸ்சித்த ஹோமம்" செய்யவேண்டும். மற்றவை முன் கூறியபடி.

### (3) ஜயாதி ஹோமம்

உபநயனம், விவாஹம் முதலியவைகளில் முக்ய ஹோமங்கள் ஆன பின்பு, அது நல்ல பலனுடையதாகச் செய்ய ஜயாதி ஹோமம் செய்யவேண்டும். ஜயத்தை அளிக்கக் கூடியதால், இங்கு கூறப்படும் தேவர்களுக்கு ஜயாதிகள் என்று பெயர் தோன்றிற்று. இவர்கள் தம்தம் தொழிலால் ஸர்வேஸ்வரனை ஆராதிக்கிருர்கள். ஆலயங்களில் பரிவார தேவதைகளுக்கு பூஜை செய்வதுபோல் முக்ய தேவதைகளுக்கு ஹோமம் செய்தபின் இவர்களுக்கு ஹோமம் செய்வதும், இவர்களை ஆராதிப்பதும் முக்ய தேவர்களையே பூஜிப்பதாம். இவர்களின் வரலாறு பற்றி புராணங்கள் கூறுகின்றன. இதில் சில தேவதைகளையும், அவர்களது பத்னிகளையும் ஆராதிக்கிருேம். சில தேவதைகள் மனே வ்ருத்திக்கும், சிலர் காலத்திற்கும், சிலர் நக்ஷத்ரங்களுக்கும், சிலர் கந்தர்வர்களுக்கும் அதிஷ்டான தேவதை ஆவர். ஒரு தேவருடன் இன்னெரு தேவரைச் சேர்த்தால் அவரே தனியாக ஒருவ்ராகவும், சேர்க்கையால் வேறு ஒருவராகவும் ஆகிருர். இங்ஙனம் இங்கு பல சிறிய தேவர்களை ஹோம மூலமாக ஆராதிக்கின்ருேம், நமது வாழ்க்கைக்கு அவர்களுடைய உதவி மிக மிக இன்றியமையாதது.

சித்தம்
சித்தி
ஆகூத
ஆகூதி
விக்ஞாத
விக்ஞான
மனஸ்
ஶக்வரீ
தர்ஶ
பூர்ணமாஸ
ப்ருஹத்
ரதந்தர
ப்ரஜாபதி
அக்னி
இந்த்ரன்
யமன்
வாயு
ஸூர்யன்
சந்த்ரன்
ப்ருஹஸ்பதி
மித்ரன்
வருணன்
ஸமுத்ரம்
அன்னம்
ஸோமன்
ஸவிதா
ருத்ரன்
த்வஷ்டா

விஷ்ணு
மருத்
பித்ருக்கள்
அக்னி கந்தர்வர்
ஓஷதி அப்ஸரஸ்
ஸூர்ய கந்தர்வர்
மரீசி அப்ஸரஸ்
சந்த்ரமா கந்தர்வர்
நக்ஷத்ர அப்ஸரஸ்
யக்ஞ கந்தர்வர்
தக்ஷிணு அப்ஸரஸ்
மனஸ் கந்தர்வர்
ரிக்ஸாம அப்ஸரஸ்
வாத கந்தர்வர்
அப் அப்ஸரஸ்
புவனபதி
ம்ருத்யு கந்தர்வர்
விஶ்வ அப்ஸரஸ்
பர்ஜன்ய கந்தர்வர்
வித்யுத் அப்ஸரஸ்
ம்ருத்யு கந்தர்வர்
ப்ரஜா அப்ஸரஸ்
காம கந்தர்வர்
ஆதி அப்ஸரஸ்
புவனபதி ப்ரஹ்மா
ப்ரஜாபதி [கள்
மூன்று வ்யாஹ்ருதி-
அக்னி ஸ்விஷ்டக்ருத்.

என்பவர்களை நாடி ஸுமார் 60 ஆஜ்ய ஹோமங்கள் ஜயாதியில் நடைபெறுகின்றன.

(குறிப்பு— ருத்ர ஹோமமும் பித்ரு. ஹோமமும் செய்தபின், கையலம்பி அவர்களுக்குத் தனி கௌரவம் அளிக்க வேண்டும்).

பரிதிகளை அக்னியில் போட்டு, ஸக்கு ஸ்ராவ ஹோமம் வ்யாஹ்ருதி, அனுக்ஞாதம், முதலிய ஹோமங்கள் செய்து ஸப்ததே அக்னே என்று தர்விகளால் ஆஜ்ய பாத்ரத்திலுள்ளதை எல்லாம் ஹோமம் செய்ய வேண்டும்.

## (4) நாந்தீ ச்ராத்தம்

விவாஹம் முதலிய சுப கார்யங்கள் நடக்கும் பொழுது, ஸகல தேவதைகளையும் ஸந்தோஷப் படுத்தி, பின்பே அவைகளைச் செய்யவேண்டும். குல தேவதைகளுக்குப் பூஜை, ஸுமங்கலி ப்ரார்த்தனே, வேங்கடாசல பதி அல்லது ஸுப்ரமண்ய ஸ்வாமி ஸமாராதனைகளைச் செய்கிறோம். அதை அனுஸரித்து, ஸூத்ரக்காரர்கள், கர்மா ஆரம்பத்திலும் சில கர்மாவின் முடிவிலும் நாந்தீ ச்ராத்தம் செய்யும்படி விதிக்கிறார்கள். இதை "ப்ராம்மணன் போஜயித்வா" "ஆசிஷோ வாசயித்வா" எனக் கூறுகிறார்கள். இதற்கு "நாந்தீச்ராத்தம் செய்" என்று பொருள்.

பித்ருக்களில் பலவகை உண்டு. அதில் நாந்தீ முக என்பவர் சுபகாலத்தில் ஆராதிக்கத்தக்கவர். ஸுமங்கலி ப்ரார்த்தனே, ஸமாராதனைகளைப் போலவே இதையும் முன்னாளில் செய்யவேண்டும். இப்படி இன்றைக்கும் மலையாளத்தில் அனுஷ்டிக்கின்றனர். ச்ரத்தையுள்ள சில ஆஸ்திகர் இங்கும் அன்ன ரூப ச்ராத்தமாகவே செய்கின்றனர். இது பார்வண ச்ராத்தம் போன்றதாம். இதில் ப்ராசீனாவீதம் செய்து கொள்வதில்லை. எள்ளைத் தொடுவதில்லை. அதற்குப்பதில் சோபன அக்ஷதையை எடுத்துக்கொள்வர். ஒவ்வொரு ஸமயமும் வஸு, ருத்ர ஆதித்ய, ஸ்வரூப, பித்ரு, பிதாமஹ ப்ரபிதாமஹ என்பதற்குப் பதிலாக நாந்தீமுக எனப்படும். முதலில் ஸத்யவஸு, ஸம்க்ஞக, விச்வே தேவர் எனக் கூறவேண்டும். பித்ரு கோஷ்டிபோல் விச்வே தேவக் கூட்டத்திலும் துருருசி, ஸத்ய வஸு. புரூரவார்த்ரவ என்ற பேதம் உண்டு.

இங்கு நாந்தீ ஶ்ராத்தத்தில் ஸத்ய வஸு என்ற பெயருள்ள விஶ்வே தேவர்களே வரிக்கப்படுகின்றனர். அன்றியும் முதலில் ஸ்த்ரீ வர்க்கங்களுக்கே வரணம், பூஜை முதலியன. அதிலும், நாந்தீமுக ப்ரபிதாமஹீ, பிதாமஹீ, மாத்ருப்யோ நம: என்றும், பிறகு நாந்தீமுக ப்ரபிதாமஹ, பிதாமஹ, பித்ருப்யோ நம: என்றும் அதற்கு மாருகக் கூறவேண்டும். ஹோமத்திலும் நாந்தீமுக ப்ரபிதாமஹோ வ்ருங்க்தாம், நாந்தீமுக பிதாமஹோ வ்ருங்க்தாம், நாந்தீமுக பிதா வ்ருங்க்தாம் என்று கூறவேண்டும். மற்றவை பெரும்பாலும் பார்வண ஶ்ராத்தம் போலவே ஆகும்.

இப்படி விதிவத்தாக ஹோமம் செய்து ப்ராம்மணர்களை வரித்து, அன்னம் அளித்து ஶ்ராத்தமாகச் செய்வதே உத்தமம். இப்படிச் செய்ய ஸௌகர்யம் இல்லாவிடில் ஆம ஶ்ராத்தமாகச்செய்வது மத்யமம். அதில் விதிப்படி எல்லோரையும் வரித்து, வாழை இலையில் அரிசியை வைத்து, வாழைக்காய், தக்ஷிணை, தாம்பூலம் வேஷ்டி, முதலியவைகளை அளித்து, த்ருப்தி ஆசீர்வாதம் கூறும்படி செயயவேண்டும். இப்படியும் செய்யமுடியாதவர் ஹிரண்ய ஶ்ராத்தம் என்ற வகையில், தாராளமாகத் தக்ஷிணையைத் தரவேண்டும். அதிலும் லோபப்பட்டால் பித்ரு ப்ரஸாதத்தைப் பெறுவது எப்படி? அவர்களுக்கு ஒரு வேளை உணவுக்கு ஆகும் செலவையேனும் அளிக்காமல் கால் ரூபாய் தருவது நன்றன்று. ஹிரண்ய ரூபமாகச் செய்வது மூன்றும் பக்ஷமாம்.

---

## (5) வைதிக பரிபாஷை விளக்கம்

| | |
|---|---|
| அபிகார்ய | நெய்யை விட்டு. |
| அப்யஜ்ய | நெய்யினால் நனைத்து. |
| அப உபஸ்ப்ருஸ்ய | ஜலத்தைத் தொட்டு. |
| அனுக்ஞா | தக்ஷிணை தந்து, உத்திரவு கேட்டு. |
| அர்க்யம் | பூஜைக்காக ஜலம் தருவது. |
| அங்காரான் | கட்டைத் தணல்களை. |
| அக்ஷத | நுனி முறியாத அரிசி. |
| அந்தர்ஹித | உள்ளே இருக்கின்ற. |
| அப்யுக்ஷ்ய | ப்ரோக்ஷித்து. |
| அநுக்ரஹாண | அருள் செய்யுங்கள். |
| ஆசம்ய | அச்யுதாய நமஃ அனந்தாய நமஃ கோவிந்தாய நமஃ என்று கூறி, மும்முறை தீர்த்தத்தை கரத்தின் அடி பாகத்தால் அருந்துவது. |
| ஆஜ்ய பாத்ரம் | நெய் வைக்கும் பாத்ரம். |
| ஆவாஹனம் | இங்கு தங்கும்படி செய்வது. |
| ஆகார | அக்னியில் வாயுதிக் முதல் அக்னி திக் வரை, நிருருதி திக் முதல் ஈஶான திக் வரை, தர்வியால் குறுக்காக நெய்யினால் கோடுபோல் போடுவது. |
| ஆகாரஸமித் | அக்னியில் ஆகாசத்தை நோக்கி நிறுத்தும் ஸமித்து. |
| ஆஜ்யம் நிருப்ய | நெய்யை விட்டு. |
| ஆஸனம் | சுத்தமான உட்காரும் இடம். |
| ஆஸீன: | உட்கார்ந்துகொண்டு. |
| இத்மம் | ஸமித்துக்கட்டு. |
| இதர தர்வீ | மற்றொரு பலாச நடு இலை. |
| உத்தர | வடக்கு |
| உல்லிக்ய | பூமியைக் கீறி. |
| உபவீதி | இடது தோளில் பூணல் இருப் |
| உத்தரீயம் | மேல் வஸ்த்ரம். |

பது.

| | |
|---|---|
| உக்த்வா | சொல்லி |
| உத்தேஶ்யாகம் | உத்தேசித்த தெய்வத்திற்கே இது, என்னுடையது அல்ல என்று கூறுவது. |
| கரிஷ்யே | செய்கிறேன். |
| கந்தம் | சந்தனம். |
| க்ரஹீத்வா | எடுத்து. |
| க்ரந்தி | முடிச்சு. |
| குண்டம் | அக்னி அல்லது ஜலம் இருக்கும் இடம். |
| சரு | கஞ்சி வடிக்காத அன்னம். |
| தண்டுல | அரிசி. |
| தர்வி | பலாசத்தின் நடு இலை. |
| திலம் | எள்ளு. |
| தோயம் | ஜலம். |
| தக்ஷிணதோ நிதாய | தெற்கே வைத்து. |
| த்ருத்வா | தரித்து. |
| நிவீதி | பூணலை மாலை போல் தரித்தல். |
| நிரஸ்ய | எறிந்து. |
| பத்னி | ஹோமத்தில் ஈடுபட்ட மனைவி. |
| பவித்ரம் | தர்ப்பத்தால் செய்து, பவித்ர விரலில் அணிவது. |
| பவித்ரம் | நுனியில் முடிச்சுப்போட்டு பாத்ர ஆஜ்ய சுத்திக்காக ஏற்பட்ட தர்ப்பம். |
| பவித்ரம் விஸ்ருஜ்ய | பவித்ர முடிச்சை அவிழ்த்தெறிந்து. |
| பரிதி | அக்னிக்கு மூன்று புறமும் போடும் ஸமித். |
| பரிஸ்தரணம் | அக்னிக்கு நான்கு புறமும் போடும் தர்ப்பம். |
| பரிஷேசனம் | ஜலத்தினுல் சுற்றுவது. |
| ப்ராக்தோயம் | கிழக்கே ஜலம். |
| ப்ரதிஷ்டாப்ய | நிலை நிறுத்தி வைத்து. |
| ப்ரோக்ஷணீ பாத்ரம் | ஜலம் ப்ரோக்ஷிப்பதற்காக உள்ள பாத்ரம். |

| | |
|---|---|
| ப்ரணீதா பாத்ரம் | அக்னிக்கு வடபுறம் வைக்கும் தீர்த்த பாத்ரம். |
| பாத்யம் | கால் அலம்ப அளிக்கும் ஜலம். |
| மால்யம் | மாலே. |
| மதந்தி | கர்மாவில் பயன் படுவதற்காக ஏற்பட்ட தீர்த்த பாத்ரம். |
| யத்கிஞ்சித் | ஏதோ கொஞ்சம். |
| யதாஸ்தானம் | முன் இருந்த இடம். |
| ஸமித் | ஹோமத்திற்கேற்ற சுள்ளி. |
| ஸேசயித்வா | நனைத்து. |
| ஸ்வீக்ருத்ய | வாங்கிக் கொண்டு |
| விஸ்ருஜ்ய | அவிழ்த்து. |
| ஹிரண்யம் | தங்கம் அல்லது வெள்ளி. |

## விவாஹ வாழ்த்து

( நாற்பது ஸம்ஸ்காரங்கள் )

பார்வதீ பரமேசுவரர் போலும்
லக்ஷ்மீ நாராயணர் போலும்
பாரதீ பிரும்மா போலும்
ஸீதா ராமசந்த்ரர் போலும்
அருந்ததி வஸிஷ்டர் போலும்
அநஸூயா அத்ரி போலும்
ஸாவித்ரீ ஸத்யவான் போலும்
தமயந்தீ நளன் போலும்
ஸுகன்யா ச்யவநர் போலும்
அதிதி கஶ்யபர் போலும்

உடலும் உயிரும் போலும், உடலும் நிழலும் போலும், நகமும் சதையும் போலும், ஒற்றுமையுடன் வாழ்க! நற்கர்மாக்களைச் செய்க! நற்புத்ரரைப் பெறுக! ஆரோக்யமாக செல்வத்துடன் நீண்ட நாள் வாழ்க! ஆதர்ச தம்பதிகளாக வாழ்க! குலம் ஓங்கி வளருக! பக்தராக வாழ்க! வாழ்க!!

**“ வைதிக தர்ம வர்த்தினீ ”**

2, ஸ்டேஷன் ரோடு, ன்னை - 3 3.

லக்ஷ்மி விஜயம் பிரஸ், சென்னை - 5.